உ
கணபதி துணை

ஸ்ரீலஸ்ரீ
நல்லூர்

# ஆறுமுகநாவலர் சரித்திரம்.



ஆக்கியோன்:
வே. கனகரத்தின
உபாத்தியாயர்

உ
கணபதி துணை

ஸ்ரீலஸ்ரீ
நல்லூர்

# ஆறுமுகநாவலர்

## சரித்திரம்.

ஆக்கியோன் :
வே. கனகரத்தின
உபாத்தியாயர்

இது
யாழ்ப்பாணம்
நாவலர் நூற்றுண்டு விழாச் சபையினரால்
மறுபிரசுரமாக வெளியிடப்பட்டது.

1968

# பதிப்புரை



தமிழ் வாழச் சைவம் வாழ அவதரித்தவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமான். சமயகுரவர் நால்வருக்குப் பின் சைவமுந் தமிழும் வளர்த்த பெரியார் அவர். நல்லைநகர் ஆறுமுகநாவலர் பிறந்திலரேல் எம்மவரிற்பலர் இன்று சைவர்களா யிருப்போமோ என்பதே ஐயத்திற்கிடமான தாகும். தமிழில் தொல்காப்பியம், நன்னூல் போன்ற இலக்கண நூல்களையும், திருக்குறள் முதலிய இலக்கிய நூல்களையும், திருக்கோவை யார், பெரியபுராணம் முதலிய சைவத்திருமுறை களையும், சமயநூல்களையும், கந்தபுராணம் திரு விளையாடற்புராணம் ஆகிய புராணங்களையும், இன்னோரன்ன பிறவற்றையும் அழகுறப் பிழை யற அச்சேற்றி வெளியிட்ட பெருமை அவர்களைச் சார்ந்தது. சிறந்த உரை எழுதியவர் அவர். சைவத்திற்கு ஒரு சோதனைக்காலம் ஏற்பட் டிருந்தபோது அதற்கு நேர்ந்த இடுக்கண் நீக்கி அதனைக் காப்பாற்றியவர் அவர். வசனநடை என்றால் இஃது என்று எழுதிக் காட்டியவர் அவர். அவரை ''வசனநடை கைவந்த வல்லாளர்'' என்று சூரியநாராயண சாஸ்திரி சொன்னார். தமிழிற் குறியீடுகளைப் புகுத்தியவர் அவர். பிர சங்கம் என்றால் எத்தகையது என்று நிகழ்த்திக் காட்டியவர் அவர். அவர் ஒரு பரசமய கோளரி; அஞ்சாநெஞ்சம் படைத்த விறல்வீரர்; ஆண்

டவன் அருளிலே திளைத்து நின்று அரும்பணி ஆற்றியவர். இத்தகைய பெரும்பணி ஆற்றிய தனியொரு மனிதர் வேறு எவரேனும் உளரோ என்று உங்கள் உள்ளத்தினுள்ளே கேட்டுப் பாருங்கள். நாவலர்பெருமான் ஓர் அவதார புருஷர். அவர் செயற்கரிய செய்த பெரியார். அவர் தமது அரும்பெரும் பணிகளால், தியாகத்தால் ஒழுக்கம் நிறைந்த வாழ்க்கை மேம்பாட்டால், இன்னபிறவற்றால் சைவ அன்னையையுந் தமிழன்னையையுங் காப்பாற்றிய வீரப் புதல்வர். ஈழத்தில் மட்டுமல்ல, இந்தியாவிலுந் தமிழ்நாட்டுக்கு அவர் ஆற்றிய பணிகள் தமிழக மக்களால் என்றும் மறக்கற்பாலனவல்ல. ''தானம் எல்லாவற்றுள்ளுந் தக்க வித்தியா தானமே மேல்'' என்று எடுத்துச் சொல்லிச் சொல்லித் தமிழ்நாட்டில் சைவப் பாடசாலைகளைத் தாபனஞ்செய்ய மக்களைத் தூண்டினர். அக்காலத்தில் சிதம்பரத்தில் அவர் நிறுவிய சைவப்பிரகாச வித்தியாசாலையே அங்கு பல்லாண்டுகளின்பின் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் எழுதற்கு வழிகாட்டியாக அமைந்தது எனலாம். சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலையில், தில்லைவாழ் அந்தணச் சிறுர்களும் பிறருங் கடுகளவாயினுந் திரவியச் செலவின்றிக் கல்விகற்க வைத்த பணி மட்டுமன்றி வழிவகையில்லாத மாணவர்க்கு உணவு உடை உதவியுங் கற்கவைத்தார். இது மட்டுமா? யாழ்ப்பாண வித்தியாசாலைக் கீந்த பொருளினும் மிகப்பெரும் பொருளைச் சிதம்பர வித்தியாசாலைக்கு அளித்தார்.

அதற்கு முன்னதாகவே, சென்னைமாநகரிற் சிறந்த அச்சுக்கூடத்தைத் தாபனஞ் செய்தார். அங்கு பல்லாண்டுகளாக வதிந்து தமிழ்ப் பணியாற்றினர். நாவலர் பதிப்பென்முலே எவரும் ஆவல் கொள்ளக்கூடிய முறையில் தமிழ் நூல்களையுஞ் சைவ நூல்களையும் பிரசுரித்துதவினர். தமிழ் நாடெங்குஞ் சைவப் பிரசங்கமாரி பொழிந்து சைவப் பயிரை வளர்த்தார். சைவ ஆதீனங்களையுஞ் சைவப்பணியுந் தமிழ்ப்பணியுஞ் செய்யத் தூண்டினர். நாவலர் என்ற பெயரால் தமிழுலகம் முழுதும் அறியப்பெற்றவர் அவரே யாமாறு அவர்தம் பணிகள் விளங்கின. அவர் தமிழ்நாட்டுக்குச் செய்த பணியைப் பேராசிரியர் திரு. S. சோமசுந்தர பாரதியார், M. A., B. L. அவர்கள் பின்வருமாறு வெண்ணெய்போலத் திரட்டித் தொகுத்துச் சொல்லுவாராயினர் :

''யாழ்ப்பாண நல்லூர் ஆறுமுக நாவலரவர்கள் ஒரு அவதார புருஷர். இடையிருட் கடைக்காலத்தில் விடியுமுன் விசும்பில் விளங்கும் வெள்ளி போலத் தமிழகத்தில் தளருஞ் சைவமுந் தமிழுந் தழைய, அவ்விரண்டிற்கும் புத்துயிர் வழங்கப் பிறந்த வள்ளலாவர். முன்னே பலகாலங்களிலுந் தமிழகத்திலிருந்து தான்பெற்ற சிலசிறு நன்மைகளை வட்டியுடன் பெருக்கி, ஒருகாலத்து ஒருமுகமாகப் பழங்கடனைத் தீர்த்து என்றுந் தீர்க்கொணுவாறு தமிழகத்தை ஈழநாட்டுக்குக்கடமைப்படுத்தியபேருபகாரி நாவலர் என்றல், அது மிகையாகாது''

என்றார் அவர். நாவலர்பெருமான் பெருமை பேசிற் பெருநீளமாகும்.

இத்தகைய பெருமான் சைவத்திற்கும் தமிழுக்கும் அரண்கோலும் நோக்கமாக ஆற்றிய பணிகளுள் வண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலையை நிறுவியமையும் ஒன்றாகும். இச் சைவ வித்தியாசாலை நூறு ஆண்டுகளாகச் சைவத் தமிழ் மாணவர்களுக்குப் பெரும்பயன் அளித்து வருகின்றது. இக் கழகத்தின் நூற்றாண்டு விழாவைத் தக்கபடி கொண்டாட வேண்டுமென்னுங் குறிக்கோளோடு 26–4–53இற் கழக ஆசிரியர்களில் இருவராகிய திரு. சி. சீவரத்தினம், திரு. வ. கந்தசாமி ஆகியவர்களின் பெரு முயற்சி காரணமாக ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலை நூற்றாண்டு விழாச்சபை நிறுவப்பெற்றது. அக் காலத்தில் இதன் தலைவராய் இருந்தவர் திரு. சு. நடேசபிள்ளையவர்களாவர். செயலாளர்கள்: வழக்கறிஞர்கள் திரு. M. R. காராளசிங்கம் அவர்களும் திரு. வ. சிவசுப்பிரமணியமவர்களுமாவர்.

இச்சபை நாவலர்பெருமானின் நோக்கங்களை நிறைவேற்றும்பொருட்டு, நாவலர் நூல்களை அச்சிட்டு வெளியிடுதல், நாவலர் பெருமானுக்குச் சிலையெடுத்தல், நாவலர் நூல்நிலையம், சைவத் தமிழ் உயர்தரக் கல்லூரி ஆகியவற்றை நிறுவுதல் முதலிய பணிகளைச் செய்யத் தீர்மானித்தது. முதற்கண் மூலதனமாக ரூபா 1450 நிதி திரட்டியது. அந்நிதி கொண்டே முதலில்

இந்நூலை வெளியிடுதலாகிய பணியை மேற்கொண்டுள்ளோம். இஃது இப்பணியை நிறைவேற்றுவதற்கு மட்டுமன்றி மேலும் பல பணிகளைச் செய்வதற்கு உதவவல்லது என்னும் நம்பிக்கையோடேயே இதனைச் செய்கின்றோம்.

நாவலர் பெருமானுடைய சரித்திரத்தைக் கூறும் நூல்கள் மூன்றுள. அவற்றுள் ஒன்றாகிய இந்நூல் நாவலர்பெருமானுடைய காலத்தவரும் அவருடைய சீடருமாகிய திரு. வே. கனகரத்தின உபாத்தியாயர் அவர்களால் எழுதப்பெற்று 1882ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. இதற்குப்பின் எழுதப்பெற்ற நூல்களிற் காணப்படாத பல விடயங்களை இதிற் காணலாம். இந்நூல் நிகழ்ச்சிகளை இனிய எளிய நடையிற் சுருக்கமாகவுந் தெளிவாகவுஞ் சுவை பொருந்தக் கூறுவது. இந்நூலின் பிரதிகள் இப்போது பெறுதற்கு அரியவாயினமையின், இதனை அச்சிட்டு வெளியிடுதல் நாவலர் பெருமானது சரித்திரத்தை மக்கள் உள்ளவாறு அறிதற்கு உதவும் பெரும் பணியாகும் என்ற உணர்ச்சி அறிஞர் பலரின் உள்ளத்தில் எழுவதாயிற்று. சிறப்பு வாய்ந்த இந்நூலில் இரண்டு பிரதிகளே இப்போது கிடைத்துள்ளன. அப் பிரதிகள்தாமும் ஆங்காங்கு இதழொடிந்தும், ஓரஞ் சிதைந்தும், புழு உழுதும் பழுதடைந்து கிடக்கின்றன. இன்னுஞ் சில நாட்கள் கழியின், ''இந்நூலொன்று இருந்தது'' என்னும் எண்ணந்தானும் நம்மவரிடத்து இல்லாதொழியுமே என்ற அச்சத்தாலும், பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள் அளித்த பேரூக்கத்தாலும், நாவலர் பெருமானுடைய பெயரால் இதனை இப்போதே செய்தல்

வேண்டும் எனக் கிளர்ந்த ஆர்வத்தாலும் இவ்வரிய நூலைப் பாதுகாப்பதற்காக இப்பொழுது வெளியிடத் துணிந்தோம்.

இந்நூலை வெளியிடுவதற்கு ஆதாரமான பிரதிகளைச் சுன்னுகம் திரு. கு. முத்துக்குமார சுவாமி, B. A. அவர்களும் கொழும்பு முதலியார் குல. சபாநாதன் அவர்களும் தந்துதவினுர்கள். இந்நூலை அச்சிடுதற்கேற்ற முறையிற் கையெழுத்துப் பிரதிசெய்தும், அச்சிடுங்காலத்து எழுத்துப் பிழை முதலியனவற்றைத் திருத்தியும் உதவினுர்கள் சைவப்புலவர் திரு. இ. செல்லத்துரை அவர்கள். இதனைச் சுன்னுகம், திருமகள் அழுத்தகத்தார் மிகச் சுருங்கிய காலத்திற் சிறந்த முறையில் அழகாக அச்சிட்டு உதவினுர்கள். இவர்களனைவர்க்கும் எமது நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேம்.

நாவலர் பெருமான் ஆற்றிய அளப்பரும் பணியை மறவாத சைவசீலர்கள் எம் சபையின் இன்றியமையாமையை நன்குணர்ந்து இந்நூலை வாங்குவார்களாக. அவ்வாறு வாங்குவதன்மூலம் நாவலர் பெருமானின் ஞாபகார்த்தமாக யாம் ஆற்றவிருக்கும் பணிகளுக்கு வேண்டிய ஆதரவும் ஊக்கமும் அளிப்பவர்கள் ஆவார்கள் என்பதை ஞாபகப்படுத்த விரும்புகின்றேம். நாவலர் புகழ் நானிலத்து என்றும் நின்று ஓங்குக.

இங்ஙனம்

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலை நூற்றுண்டுவிழாச் சபையினர்.

யாழ்ப்பாணம்,
1–1–1968.

உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்

ஸ்ரீலஸ்ரீ
நல்லூர்

# ஆறுமுகநாவலர் சரித்திரம்.

இது
யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை
வேதவனப்பிள்ளை குமாரர்
மாணிக்கவாசகபிள்ளை
என வழங்கும்
கனகரத்தின
உபாத்தியாயரால்
கத்தியரூபமாகச் செய்து,

ஷெ௸ூர்
சைவப்பிரகாச சமாசீயருளொருவராகிய
ம. ா. ா. ஸ்ரீ
வை. ஆறுமுகபிள்ளை
கேட்டுக்கொண்டபடி

யாழ்ப்பாணம்:
சைவப்பிரகாசயந்திரசாலையில்
அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

சித்திரபானு௵ ஐப்பசி௴
1882.

உ

சிவமயம்

# பொருளடக்கம்

உ
சிவமயம்

# சிறப்புக் கவிகள்

## சென்னபட்டணம்
## ம. ா. ா. ஸ்ரீ
## சி. வை. தாமோதரம்பிள்ளை
## சொல்லியது.

### வெண்பா

நல்லைவள ராறுமுக நாவலர்ச ரித்திரத்தை
எல்லவரு மேத்த வினிதுரைத்தான் — சொல்லும்
பொருளுஞ் சுவைதெவிட்ட வேதவன பூப
னருளுங் கனகரத்ன னுய்ந்து.

## சைவ உதயபானு பத்திராதிபர்
## ம. ா. ா. ஸ்ரீ
## சு. சரவணமுத்துப்பிள்ளை
## சொல்லியது.

### ஆசிரிய விருத்தம்

திருமேவு நல்லையெனு நகரிற் றோன்றிச்
சிவாகமமே யாதியநூற் பரவை யுண்டே
அருமேவு முண்மைநிலை தனைப்போ தித்த
வாறுமுக நாவலர்கோன் சரித மாகு
மருமேவு நவநீதந் திரட்டி யச்சில்
வயங்குவித்தான் வண்ணைநகர் வாழுஞ் சீலன்
உருமேவு சற்சனர்மா ணிக்க மாகி
யொளிர்கனக ரத்தினப்பே ருபாத்தி தானே.

உ
சிவமயம்

# சிறப்புப் பாயிரம்

சுன்னுகம்
ம.ா. ா. ஸ்ரீ
அ. குமாரசுவாமிப்பிள்ளை
இயற்றியது.

விருத்தம்

பூங்காவி னிழலரசு புரியுமக பதியுலகம்
போல வாய்ந்து
நீங்காத வளம்படைத்த பலநகரந் தன்மாட்டு
நிலவக் காட்டி
யோங்கார முதற்பொருளுக் குரியதல மோரிரண்டை
யுடைய தாகி
யீங்காரு நனிவியக்கத் தகும்புகழ்சேர்ந் திருப்பதுநல்
லீழ நாடு.

இந்நாடு தனக்குமுக மெனக்கவினுற் றிலங்கியயாழ்ப்
பாணத் தென்றுஞ்
சொன்னுடு புலவர்தமக் குறைவிடமா யெவ்வளமுந்
தொக்க சீர்த்தி
மன்னுடு நாகரிக மான்மியநல் லூரினிடை
வாழ்வு கொண்ட
மின்னுடுங் கார்காத்த வேளாளர் திருக்குலத்தின்
மீது மாதோ.

இத்தாலத் துயர்பாண்டி மழவர்குடி யின்மேலா
ரியத்து மிக்க
சித்தாந்த சிகாமணியே முதனூலும் பலவுரையுந்
திராவி டத்தில்

வித்தாரம் பெறச்சித்திக் கோருரையு முள்ளபடி
விளங்கிச் செய்த
கர்த்தாஞா னப்பிரகா சானுபூதி மான்மரபு
கவின வன்றே.

வந்துதயஞ் செய்தகந்த வேளியற்று மாதவமோர்
வடிவு கொண்டு
செந்திருவை யனையமனைச் சிவகாமி யம்மையெனுஞ்
செல்வ நங்கை
யுந்திவயி னமைந்துதித்த தெனவுலகி லுதித்தருளி
யொடுங்க லில்லாச்
சந்திரதுல் லியனுகி நற்கலையில் வளர்வுற்றுத்
தயங்கு நாளில்.

அங்கிலதே சிகமொழியும் வடமொழியும் பொருளறியு
மளவிற் கற்றுச்
சங்கையிலா விலக்கியமு மிலக்கணமுந் தலைகண்டு
தருக்க மோதித்
துங்கமிகும் புராணமிதி காசமுத லாயபல
தொன்னூ லோடு
பங்கமிலாச் சித்தாந்த சாத்திரபாண் டித்தியமும்
படைத்த சீலன்.

தேக்குசிவா கமப்பொருளைப் பலவிதலோ கிகசமுகந்
தேரும் வண்ணம்
வாக்குபடுத் துவமமையப் போதித்தும் நீதிவழி
மருவி வந்த
ஆக்கமது கொண்டுவித்தி யாலயங்க டாபித்து
மளவில் லாத
ஊக்கமிகுந் தார்மிகனுய்ப் புண்ணியமு மெய்ப்புகழு
மொருங்கு பெற்றேன்.

காவியசாத் திரவிநோதங் கல்வியினைக் கிரமமுறக்
கற்போர்க் கீதல்
யாவருக்கும் பயன்பெறப்பன் னூலுரைக ளியற்றிவெளிப்
படுத்த லீசன்

சேவடியர்ச் சனைபுரித றிருத்தொண்டர் தமக்கன்பு
செய்த லின்ன
பாவமிலாச் செயல்களினுற் றன்கால முழுதேகும்
படியே வாழ்ந்தோன்.

பொருள்வலியுஞ் சொல்வலியும் பெரிதமைய வாக்கியக்கோல்
பூட்டி யிம்மைப்
பொருள்வரவு தனைக்கருதிச் சிலமூட ரனுசரிக்கும்
பொய்ம்மை மார்க்கம்
இருள்வலிபோற் றபமுருக்கிச் சிவசமய வொளிவிரிக்கு
மிவன்போ லுண்மை
தெருள்வலியோர் தாங்காலத் திரயத்து மில்லையெனச்
சிறப்பு மிக்கோன்.

தத்துவஞா னம்புணர்ந்தோ ஞறுமுக நாவலனுந்
தனது நாமம்
எத்திசையுஞ் செலநின்ருே னிவனுடைய சரித்திரமா
மினிமை சான்ற
புத்தமிர்தந் தனைத்திரட்டிப் புத்தகமா வரைந்தீந்து
புகழே பெற்ருன்
கொத்தலரும் பொழில்வண்ணைக் கோநகரின் மிசைவாழ்வு
கொண்டோ னன்றே.

உத்தமநல் லிலக்கியலக் கணந்தேர்ந்தோன் பரம்பரைசே
ருபாத்தி யாயன்
சத்தியவா சகவேத வனநாதன் றவவலியிற்
றந்த பாலன்
அத்தகைய நாவலர்கோன் சீடருண்மா ணிக்கமென
வறையப் பட்டோன்
புத்திமிகுந் தொளிர்கனக ரத்தினநா மகசுகுண
பூபன் ருனே.

———

உ

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்

# விநாயக வணக்கம்

## குறள் வெண்பா

மாதங் கனையிரத மாற்றியியைத் தேற்றியளி
மாதங் கனைமனநீ வாழ்த்து.

# குரு வணக்கம்

## விருத்தம்

சீரேறு மீழத்தி யாழ்ப்பாண நல்லையாச்
செறிதரணி மீதுதித்துத்
திகழுநில நிலவுபல கலைகுலவு மலைகட
றெவிட்டியிட மொண்டெழுந்து
பாரேறு பரமதப் பாந்தள்க ளொடுங்கிடப்
பலகண் டனங்களென்னப்
பகர்தடித் தொடுமுருமு வீசிப்ர சங்கமாம்
பயில்சோனை மழைபொழிந்து
பேரேறு சைவப் பெரும்பயிர் வளர்த்திடும்
பெட்புடைக் காரையடியார்
பெயராத மலவிருள்க ளருகவிரி பரிதியைப்
பிறைசூடி யேபரனென
நாரேற வழிபட்டு நாமெலா முய்யவரு
ணங்குருவை நாவலப்பேர்
நவில்யோக ரூடியாப் பெற்றபெரு மானையடி
நளினமலர் போற்றிசெய்வாம்.

---

# முகவுரை

சைவசித்தாந்த சமயாசாரியர்களாகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர், திருநாவுக்கரசு நாயனர், சுந்தரமூர்த்தி நாயனர், மாணிக்கவாசக சுவாமிகள் என்னும் நால்வரும் தமிழ் நாட்டிலே திருவவதாரஞ் செய்து, தலந்தோறுஞ் சென்று, அநாதி முத்த சித்துருவாகிய சிவபெருமானே முழுமுதற் கடவுளென்று வேத சிவாகமங்களிலே உணர்த்தப்படும் உண்மையைப் பதிகங்களாகப் பாடி, பௌத்தர், சமணர் முதலிய புறச் சமயத்தவர்களோடு சமயவாதஞ் செய்து அவர்கள் முன்னிலையிலே செய்த பலவற்புதங்களாலும் சைவசமயமே மெய்ச்சமய மென்றும், சிவபெருமானே பரம பதியென்றுந் தாபித்தார்கள்.

அதன் பின்னர், சந்தானசாரியர்களாகிய மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியர், மறைஞானசம்பந்த சிவாசாரியர், உமாபதி சிவாசாரியர் என்னும் நால்வரும், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபாவிருபது, சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலிய சைவ சித்தாந்த சாத்திரங்களை அருளிச்செய்து, சிவபெருமானே பரமபதி என்றும், சரியை கிரியை யோகம் ஞான மென்னும் நான்குமே ஆன்மாக்களுக்கு முத்தியை அடையப்பண்ணும் மார்க்க

மென்றும், எல்லாச் சமயங்களையுங் கடந்து நின்றது சித்தாந்த சைவ மென்றுஞ் சாதித்தார்கள்.

அதன் பின்னர், நமச்சிவாயதேசிகர், தாயுமானசுவாமிகள், பட்டணத்துச்சுவாமிகள், சிவஞானமுனிவர், மாசிலாமணிதேசிகர், ஞானப்பிரகாசமுனிவர், குமரகுருபரசுவாமிகள் முதலிய மகான்கள், சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகம் என்கின்ற பஞ்ச கிருத்தியங்களையுஞ் செய்யுங் கருத்தாவாகிய சிவபெருமானே சர்வலோகைக நாயகரென்றும், அவரை வழிபடும் மார்க்கமே முத்திமார்க்க மென்றும், அவரை வழிபடும் அடியார்களே மெய்யடியார்களென்றும் தெளிந்து, அவருடைய பெருமையைத் தாந்தாஞ் செய்த நூல்களாலும் உரைகளாலும் உணர்த்தி, தங்கள் சீஷர்களுக்கும் போதித்தார்கள்.

அதன் பின்னர், திருக்கேதீச்சரம், திருக்கோணசலம் என்னும் தேவாரம் பெற்ற தலங்களிரண்டையும் இரண்டு கண்களாகவுடைய இலங்காபுரியிலே திருவவதாரஞ் செய்த **ஆறுமுக நாவலர்** என்னும் பெருமான், சிறு பிராயத்திலேயே அநாதிமலமுத்தபதியாகிய சிவபெருமானே பிறப்பிறப்பில்லாத கடவுளென்றும், பாற்கடலுட் பிறந்த மீன்கள் அப் பாலை உண்ணுது வேறு பலவற்றை உண்டல் போல, சைவ சமயிகள், மெய்ந்நூல்களாகிய தங்கள் சைவ நூல்களைக் கல்லாது கற்பனு சமயமாகிய பரமத நூல்களைக் கற்று, தங்கள் வாணுளை வீணுளாகக்

கழிக்கின்ருர்களென்றும், அவர்களுக்கு மெய்யறி வூட்டல் வேண்டுமென்றும், முச்சங்கங்களாலும் வளர்க்கப்பட்ட தமிழ்ப் பாஷையை முன்போல வளர்த்தல் வேண்டுமென்றும் தெளிந்து, பர சமயிகளோடு சமய வாதங்கள் செய்து அவர்களை வென்ருர். பரசமயத்திலே புகுந்தவர்களுக்கும், புகுதற்கு மனம் பதிந்தவர்களுக்குஞ் சுவசமயத் தைப் போதித்து அவர்கள் மனசைத் திருப்பினுர். அநேக நூல்களுக்குப் புத்துரை செய்தும், ஏட்டுப் பிரதிகளிலுள்ள அநேக நூல்களைப் பரிசோதித் தும், சைவ சமயத்தை வளர்த்தற்கு வேண்டிய நூல்களைப் புதிதாகச் செய்தும் வெளிப்படுத்தி னுர். அம்மட்டோ! ''சைவநிந்தனை மறைகணிந் தனை பொரு மனம்'' என்ற திருவாக்குக்கேற்ப வேத நிந்தகர், சிவாகம நிந்தகர், சிவனடியார் நிந்தகர், குருநிந்தகர் என்னு மிவர்களோடு பெரும்பகையெடுத்தார். அதனுல், கோபமுடை யவர் என்று சிலர் அவரைச் சொன்னுர்கள். அம்மட்டோ, பசுக்களைப் பதியென்று சொல்லு கிறவர்களோடும், பசு நூல்களைப் பதிவாக் கென்று கொள்ளுகிறவர்களோடும் எதிர்த்தார். இப் பெருந்தகைமையினை யுடையராகிய எம் பெருமானுக்குச் சைவ சமயிகளாகிய நாமெல் லாம் செயற்பாலனவாகிய கைம்மாறு யாது!

இப்பெருஞ் சிறப்பினராகிய எம்பெருமான் கைம்மாறு கருதாது நமக்கெல்லாஞ் செய்த செயற்கருஞ் செய்கைகளையும் அவருடைய புகழை யும் சரித்திரமாக வெழுதக் கருதி, நம்மையு மொருபொருட்படுத்தித் தமது சந்நிதானத்

திலே நிற்கு மொருவனுகச் சேர்த்த நமது குரு மூர்த்தியினுடைய திருவடிகளைத் துதித்து, அவரது திருவருளினுலே அதனைப் பெரும்பான்மையும் இயற் சொற்களும், சிறுபான்மை ஆவசியகமாகிய வட சொற்களும் பிரயோகிக்கப்படும் கத்திய ரூபமாகச் செய்து அச்சிற் பதிப்பித்தேம்.

இது நமக்கெல்லாம் மெய்யறிவூட்டிய பரமாசாரியருடைய சரித்திரமாதலால், சைவ சமயிகளாகிய யாவரும் இதனைச் சிரத்தையோடும் வாங்கி வாசிக்கக் கடவர்கள்.

வே. க.

திருச்சிற்றம்பலம்.

நம் பெருமானவர்கள் சிவபதமடைந் தருளியதைக் குறித்துப் பற்பல புலவர்கள் செய்த செய்யுட்களை இச் சரித்திரத்தின் இறுதியிற் சேர்க்கத்தந்த நன்றியின் பொருட்டு நாம் அப் புலவர்களுக்கு வந்தனஞ் சொல்லுகின்றேம்.

வே. க.

# குருபூசைத் தினம்

வெண்பா

கார்த்திகைமா தத்துமகங் காசினிக்குச் சைவநிலை
சேர்த்திப் பரசமயஞ் சேதித்துச் — சீர்த்திமிக
மேவுதமிழ் தந்தகந்த வேணல்லூ ராறுமுக
நாவலர்வீ டுற்றதிரு நாள்.

# அவையடக்கம்

கட்டளைக்கலித்துறை

புல்லிய கீடமும் பூவினைச் சேர்ந்து பொருந்துதலால்
நல்லவர் தந்தலை மீதே நணியது நாவலர்கோன்
எல்லையில் கீர்த்தி யிசைப்பது வாதலி னென்னுரையும்
வல்லவர் சங்கமுஞ் சென்றே வழங்கிடும் வையகத்தே.

# வாழி

வெண்பா

வாழிபசு நீடுழி வாழிநிக மாகமங்கள்
வாழிமறை யோர்சைவர் வான்செங்கோல் — வாழிமனர்
வாழிதொண்ட ரக்கமணி வாழிநீ றைந்தெழுத்து
வாழி பெருநா வலம்.

---



ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள்

உ
கணபதிதுணை
திருச்சிற்றம்பலம்

# ஆறுமுகநாவலர் சரித்திரம்

## விநாயக வணக்கம்

சீரியமெய்ச் சிவாகமமுந் திருவெண் ணீறுந்
திருத்தொண்டர் செயலுஞ்செந் தமிழுஞ் செய்ய
வாரியமும் வளரவணி நல்லை வந்த
வாறுமுக நாவலனு மறிஞர் கோமான்
பேரியலுஞ் சரிதமெலாம் பிறழா வண்ணம்
பெருமையினே ரவைகடொறும் பிறங்க நாட்டக்
காரியலு மிபமுகத்துக் கருணைப் புத்தேள்
கடிமலர்த்தா மரைத்தாள்கள் கருத்துள் வைப்பாம்.

குரவே நம:

ஈழமண்டலத்திலே, யாழ்ப்பாணத்திலே, நல்லூரிலே, கார்காத்த வேளாள வருணத்திலே, பாண்டிமழவர் குடியிலே, * ஞானப்பிரகாச சுவாமிகள் மரபிலே, தமிழ்நாட்டிலுள்ள சைவ

* பறங்கிக்காரர் இலங்கையின் வடபகுதியாகிய இவ் வியாழ்ப்பாணத்தைப் பிடித்து அரசியற்று நாளிலே, அப் பறங்கிக்காரரின் அதிகாரிக்கு உணவின்பொருட்டு இவ் வியாழ்ப்பாணத்திலிருந்த ஒவ்வொரு குடிகளும், தங்கள் தங்களுடைய முறையிலே, ஒவ்வொரு கொழுத்த பசுக் கொடுக்க வேண்டியிருந்தது. ஞானப்பிரகாச சுவாமிக

சமயிகள் சைவ சமயமே சற்சமயமென்றுணர்ந்து அதன்வழி ஒழுகி உய்யும்பொருட்டு, **கந்தப்பிள்ளை** என்பவருக்கு அவருடைய பத்தினியாராகிய **சிவகாமியாருடைய** அருமைத் திருவயிற்றிலே கலியப்தம் 4924க்கும் சாலிவாகன சகாப்தம் 1745க்கும் சமமாகிய சித்திரபானு வருடம் மார்கழிமீ 5உ புதன்கிழமை இரவு அவிட்ட நக்ஷத்திரமும், பூர்வபக்கப் பஞ்சமி திதியும், வச்சிரயோகமும், பாலவகரணமுங் கூடிய சுபதினத்திலே, சிங்கலக்கினத்திலே ஒரு **சற்புத்திரர்** திருவவதாரஞ் செய்தார். (Decr. 1822.)

| | | | |
|---|---|---|---|
| | சனி | வி | |
| சந் | உதய லக்கினக் கிரக நிலை | | கே |
| ரா | | | ல |
| செ - சு ஆ - பு | | | |

திருவவதாரஞ் செய்த அப் பிள்ளைக்கு ஆறுமுகப்பிள்ளை என்னும் நாமகரணமும், அன்னப்பிராசனம், சௌளம் முதலிய கருமங்களும் உரிய காலங்களிலே, மிகுந்த சிறப்போடு

---

ளுடைய முறை வந்தபொழுது, "நீசன் கொன்று சாப்பிடும் பொருட்டு, பசுவை நான் கொடுப்பேனாயின், அப்பசுவைக் கொல்லுதலாகிய பாவம் எனக்கும் வந்தெய்துமே" என்று பயந்து, அப்பயங் காரணமாக ஒருவருக்குந் தெரிவியாது இராத்திரி காலத்திலே புறப்பட்டு இத்தேசத்தை விட்டுச் சிதம்பரத்துக்குச் சென்றனர். அந்த ஸ்தலத்திலேயுள்ள சிவ தீர்த்தமாகிய சிவகங்கையிலே ஸ்நானம்பண்ணி, மிளகும் சுத்த ஜலமுஞ் சாப்பிட்டுக்

செய்யப்பட்டன. அவர் ஐந்தாம் வயசிலே வித்தி யாரம்பஞ் செய்யப்பெற்று, சிறுவர்களுக்குக் கல்வி கற்பித்தலில் வல்லராய், நல்லூரிலிருந்த சுப்பிர மணிய உபாத்தியாயரிடத்திலே கல்வி கற்பா ராயினர்.

இவரிடத்திலே வாக்குண்டாம் முதலிய நீதி நூல்களையும், நிகண்டு, எண்சுவடி முதலிய மற் றைய நூல்களையுங் கற்குங் காலத்திற்றானே தமிழ்க் கல்வியை நிரம்பக் கற்றல்வேண்டும் என்னும் ஆசை அவர் உள்ளத்திற் குடிகொண்டு கிடந்தது. இவைகளைக் கற்றபின்னர் நைடதம், பாரதம், கந்தபுராணம் முதலிய நூல்களுக்கும், மறைசை அந்தாதி முதலிய அந்தாதிகளுக்கும் பொருள் கேட்கத் தொடங்கினர். கேட்ட செய் யுள்களின் பொருளைத் தம் மனத்திற் சிந்தித் தல், மனனம்பண்ணுதல் மாத்திரத்தினில்லாது, தம்மோடு கூடக் கல்வி கற்கும் பிள்ளைகளுக்கும்

---

கொண்டு, நாற்பத்தைந்துநாள் சிவகாமி அம்மை சந்நிதா னத்திலே அவ்வம்மையாரை உபாசித்துக்கொண்டிருந் தார். பின்பு, சிவகாமி அம்மையுடைய திருவருளைப் பெற்றுக்கொண்டு உத்தரதேசத்துள்ள கௌடத்திற்குச் சென்றார். அங்கே ஒரு பிராமண சந்நியாசி தினந்தோறுஞ் சில பிள்ளைகளுக்குத் தர்க்கம், வியாகரணம், மீமாஞ்சை முதலியவைகளைப் படிப்பித்து, வேதாத்தியயனமுஞ் சொல்லிவைப்பார். ஞானப்பிரகாசசுவாமிகள் நியம மாகப் போய், தூரத்திலே நின்று அவற்றைக் கேட்டுத் தம் மனத்தில் அமைத்துக்கொள்ளுவார். சூத்திரரோடு பேசுதல் பிராமண சந்நியாசிகளுக்கு விலக்காதலால், அச் சந்நியாசி இவருடன் ஒன்றும் பேசாது விடுவார். இப்படி யிருக்குங் காலத்திலே, ஒருநாள் அச்சந்நியாசியானவர் தம் மாணக்கரைப் பரீக்ஷித்தார். பரீக்ஷித்தபொழுது, அவர்கள் அவர் வினவிய வினக்களுக்கு ஏற்ற விடை

அவைகளை விளங்கப்படுத்துவார். விளங்காத பிள்ளைகளுக்கு, பின்னரும் அவர்கள் அவைகளை விளங்கிக்கொள்ளும் வரையும் விளங்கப்படுத்து வார். படிக்க மனமில்லாத பிள்ளைகளைத் தனி யிட த்திற் கூட்டிக்கொண்டுபோய் இரவும் பகலும் கவனமாய்ப் படித்தல்வேண்டு மென்றும், படி யாதவன் புகழ், பொருள், பூசை முதலியவை களைப் பெறமாட்டான் என்றும், இவ்வாறு பல புத்திகளை அவர்களுக்குச் சொல்லுவார். இதனைக் கண்ட யாவரும் அதிசயித்து, இப்பிள்ளை, தான் பிறந்த குடும்பத்தை விளக்க வந்தது என்பதிற் சிறிதுஞ் சந்தேகமில்லை என்று தங்களுக்குள்ளே பேசிக் கொள்வார்கள். இதனைக் கேள்வியுற்ற அவரது மூத்த தமையனாராகிய **தியாகராசப் பிள்ளை** ''வளரும் பயிரை முளையிலே தெரியும்''

---

சொல்லாது நின்றார்கள். அப்பொழுது, நியமமாகத் தம் மாணுக்கரினும் மிக்க கவனத்தோடு தாஞ் சொல்லியவற் றைக் கேட்டிருந்தவராகிய இவர், அவைகளைத் தம் மனத்திலே பதித்து வைத்திருப்பாரென்று தம்முள்ளே சந்நியாசியானவர் நினைத்து, இவரை அழைத்து, ''நீ இங்குவந்த நாள் முதலாகக் கேட்டவைகளைச் சொல்லு'' என்றார். உடனே சுவாமிகள் அவர்களெல்லாரும் அதிச யிக்கும்படி தாம் கேட்டு அமைத்தவைகளைச் சொல்லினர். அப்பொழுது அப்பிராமண சந்நியாசி அவரைப் பார்த்து, ''**நீயே பிராமணன்**'' என்று சொல்லி, அவருக்குத் தர்க்கம், வியாகரணம் முதலிய நூல்களைக் கிரமமாகப் படிப்பித்து, ''நீ, தமிழ் நாட்டிற் சென்று அங்குள்ளவர் களுக்குப் பிரயோசனப்படுபவனுயிரு'' என்று கட்டளை யிட்டார். சுவாமிகள் அக்கட்டளையைச் சிரசின்மேல் வகித்து, அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, தெட் சணத்துக்கு வந்து, திருவண்ணுமலை ஆதீனத்திலே காவி பெற்று அங்கேயிருக்குங் காலத்திலே, சித்தாந்த நூல்கள்

என்னும் பழமொழியை நினைந்து அவர்மீது அதிப்பிரீதி வைத்து, அவரை அதிகமாய்ப் படிப் பிக்கவேண்டுமென்னும் ஆசை மிகுதியினாலே, வேலாயுத முதலியாரிடத்திலே கொண்டுபோய், நன்றாகப் படிப்பிக்கும்படி அவரிடத்தில் ஒப்பித் தார். அம்முதலியார், தம் பிள்ளையாகிய சம்பந்த முதலியாருடன் இப்பிள்ளையாகிய ஆறுமுகநாவல ரையும் கூடவைத்து அவர்களுக்கு இலக்கணவிலக் கியங்களைப் படிப்பிப்பாராயினார். அப்போது அவ ருக்கு வயசு 12 ஆயிற்று.

இப் பன்னிரண்டாம் வயசாகிய ஜயவரு ஆவணிமீ இங்கிலிஷ் கற்கும்படி (Rev. Peter Percival) * பீற்றர் பார்சிவல் பாதிரியாருடைய அங்கில வித்தியாசாலைக்கு அனுப்பப்பட்டார்.

---

வாசித்தலில் இடையறு முயற்சி கொண்டிருந்தார். அதன் பின்பு அந்த ஸ்தலத்தைவிட்டு நீங்கிச் சிதம்பரத்துக்கு வந்தார். அங்கேயிருக்குங் காலத்திலே, சம்ஸ்கிருதத்தி லுள்ள பௌஷ்கரம், சிவஞானபோதம் முதலிய நூல் களுக்கு வியாக்கியானங்கள் செய்தும் சித்தாந்தசிகாமணி, பிரமாணதீபிகை, பிராசாததீபிகை, சிவயோகசாரம் முதலிய நூல்களைச் சம்ஸ்கிருதத்திலே செய்தும், சிவஞான சித்தியாருக்கோருரை செய்தும், பின்னர் அவைகளைத் திருவண்ணமலை ஆதீனத்திலே ஒப்பித்தார். சிதம்பரத் திலே, '' ஞானப்பிரகாசம் '' எனப் பெயரிய திருக்குளம் அவராலேயே அமைக்கப்பட்டது. பின்னர் அந்த ஸ்தலத்தி லேயே சுவாமி தரிசனஞ் செய்துகொண்டிருந்து சிவபத மடைந்தார்.

* இவர் நெடுங்காலமாய் யாழ்ப்பாணத்திலே பாதிரி யாயிருந்து, அநேக அங்கில வித்தியாசாலைகளையும், தமிழ் வித்தியாசாலைகளையும் தாபித்தவர். பின்பு, பாதிரி உத்தியோகத்தைப் பரித்தியாகஞ் செய்துவிட்டு, சென்ன பட்டணம் போய், அங்கேயுள்ள சென்னைக் கலாசாலை வித்தியாசாலையிலே (Madras Presidency College)

இங்கே இங்கிலிஷ் கற்குங் காலத்திலே, தமிழ்க் கல்வியை இன்னும் அதிகமாய்க் கற்கவேண்டும் என்னும் ஆசை மிகுதியினலே *சேனுதிராய முதலியாரிடத்திலும் § சரவணமுத்துப் புலவரிடத்திலும் நன்னூற்காண்டிகையுரை, விருத்தியுரை, இரகுவம்சம், திருவள்ளுவர், திருக்கோவையார், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய நூல்களைக் கற்பாராயினர்.

இவ்வாருகத் தமிழ், இங்கிலிஷ் என்னும் இரு பாஷைகளையும் அதிக கவனத்துடன் கற்குங் காலத்திலே, இங்கிலிஷ் கற்பிக்கிறவர்கள் மிக இலகுவாகப் பிள்ளைகளுக்கு விளங்கப்படுத்துதற்கும், ஒருபாத்தியாயர் விளங்கப்படுத்துவது போலவே மற்றை உபாத்தியாயர்களும் விளங்கப்படுத்துதற்கும் ஏது, அப்பாஷை நூல்கள் கத்தியரூபமாயிருத்தல் என்றும், தமிழ்ப் படிப்பிக்கிறவர்கள் அவ்வாறு செய்யாமைக்கு ஏது, இப்பாஷை நூல்கள் பெரும்பாலும் பத்தியரூபமாயே

---

பண்டிதராயிருந்தவர். 'தினவர்த்தமானி' யென்னும் பத்திரிகையைத் தொடங்கி நடத்தினவர்.

* இவர் இருபாலையிலுள்ள முதலிவேளாளராகிய நெல்லைநாத முதலியாரின் புத்திரர். இலக்கண இலக்கியங்களில் மிக்க பாண்டித்தியமுடையவர். பெருஞ் செல்வர். எவர்களாலும் நன்கு மதிக்கற்பாடுடையவர்.

§ இவர் மாதகல் மனப்புலி முதலியாரின் புத்திரர். சேனுதிராய முதலியாரின் மாணுக்கர்களுள் ஒருவர். நெடுங் காலமாகக் களத்தூர் வேதகிரி முதலியாரால் இடையினத்திற்கு இனமுண்டு என்று எழுதப்பட்டவைகளுக்கு எதிராக உதயதாரகை என்னும் பத்திரிகையில் எழுதிக்கொண்டிருந்தவர்.

யன்றிக் கத்திய ரூபமா யில்லாமையே என்றும், கத்திய ரூபமாயுள்ள அப்புத்தகங்கள்தானும் சுத்தச் செந்தமிழ் நடையுடையனவல்லவென்றும் அறிந்துகொண்டார்.

இனிக் கோயில்களிலே கந்தபுராணம், திருவிளையாடற்புராணம், பெரியபுராணம், திருவாதவூரர் புராணம் முதலிய புராணங்கள் வருஷந்தோறும் படிக்கப்படுகின்றனவே, அவைகளுக்குப் பொருள் சொல்லுவோர் எப்படிச் சொல்லுகிறார்கள் என்பதை அறியும்பொருட்டு, அவ்வக் கோயில்களுக்குப் போய்வருவார். இப்படிப் போயிருந்து அவைகளைக் கேட்குங் காலத்திலே, ஆட்சேபத்துக்கு இடமாயுள்ளவைகளைக் குறித்து வைத்திருந்து, படிப்பு முடிந்தவுடன் அவர்களிடத்தே வினவுவார். அவ் வினக்களுக்கு, அவர்களாற் கொடுக்கப்பட்ட விடைகள் தக்கவையாயின், ஒத்துக்கொள்வர். தகாதவையாயின் தாம் அப்பொருள்களை அவர்களுக்குவிளக்குவார். அவருடைய கையிலே புத்தகங்கள் எப்பொழுதுங் காணப்படும்.

இங்கிலிஷ் பள்ளிக்கூடத்திலேமேல்வகுப்புக்கு வந்தவுடன், பார்சிவல் இவருடைய இருபாஷைத் திறமையையுங் கண்டு, கீழ்வகுப்புக்கு இங்கிலிஷ் படிப்பிக்கவும், மேல்வகுப்புக்களுக்குத் தமிழ்படிப்பிக்கவும் இவரை வேண்டிக்கொண்டார். அவ் வேண்டுகோளுக்கிசைந்து வேதனம் பெறுது சில காலம் படிப்பித்து வந்தார். அப்போது அவருக்கு வயசு 19 ஆயிற்று.

அக்காலத்திலே அப்பள்ளிக்கூடத்திலே கற்ற மாணுக்கருள் அவரே, இங்கிலிஷ் தமிழ் என்னும் இரு பாஷைகளையும் நன்கு கற்றவர் என்னும் பெயரும், இங்கிலிஷைத் தமிழ்ப்படுத்துவதினும், தமிழை இங்கிலிசுப்படுத்துவதினும், சுத்தச் செந்தமிழ் பேசுவதினும், எழுதுவதினும், அவருக்குச் சமமாக ஒருவருமில்லை யென்னும் பெயரும், யாழ்ப்பாணம் முழுதும் பரம்பிற்று. இதனைக் கண்டுங் கேட்டும் அறிந்தவராகிய பார்சிவல் பைபிலைத் திருத்துவதற்காக, தமக்குத் **தமிழ்ப் பண்டிதராக** அவரை நியோகித்தார்.

தமிழ்ப் பண்டிதராகவிருந்து பைபிலைத் திருத்திக்கொண்டு வருங்காலத்திலே, பரமதமாகிய கிறிஸ்து மதம் பரம்பச் சுவமதமாகிய சைவங் குன்றுதலைக் கண்டார். கண்டமாத்திரத்தே சைவ சாத்திரம் படித்தலில் முன்னையிலும் பின்னர் அதிக கவனத்தைச் செலுத்திவந்தார். சைவ சித்தாந்த சாத்திரங்களாகிய சிவஞானபோதம், சிவஞானசித்தியார், திருக்களிற்றுப்படியார், திருவருட்பயன், நெஞ்சுவிடுதூது, கொடிக்கவி முதலிய நூல்களைச் சந்தேக விபரீதமறக் கற்றுணர்ந்தார். இம்மாத்திரத்தினில்லாது, ஆன்மாக்கள் பொருட்டுச் சிவபெருமான் அருளிச் செய்த முதனூல்கள் **வேதசிவாகமங்கள்** என்றும், அவைகளுள் வேதம் பொதுநூலென்றும், ஆகமம் சிறப்புநூலென்றும் அறிந்தார். அறியவே, சிறப்பு நூலாகிய **சிவாகமத்தைக்** கற்றற்குச் சம்ஸ்கிருதம் ஆவசியகம் வேண்டியிருந்ததனுல் அதனைப் படிக்க முயன்று, சிறிது நாள்களுக்குள் சம்ஸ்கிருத

நூல்களை வாசிக்கவும், அவற்றின் பொருளை ஐயந் திரிபற விளங்கவுங் கற்றுக்கொண்டார். இவ் வளவினில்லாது வேதசிவாகமாதி சமஸ்த சாத் திரங்களின் உண்மைப் பொருள் தமிழ் வேத மாகிய தேவார திருவாசகங்களே என்றுணர்ந்து அவற்றையும் சந்தேக விபரீதமறக் கற்றுணர்ந் தார். உணரவே, தமிழ், சம்ஸ்கிருதம், இங்கிலிஷ் என்னும் முப்பாஷைகளுந் தெரிந்தவர் எனவும், சைவசித்தாந்த சாத்திரங்களில் மிக்க பாண்டித் தியமுடையவரெனவும் உலகத்திலே விளங்கினார். விளங்கவே, எல்லாரும் அவரை நன்கு மதித்து மரியாதை செய்யவும், தங்களுக்குத் தெரியாத கல்வி விஷயம் சமய விஷயங்களைக் கேட்டறியவும் தலைப்பட்டார்கள். தம்மிடத்து வரும்போதெல் லாம் அவர்களுக்கு, கடவுளுண்டு, ஆன்மாவுண்டு, புண்ணியபாவமுண்டு, சுவர்க்க நரகமுண்டு, மறு பிறப்புண்டு என்னும் இவைகளை யாரும் நம்பல் வேண்டுமென்றும், மேலே சொல்லப்பட்டவை களைப் பற்றி விசேஷமாகப் பேசும் நூல்கள், சதா சிவ மூர்த்தியுடைய ஈசான முகத்தினின்றும் தோன்றிய காமிகம் முதல் வாதுளம் இறுதியாகிய மூலாகமங்கள் இருபத்தெட்டும், அவைகளின் வழி நூல்களாகிய நாரசிங்கம் முதல் விசுவான்மகம் இறுதியாகிய உபாகமங்கள் இருநூற்றேழும், சார்பு நூல்களாகிய தத்துவப்பிரகாசிகை முதல் இரத்தினத்திரயம் இறுதியாகிய அட்டப்பிரகரண மும், சிவாகமத்தின் ஞானகாண்டப் பொருளைச் சுருக்கி இனிது விளக்கும் தமிழ்ச் சைவ சித்தாந்த சாத்திரங்களுமேயென்றுஞ் சொல்லுவார். சொல் லவே, சனங்கள் தாங்கள் முன்னொரு காலத்துங்

கேட்டறியாத நூல்களைப்பற்றி இவர் சொல்லுகின்றார்; இந்நூல்களை எங்கே கற்றார்? எவரிடத்திற் கற்றார்? எப்போது கற்றார்? என்று ஆச்சரியங் கொண்டு இப்படிப்பட்ட கல்வியறிவொழுக்கமுடையஇவரிடத்தன்றோ நாமெல்லாம் அன்புவைத்தல் வேண்டுமென்று கருதி அன்புவைத்து, இவைகளை அறிந்த பிறரொருவர் இத்தேசத்தில்லாமையால் இவரே சிறந்தவரென்றுந் தெரிந்துகொண்டார்கள். அப்போது அவருக்கு வயசு 22 ஆயிற்று.

இப்படியிருக்குங் காலத்திலே, கருவி நூல்களையும் சமய நூல்களையும் சில பிள்ளைகளுக்குக் கற்பித்தால் அவர்களால் உலகத்திற்குப் பயன் பெரிது சித்திக்குமென்றெண்ணி, பிள்ளைகளைச் சேர்த்து, விசுவாவசு ௵ தைமீ முதலாக (1846) இராத்திரியிலுங் காலையிலும் வேதனம் பெறாது கற்பிக்கத் தொடங்கினார். அப்போது அவரிடத்திலே கல்விகற்கும்படி சேர்ந்த பிள்ளைகள் * **சதாசிவப்பிள்ளை**, சுவாமிநாதையர், நடராசையர், விசுவநாதையர், ஆறுமுகப்பிள்ளை, கந்தசுவாமிப்பிள்ளை, ஆறுமுகச்செட்டியார் முதலானவர்களே.

---

* இவர் நல்லூரிலுள்ள கனகசபாபதிப்பிள்ளையுடைய குமாரர். தமிழ்ப் படிக்கவந்த காலந்தொடுத்து அவரை விட்டு ஒரு காலத்தும் பிரியாதிருந்தவர். அவரைப் போலவே இவரும் நைட்டிகப் பிரமசாரி. அவருடைய முயற்சிகள் எல்லாவற்றிற்கும் மிக உதவியாயிருந்தவர். அநேக புத்தகங்களை அவர் முன்னிலையிலும், தாமாகவும் பரிசோதித்துப் பதிப்பித்தவர். அவர் சபாநாயகருடைய குஞ்சிதபாத நிழலையடைந்தபின், அவராலே தாபிக்கப்பட்ட சைவப்பிரகாச வித்தியாசாலைகளுக்கு அதிபதியாயிருக்கின்றார்.

பைபில் திருத்தி அச்சிற் பதிப்பிக்கும்படி வெகு திரவியத்தையும், நானுவித பாஷைகளி லுள்ள புத்தகங்களையும், இத்தேசத்துக்கு முன் னனுப்பிய விவிலிய சங்கத்தார் (Bible Society) அதிசீக்கிரத்தில் அவ்வாறு செய்யும்படி பார்சிவல் முதலிய பாதிரிமார்களுக்குக் கடிதங்கள் எழுதி ஞர்கள். அவைகளை வாசித்த பாதிரிமார் ஒருங்கு திரண்டு, சென்னபட்டணம் போதற்கும், பைபில் அச்சிடுவித்தற்கும் பார்சிவலைத் தெரிவு செய் தார்கள். அவர்களுடைய சம்மதப்படி பார்சிவல் தமது தமிழ்ப்பண்டிதராகிய ஆறுமுகநாவலரையுங் கூட்டிக்கொண்டு சென்னைக்குப் போயினர்.

சென்னபட்டணம் போய்ச் சேர்ந்தவுடன் பைபில் அச்சிடுவித்தற்காகப் பார்சிவல் வந்தா ரென்று கேள்விப்பட்ட அங்குள்ள மிசியோனரி மார் (Missionaries) அவரிடத்திலே வந்து, யாழ்ப் பாணத்திலே தமிழ்க் கல்வி குறைவாதலானும், செந்தமிழ் பேசுவோர் அரியர் ஆதலானும், யாழ்ப் பாணத்துத் தமிழ்ப் பண்டிதரால் திருத்தப்பட்ட பைபில் இங்குள்ள பண்டிதர் முன்னிலையில் வாசிக்கப்பட்டு அவர்கள் பிழையில்லையென்றும், வசனநடை நன்ருயிருக்கின்றதென்றும் சொல் வார்களாயின், அச்சிற் பதிப்பிக்கலாமென்றும், அப்படிச் செய்யாது அச்சிற் பதிப்பிக்கின் நாங்க ளதனை அங்கீகரிக்கமாட்டோம் என்றும் சொல்லிப் போயினர்.

இவைகளைக் கேட்ட மாத்திரத்தே பார்சிவல் மனம் தைரியவீனப்பட்டுத் தமது பண்டிதரை நோக்கி, ''நாங்கள் அச்சிற் பதிப்பித்துக்கொண்டு

சீக்கிரம் போய்விடலாமென்று வர, இங்கே தடையுண்டுபட்டிருக்கின்றதே; நாங்கள் அவர்கள் சொல்லுக்குச் சம்மதித்து இங்குள்ள பண்டிதர் முன்னிலையில் வாசித்தால், அவர்கள் பிழையென்று சொல்லுகிறார்களோ, சரியென்று சொல்லுகிறார்களோ தெரியவில்லையே: பிழையென்றாவது வசன நடை நன்றாயிருக்கவில்லையென்றாவது சொல்வார்களாயின், நமக்கெல்லாம் அவமானம் நேரிடுமே'' என்று சொல்லினர். பண்டிதர் அதற்கு உத்தரமாக, ''நாங்கள் திருத்திய பைபிலில் ஒரு பிழையுமில்லை; வசனநடையும் நன்றாயிருக்கின்றது. அப்படியிருக்க, அவர்கள் குற்றமேற்றுவார்களாயின், அதிலே ஒரு குற்றமுமில்லையென்று பலபிரமாணங்கொண்டு நாங்கள் தாபித்து எங்களாலே திருத்தப்பட்டபடியே அச்சிடுவிப்போம். ஆதலால், அவர்கள் கருத்துக்கிசைந்து யாழ்ப்பாணத்தினும் செந்தமிழ் உண்டெனத் தாபித்தலே தகுதி'' என்று சொன்னார். அவர்கள் கேள்விக்கு இவர்கள் உடன்பட்டபோது அவர்கள் அதனைப் பார்வையிடும்படி, அக்காலத்திலே சென்னபட்டணத்தில் சிறந்த வித்துவானாயிருந்த மகாலிங்கையரை ஏற்படுத்தினார்கள். மகாலிங்கையர் பைபில் முற்றும் வாசித்து, அதிலே பிழையில்லையென்றும், வசன நடை நன்றாயிருக்கின்றதென்றும், இந்தப் பிரகாரம் அச்சிடுதலே தகுதியென்றும் அவர்களுக்குச் சொல்லி, யாழ்ப்பாணத்துத் தமிழையும் நன்கு பாராட்டி வியந்தனர். இந்தப் பிரகாரம், பாதிரியாரும் பண்டிதரும் யாழ்ப்பாணத்திலும் செந்தமிழ் உண்டெனச் சாதித்து, பைபிலை அச்சிடுவித்துக்கொண்டு விரைவில் யாழ்ப்பாணத்துக்கு வந்தார்கள். இது நிற்க.

அவருடன் கூட இங்கிலிஷ் கற்றவர்களுள் ஒருவராகிய மு. தில்லைநாதபிள்ளை, சைவ சமயத்தின் உண்மையை அறியாதபடியினுலே, கிறிஸ்து மதத்திலே பிரவேசித்தற்கு உடன்பட்டு, இன்ன கிழமை ஞானஸ்நானம் பெறுவேன் என்று பார்சிவலுக்கு வாக்குக் கொடுத்திருந்தனர். அப்பொழுது இவர் பார்சிவலுடைய அங்கிலவித்தியாசாலை உபாத்தியாயர்களுள் ஒருவர். இவரன்றி, சு. சின்னப்பாபிள்ளையும் அம்மதப் பிரவேசஞ் செய்தற்குடன்பட்டு இன்ன கிழமை ஞானஸ்நானம் பெறுவேனென்று சொல்லியிருந்தார். இப்படி நிகழுநாளிலே, இவ்விருவருடைய சமாசாரங்களைக் கேள்வியுற்ற ஆறுமுகநாவலர் இவர்களை நேரே கண்டு, தனியிடத்திற்கு அழைத்துக் கொண்டு போய், தாமிது செய்தால் தம்மைத் தமிழ்ப்பண்டிதராக நியோகித்த பார்சிவல் உத்தியோகத்தினின்றும் நீக்குவாரென்ருவது, தாம் பெறும் வேதனத்தை இழந்துவிட நேரிடும் என்ருவது, சற்றேனும் சிந்தியாதவராய், சைவசமயத்தினது உயர்வையும் கிறிஸ்து சமயத்தினது இழிவையும் நன்ருக அவர்களுக்குப் புலப்படப் போதித்து, அவர்களால் நியமிக்கப்பட்ட நாளில் ஞானஸ்நானம் பெருது அவர்களைத் தடுத்து வைத்தார்.

பாதிரியாருக்கு இன்ன கிழமை ஞானஸ்நானம் பெறுவோமென்று வாக்குக் கொடுத்த இருவரும், அற்றைத் தினத்திற் பெருமையால் பாதிரியார் அவர்களை நோக்கி, ''நீங்கள் எனக்கு வாக்குத் தந்த பிரகாரங் குறித்த நாளில் ஏன்

ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளவில்லை'' என்று கேட்டார். அதற்கு அவர்கள், ''உமது சமயக் கோட்பாட்டில் எங்களுக்குச் சந்தேகமிருந்தமை யால், இன்னும் நன்ருக ஆராய்ந்து தெளிந்து கொண்டு ஞானஸ்நானம் பெறலாமென்று விடுத் தோம்'' என்ருர்கள். அவர் ''உங்கள் சந்தேகங் களை நிவிர்த்திபண்ணிக்கொண்டு சீக்கிரத்திலே ஞானஸ்நானம் பெறுங்கள்'' என்று அவர்களுக்குச் சொன்னுர்.

ஆறுமுகநாவலரால் இவ்விருவரும் சைவசமயத் துண்மை போதிக்கப்பெற்று, ஞானஸ்நானம் பெருமற் றடுக்கப்பட்டார்களென்பதைப் பிறி தொரு வழியால் அறிந்த பார்சிவல், மறுநாட் காலை ஆறுமுகநாவலர் தமது உத்தியோகத்தை நடத்தும் பொருட்டுப் பாதிரியார் வீட்டிலே பிர வேசித்தவுடன், பாதிரியார் கோபக் குறிப்புத் தோன்ற அவரை நோக்கி, ''மற்றை ஞாயிற்றுக் கிழமை ஞானஸ்நானம் பெறுவேம் என்று எனக்கு வாக்குக் கொடுத்த தில்லைநாதபிள்ளை, சின்னப்பா பிள்ளை என்னுமிருவரையும், அது செய்யாதுவிடும் படி தாங்கள் தடுத்தது என்னை.'' என்று கேட்க, அவர் அதற்குத்தரமாக, ''எனக்குத் தெரிந்த சைவசமயத்துண்மையை நான் அவர்களுக்குப் போதிக்கவேண்டியது என் கடமையே'' என்ருர். ''தாங்கள் என்னிடத்தில் உத்தியோகமாகவிருந்து கொண்டு இப்படிச் செய்தல் தகுதியல்லவே'' என்ருர். அப்பொழுது அவர் ''உம்மிடத்திலே நான் பண்டிதராயிருத்தல் உமக்குப் பிரியமில்லை யாயின், இப்பொழுதே நீங்கிவிடுகிறேன்'' என்று

சொல்லிக்கொண்டு, தலைப்பாகையை எடுத்தார். எடுக்கவே, பார்சிவல், தம்மைக் கிறிஸ்து மதத்தைப் பரப்புதற்பொருட்டு இங்கனுப்பிய உவெஸ்லியன் கொன்வறன்சின் (Wesleyan Conference) அபிப்பிராயத்துக்கும், தமது கருத்திற்கும், கிறிஸ்து மதம் பரம்புதற்கும், அவர் முழு விரோதியாயினும், தமக்கு அவரைப்போல ஒரு தமிழ்ப் பண்டிதரைச் சம்பாதித்துக்கொள்ளுதல் மிக வரிதாயிருந்தமை பற்றி, அவர் கையைப் பிடித்துக் கொண்டு, ''தாங்கள் இதுகாரியத்தில் ஆயாசப்பட்டு என்னைவிட்டு நீங்கும்படி புறப்படுதல் தகுதியன்று; பின் இவ்வுண்மையை அறியும் பொருட்டுத் தங்களை நான் கேட்டேனேயன்றிப் பிறிதொன்றற்கன்று'' என்று சொல்லித் தடுத்தார். பின்னர் ஒருவாறு உடன்பட்டுத் தமது கடமைகளை நடத்திவந்தார். ஞானஸ்நானம் பெறுமையினல் தில்லைநாதபிள்ளை உபாத்தியாயர் உத்தியோகத்தினின்றும் நீக்கப்பட்டார். சின்னப்பாபிள்ளை உபாத்தியாயர் உத்தியோகத்தைப் பெறுதுவிட்டு வியாபார முயற்சியில் ஊக்கங்கொண்டு கொழும்புக்குப் போயினர். அங்கே, அக்காலத்திலே சிவில் உத்தியோகத்தருக்குள் அதி கௌரவமாயிருந்த மோர்க்கன் துரையினுடைய சகாயத்தினலே சுப்பிரீங் கோட்டுத் தரணி உத்தியோகத்தைப் பெற்று யாழ்ப்பாணம் வந்து, அதிசமர்த்தரெனப் பெயர் பெற்றுச் சிறப்புற்று வாழ்ந்து, சிலகாலஞ் சென்றபின் இறந்தனர்.

யாழ்ப்பாணத்தில் உள்ள சிவாலய குகாலயங்களுள்ளே ஆதியிலே புவனேகவாகு என்னும் மந்திரியினுலே சிவாகமப் பிரகாரம் கட்டப்பட்டுப் பிரதிட்டை செய்யப்பெற்றுப் பூசை திருவிழாக்கள் நடத்தப்பட்டதும், அதன்பின்னர், பறங்கிக்காரர் காலத்திலே இடிக்கப்பட்டதும், பின் இற்றைக்கு ஏறக்குறைய நூறு வருஷங்களுக்கு முன்னே ஒருவரால் கட்டப்பட்டு, பூசை திருவிழாக்கள் செய்யப்பட்டு வருவதுமாகிய நல்லூர்க் கந்தசுவாமி கோயிலைப்பற்றி, அக்கோயில் அதிகாரியாகிய இரகுநாத மாப்பாணருக்கு, பிலவங்கஞு ஆடிமீ ஒரு மகோற்சவ தினத்திலே, அக்கோயில் சிவாகமத்துக்கு விரோதமாகக் கட்டப்பட்டிருத்தல் தகாதென்றும், மூலமூர்த்தி முதலியவை வேலாயுதங்களாய் இருத்தல் தகாதென்றும், சிவதீக்ஷையில்லாத பிராமணர் பூசை செய்தல் தகாதென்றும் போதித்தார். அப்போதனைக்கு அக்கோயிலதிகாரி உடன்பட்டிலர்.

இவை நிகழ்ந்தபின் அநேகர் சற்சமயமாகிய சைவ சமயத்தினின்றுங் கிறிஸ்து சமயத்திலே பிரவேசித்தற்குக் காரணம் சைவசமயத் துண்மையை அறியாமையினு லென்றறிந்தார். இனி, சைவசமயக் கோயில்களிலே பிரசங்க மண்டபம் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டுமென்றும், பிரசங்கம் செய்தற்குக் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த பிரசாரகர்கள் காலத்திற்குக் காலம் நியோகிக்கப்படல் வேண்டுமென்றும் நமது சைவாகமங்களிலே சொல்லப்பட்

டிருக்கின்றதே; பிரசங்கமண்டபமாவது பிரசாரகர்களை நியோகிப்பாராவது பிரசாரகர்களாவது தற்காலத்திலே காணப்படவில்லையே!! அதுபற்றியன்றே, நமது சைவசமயிகள் சைவசமயத்தினது உண்மையையும், சமயக் கிரமங்களையும் அறியாதவர்களாய் இருக்கின்றார்கள். ஆதலால், நஞ் சைவசமயத்துண்மையை அவர்களுக்குப் போதித்தலின் மிக்க புண்ணியம் பிறிதொன்றும் இல்லை என்றும், அன்னிய தேசத்தார் இத் தேசத்திலே வந்து, தமது சமயத்தை நம்மவர்களுக்குப் போதித்து, அவர்களைத் தம் மதத்தவர்களாக்குகின்றார்களே, நம்முடைய சமயம் நம்மவர்களுக்குப் போதிக்கப்பட்டால் அவர்கள் பரமதப் பிரவேசஞ் செய்ய மாட்டார்களே என்றும் தெளிந்து, சைவப் பிரசங்கஞ் செய்தற்கு முயன்று, வண்ணார்பண்ணையிலே, மகௌதாரிய மகாப்பிரபுவாகிய வைத்தியலிங்கச் செட்டியாராற் கட்டுவிக்கப்பட்ட வைத்தீசுவரன் கோயில் வசந்த மண்டபத்திலே, கலியப்தம் 4,949-க்கும், சாலிவாகன சகாப்தம் 1,770-க்கும் சமமாகிய பிலவங்கஞு மார்கழிமீ 18உ (31st Decr. 1847) சுக்கிர வாரமும், சுவாதி நக்ஷத்திரமும் கூடிய சுபதினத்திலே, சைவமென்னும் செஞ்சாலி வளரும்பொருட்டுப் பிரசங்கம் என்னும் மழையைப் பொழிந்தார். அந்நாள் முதலாக ஒவ்வொரு சுக்கிர வாரத் திராத்திரியினும் நியமமாகச் சைவப் பிரசங்கஞ் செய்து வந்தார். அவரோ டொருசாலை மாணுக்கராகிய நல்லூர் வெங்கடாசலையர் குமாரர் கார்த்திகேயையரும் அவருடைய கேள்விப்படி பிரசங்கஞ் செய்து வந்தார். அப்பிரசங்கத்துக்கு

வேண்டிய முயற்சிகளைச் சதாசிவப்பிள்ளையும், தில்லைநாதபிள்ளையும், பிறருஞ் செய்து வந்தார்கள். அப்பிரசங்கம் வெகுசனங்களுக்குப் பயன்பட்டமை சத்தியம் என்பது பின்வருஞ் சரித்திரத்தினுல் உணரப்படும். அப்போது அவருக்கு வயசு 25 ஆயிற்று.

பிரசங்கந் தொடங்கியபின், அவ் வூடைமீ வண்ணார்பண்ணைச் சிவன்கோயிலிலே, பல சனங்களெதிரே, நல்லூர்க் கந்தசுவாமி கோயிற் குற்றங்களை எடுத்துச் சாத்திரப் பிரமாணங் காட்டி, அவைகளைக் கண்டித்துப் பிரசங்கஞ் செய்தார். கோயிலார்கள், சுப்பிரமணிய தூஷணஞ் செய்கின்ருர் என்று அவர்மீது குற்றமேற்றி, புறம்பே அவரைத் தூஷித்தார்கள்.

சுவமத ஸ்தாபனத்திற்கும் பரமத கண்டனத்துக்கும் அத்தியாவசியகம் வேண்டற்பாலனவாகிய விஷயங்களைப் பிரசங்கித்துவரும் நாளிலே, பாதிரிமாருட் சிலர் பார்சிவலிடத்திலே போய், ''நாங்கள் இத்தேசத்துக்கு வந்த காலத்திலாவது அதற்கு முன்ளுவது ஒரு காலத்தினுஞ் சைவ சமயத்தவர்களுக்குள்ளே இல்லாத காரியத்தை, உம்மிடத்திலே தமிழ்ப்பண்டிதராயிருப்பவர் இப்போது செய்கின்ருர்; நாங்கள் இத் தேசத்துக்கு வந்த காரணம் எங்களுடைய சமயத்தைப் பரப்புதற்கேயன்றிப் பிறிதொன்றற்கன்று. அப்படியிருக்க, எங்கள் மதம் பொய்யென்றும், அதைப் பரம்பவிடமாட்டேன் என்றும் சபதங் கூறி, சொல்லாலுஞ் செயலாலுங் காட்டுகிற இவரை உமக்குத் தமிழ்ப்பண்டிதராக வைத்

திருத்தல் தகாது'' என்றார்கள். அவர்கள் சொல்லியவைகள் இவர் கருத்துக்கும் ஒப்ப முடிந்தமையால், ஒருநாள் பண்டிதரை நோக்கி, ''தாங்கள் சிவன் கோயிலிலே வெள்ளிக்கிழமைதோறுஞ் சைவப்பிரசங்கஞ் செய்கின்றீர்களாம். இடையிடையே நமது சமயத்துக்கு மாறாகவும் பேசுகின்றீர்களாம். அஃதென்னை?'' என்று அறியாதார் போலக் கேட்டனர். அதற்குத்தரமாகப் பண்டிதர், ''என் கடமைகளை நிறைவேற்றுதலில் ஏதுந் தவறுண்டா, அப்படியானாற் சொல்லுங்கள்'' என்றார். பாதிரியார் ஒன்றும் பேசாது மௌனமாயிருந்துவிட்டு எழுந்துபோய், தம்மிடத்திலே முறையீடு செய்த பாதிரிமாருக்கு இப்படிப்பட்ட ஒருவரைத் தகுந்த சம்பளங் கொடுத்தாலும் பெற்றுக்கொள்ளுதல் அரிதாதலால், இது காரியத்தில் தாம் யாதும் பேசாது விடுதலே தகுதியென்று சொல்லி, அவர்களைப் போகும்படி செய்துவிட்டார்.

புறச்சமயிகளுக்குள்ளேயன்றி, நமது சைவ சமயிகளுக்குள்ளே நெடுங்காலமில்லாதிருந்த பிரசங்கத்தை ஆறுமுகநாவலர் செய்யத் தொடங்கிய பின்னர் பிராமணர்கள், வித்துவான்கள், பிரபுக்கள் என்னும் எத்திறத்தாரும் இவர் செய்யும் பிரசங்கங்கள் அவர்கள் செய்யும் பிரசங்கங்களினும் கடினமான விஷயங்களாயும், பல நூல்களின் சாரங்களாயும், இம்மை மறுமைப் பயன்களைத் தருவனவாயும், காதுக்கினியனவாயும், கேட்போருக்கு இனிது விளங்குவனவாயும் இருத்தலைக் கேள்வியுற்று, ஆச்சரியமடைந்து, அதி

தூரத்தினின்றும் மிக்க ஊக்கத்தோடும் அன்போடும் ஒவ்வொரு கிழமையினும் வருவாராயினர்கள்.

சைவசமயம் இப்படிப்பட்டதென்றும், சைவசமயிகள் வழிபடுங் கடவுள் இத்தன்மை யுடையரென்றும், சைவசமயிகள் அத்தியாவசியகந் தரிக்கவேண்டிய சின்னங்கள் இவை யென்றும், சைவசமயிகளுக்கு வேண்டும் இலக்ஷணங்கள் இவையென்றும் பிரசங்கித்தலே தகுதியெனக் கண்டு, அவ்விஷயங்களை அதிப் பிரபல பிரமாணங்களோடும் எடுத்துப் பிரசங்கித்தார். அக்காலத்திலே செய்த சில பிரசங்கங்களாவன: கடவுள் வாழ்த்து, உருத்திராக்ஷதாரணம், சிவபத்தி, வேதாகமங்கள், திருவிழா, சிவலிங்கோபாசனை, யாக்கை நிலையாமை, சிவதீக்ஷை, மகளிரொழுக்கம், இகபரசிலாக்கியங்கள், தருமம், செய்ந்நன்றியறிதல், பிக்ஷையிடுதல், கல்வி கற்பித்தல், கடவுளொருவருண்டெனல், பசுக்காத்தல், அறிவொழுக்கங்களிற் சிறந்தோரைத் தழுவி நடத்தல், பிரபஞ்சமாயை, பேதைமை, கொல்லாமை, நீதசிக்ஷை, வியபிசாரம், கள்ளுண்ணல், சிவத்திரவியங் கவர்தல் முதலியவைகளே.

இவ்வளவு முக்கியமான விஷயங்களை அதிப் பிரபல நியாயங்கொண்டு சைவசமயிகளுக்குப் புலப்படும்படி பிரசங்கித்தபின்பு, மாமிச போசனஞ் செய்த அநேகர், அது செய்யாது விட்டார்கள். மதுபானம் பண்ணின அநேகர், அது பண்ணாது விட்டார்கள். தீக்ஷை பெற்றுஞ்

சந்தியாவந்தனஞ் செய்யாத அநேகர், மீட்டுந் தீக்ஷை பெற்றுக் கிரமமாய்ச் சந்தியாவந்தனஞ் செய்துவந்தார்கள். உருத்திராக்ஷந் தரியாது, ஆலய தரிசனஞ் செய்த அநேகர், உருத்திராக்ஷ தாரிகளாய்க் கோயில்களுக்குப் போய்த் தரிசனஞ் செய்யத் தொடங்கினார்கள். தரிசனகாலங்களிலே ஒரு சிறிதுந் தோத்திரஞ் செய்யாத அநேகர், தோத்திரத் திரட்டுக்களை நெட்டுருப்பண்ணிக் கோயில்களிலே தோத்திரம்பண்ணத் தொடங்கினார்கள். ஒருகாலத்தினும் ஆலய தரிசனஞ் செய்யாத அநேகர், சோமவாரம், மங்கல வாரம், சுக்கிரவாரம், பிரதோஷம், கார்த்திகை, அமாவாசை, பௌர்ணிமை, மாசப் பிறப்பு, சிவராத்திரி, நவராத்திரி, விநாயக சதுர்த்தி, கந்தசஷ்டி முதலிய புண்ணிய காலங்களிலும்; வேறும் அநேகர், நியமமாகவுந் தரிசனஞ்செய்யத் தொடங்கினார்கள். சைவசமய நூல்களெல்லாம் சில விவேகிகளால் அவ்வக்காலங்களிலே தங்கள் பிழைப்புக்காகச் செய்யப்பட்டன என்று சொல்லும் பாதிரிமாரின் சொல்லை விசுவசித்திருந்த அநேகர், பாதிரிமாரும், அவர்களைச் சார்ந்தவர்களுஞ் சொல்வன வெல்லாம் பொய்யென்றும், சிவபெருமான் ஆன்மாக்கள் பொருட்டு வேத சிவாகமமென்னும் முதல் நூல்களை அருளிச் செய்தாரென்றும், அவைகளின் வழிநூல் சார்பு நூல்களும் அவ்வக்காலங்களிலே தோன்றின வென்றும், மற்றைச் சித்தாந்த நூல்களும் அவர் அருள்பெற்றவர்களாலேயே செய்யப்பட்டன வென்றும் விசுவசித்துக்கொண்டார்கள். பிரமா, விட்டுணு, உருத்திரன் முதலிய கடவுளர் பல

ரென்றும், அவர்களை வணங்குதலால் தங்களை அநேகேச்சுரவாதிகள் என்றுஞ் சொல்லிவந்த அநேகர், அநாதி முத்த சித்துருவாகிய சிவன் ஒருவரே சகல ஆன்மாக்களுக்கும் மேலாகிய கடவுள் என்றும், அவரை வழிபடுதலால் தாங்கள் சித்தாந்த சைவரென்றுந் தெளிந்து கொண்டார்கள். கோயில்களிலே சுவாமியைத் தாங்குதல் தங்களுக்கு அவமானம் என்று எண்ணி யிருந்த அநேகர், சுவாமியைத் தாங்குதலால் வரும் பயன் இதுவென்றும், அதனல் நாங்கள் ஸ்ரீபாதந் தாங்கிகள் என்னும் திவ்விய நாமத் தைப் பெற்றுக்கொள்வோமென்றும் அறிந்து, தாங்கத் தொடங்கினர்கள். தலைக்குட்டையோடு கோயில்களுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்துவந்த அநேகர், அது விலக்கென்று கண்டு, தலைக்குட்டை இல்லாது தரிசனஞ் செய்யத் தொடங்கினர்கள். பிறன்மனை விழைதல், வரைவின் மகளிர் விழைதல் முதலியவற்றைத் தங்களுக்கு இடையரு வேலையாகத் திரிந்த அநேகர், அவை பாவமென்று கண்டு வெறுத்து விட்டார்கள். தங்கள் சரீரம் நெடுங்கால மிருக்கு மென்றும், தாங்கள் என்றைக்கும் சுக சரீரி களாய்ச் சீவிப்பார்களென்றும், மரணத்தைக் குறித்து ஒருபோதும் சிந்தியாதிருந்த அநேகர், சரீரம் அநித்தியமென்றும், இருவினைக் கீடாகிய சுகதுக்கங்களை அநுபவித்தல் நிச்சயமென்றும், அது நீங்கும் அவதி தமக்குத் தெரியாதென்றுந் தெளிந்துகொண்டார்கள். ஒருபோதுந் தரும சிந்தையில்லாது, தாமுந் தமது பெண்டிர் பிள்ளை களும் நன்ருக உண்டுடுத்துக்கொண்டு களிப்புற்ற

அநேகர், தருமஞ் செய்தலின் மிக்க புண்ணியம் பிறிதொன்றுமில்லையென்று கண்டு, தருமஞ் செய்யத் தொடங்கினார்கள். தமக்கு எவ்வளவோ நன்றி செய்தவர்களையும் மறந்த அநேகர், செய்ந் நன்றி மறத்தல் கேடு என்று அறிந்தார்கள். நம்முயிர்க் குயிராயுள்ள சிவபெருமானிலும் பார்க்கத் தமது பெண்டிர் பிள்ளைகளிலும் பொருள் பண்டங்களிலும் அதிக அன்புவைத்த அநேகர், இவை எல்லாவற்றையும் நமக்குத் தந்தவரும், நம்மோடு அநாதியே இரண்டறக் கலந்து நின்றவரும், பெத்த நிலையிலே தாம் நம்முள்ளே மறைந்து நமக்குப் பின்னாகியும், முத்திநிலையிலே நம்மைத் தம்முள்ளே அடக்கித் தாம் நமக்கு முன்னாகியும் உள்ளவருமாகிய சிவ பெருமானிடத்தே அதிக அன்பு வைத்தலே தகுதி என்று கண்டு, அன்புவைத்தார்கள். தங்கள் தங்கள் கடமைகளும் ஒழுக்கங்களும் இவை இவை யென அறியாத பெண்களுள் அநேகர், தங்கள் தங்கள் கடமைகளையும் ஒழுக்கங்களையும் அறிந்து கொண்டார்கள். திருவிழாக்கள் தங்கள் தங்கள் கொண்டாட்டத்துக்கு மிக உவப்பானவைக ளென்று நினைத்த அநேகர், கடவுள் உற்சவங் கொண்டருளுவது ஆன்மாக்களாகிய நாமெல் லாந் தம்மேலே பத்தி செய்யும்பொருட்டென்று உணர்ந்து, திருவிழாக்காலத்திலே துன்மார்க்க விஷயங்களிலே மனசை விடாது கடவுள்மீது பத்தி செய்து அவரை வழிபடத் தொடங் கினார்கள். பசுக்களை இரக்கமின்றி அடித்தல் முதலியவற்றைச் செய்த அநேகர், பசுக்கள் சிவ லோகத்தினின்றும் பூமியில் வந்தனவென்றும்,

அவைகளின் உறுப்புக்களிலே தேவர்களும் முனிவர்களும் வசிக்கின்றூர்களென்றும், புண்ணிய தீர்த்தங்கள் இருக்கின்றனவென்றும், அப் பசுக்கள் தரும் பஞ்சகவ்வியங்கள் சிவபெருமானுக்கு அபிஷேகத் திரவியங்களாகின்றன வென்றும், அவற்றின் சாணம் சிவசின்னமாகிய விபூதிக்கு மூலம் என்றும் அறிந்து, அவைகளை வணங்குதற்கும், அன்போடு புல் முதலியன கொடுத்தற்கும், அவைகளின் பொருட்டுக் கேணி குளங்களை வெட்டுவித்து, அவைகளினருகே ஆவுரிஞ்சுகல் நாட்டுவித்தற்கும் தொடங்கினூர்கள். வீணரோடு கூடுதலும், அவர்களோடு சொக்கட்டான், காகிதம், கவறு, சதுரங்கம் விளையாடுதலுமே தமக்குத் தொழிலாகப் பூண்ட அநேகர், அவர்களோடு கூடாதும், அவை செய்யாதும் விடுத்துச் சற்சனரோடு சகவாசஞ் செய்தலே பெருமையென்றறிந்து, அவர்களோடு நல் விஷயங்களிலே பொழுதுபோக்கத் தொடங்கினூர்கள். கல்வியிற் குறைவுடையோரும், கல்வி யில்லாதவருமாகிய இருதிறத்தாரும் கல்வியின் மேம்பட்ட செல்வம் பிறிதொன்றுமில்லையெனக் கண்டு, கல்விகற்கத் தொடங்கினூர்கள்.

கிறிஸ்துமத அனுசாரிகளாகிய பாதிரிமாராலே தாபிக்கப்பட்ட வித்தியாசாலைகளிலே, கருவி நூல்களோடு அவர்கள் சமய நூல்கள் படிப்பிக்கப்படுதலையும், சைவ சமயிகளாலே பற் பலவிடங்களிலுந் தாபிக்கப்பட்டிருக்கும் வித்தியா சாலைகளிலே கருவி நூல்கள் மாத்திரம் படிப்பிக்கப் படுதலையும் அவர் கண்டார். காணவே, சைவ



யாழ்ப்பாணம், வண்ணார்பண்ணை
ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலை
(முகப்பு)

சமயப் பிள்ளைகளுக்குக் கருவி நூல்களோடு சமய நூல்களும் படிப்பிக்கப்பட்டால், அவர்கள் தம் மதத்தில் நிலைத்து நிற்றன் மாத்திரமன்றி, பர மதங்களையும் கண்டித்தற்குச் சத்தியுடையராயும் வருவார்கள் என்பதை நன்றாக அறிந்துகொண் டார். அறியவே, இவ்விருதிற நூல்களையும் படிப்பித்தற் பொருட்டு, தாம் ஒரு வித்தியாசாலை தாபித்தல்வேண்டு மென்று கருதி, கலியப்தம் 4,950-க்கும், சாலிவாகன சகாப்தம் 1771-க்கும் சமமாகிய கீலகஇல ஆவணிமீ 5உ சுக்கிர வாரமும், கிருஷ்ணபக்ஷ சதுர்த்தியும், இரேவதி நக்ஷத்திரமும், சூலநாம யோகமும், பாலவ கரணமுங் கூடிய சுபதினத்திலே, விருச்சிக லக்கினத்திலே, வண்ணார்பண்ணையிலே, ஒரு வித்தியாசாலை தாபித்தார்.

அது ஏழு மாசங்களாக வைத்தீசுவரன் கோயிலுக்கெதிரேயுள்ள வீட்டிலும், பின்பு அக் கோயின் மடத்திலும் வைக்கப்பட்டது. அவ் வித்தியாசாலையிற் படிப்பித்தவர்கள் அவர் மாணுக்கராதலால் வேதனம் பெருது படிப்பித்து வந்தார்கள். பின்னர் அவ்வித்தியாசாலையை, பிடியரிசி தண்டி, அதனுலே சிலகாலம் உபாத்தி யாயர்களுக்கு வேதனங் கொடுத்து நடத்தி வந்தார். பின்பு பிடியரிசிவரவு தண்டற் கூலிக்குத் தானும் போதாமைகண்டு விடப்பட்டமையால், உபாத்தியாயர்களுட் சிலர் நீங்கிவிட, சிலர் படிப்பித்து வந்தார்கள்.

இந்தப் பிரகாரம் சைவசமயிகளுக்குப் பிரசங்கஞ் செய்தலிலும், சைவசமயப் பிள்ளை

களுக்குக் கல்வி கற்பித்தலிலுமே தம் வாணுள் முழுதையும் போக்கல் வேண்டுமென்ற பேராசை யினுலே, அடுத்த புரட்டாதிமீ தமது உத்தியோ கத்தைப் பரித்தியாகஞ் செய்துவிட்டார். (Sep. 1848.) அதனைக் கேள்வியுற்ற அவரது சகோதரர்கள் அது செய்தமையால், அவர்மேற் கோபங் கொண்டு, ''நீயென்ன புத்தியீனஞ் செய்து கொண்டாய்; இந்தச் சம்பளம் இனி நீ எங்கே பெறுவாய்; இனிமேல் உனக்கு உலகத்திலே என்ன மதிப்பு'' என்று, அவரைக் கண்டித்தார்கள். அதற்குத்தரமாக அவர், "நான் உங்களிடம் வந்து பொருளுதவி செய்யும்படி கேளாதிருக்கக் கண்டுகொள்ளுங்கள்'' என்று சொல்லி அவர்கள் சமுகத்தை விட்டகன்றனர். அப்போது அவருக்கு வயசு 26 ஆயிற்று. இதுநிற்க,

முன் கிறிஸ்து மதத்திலே பிரவேசிக்க மாட்டே னென்றதனுல் உபாத்தியாயர் உத்தியோகத்தி னின்றும் நீக்கப்பட்ட தில்லைநாதபிள்ளை, இப் போது தம்மோடு கூட இங்கிலிஷ் கற்றவரும், தமக்குச் சைவ சமயத்தின் உண்மையைப் பல வாறுகப் போதித்துத் தம்மைக் கிறிஸ்து மதத்திற் பிரவேசியாதபடி தடுத்தாட்கொண்ட ஆசா ரியரும், சைவப் பிரசாரகரும், லோகோபகாரியும் ஆகிய ஆறுமுகநாவலரிடத்திலே தமிழில் இலக்கண விலக்கியங்களை அதிகமாய்ப் படிக்க எண்ணி, தம்மோடு கூடக் கற்றவர் என்பதையாவது, தம்மோடொத்தவயதுடையவர் என்பதையாவது நோக்காது, மற்றை மாணுக்கரைப் போலவே ஆசிரியருக்குச் செய்யவேண்டிய வழிபாட்டில்

எள்ளளவுந் தவறில்லாதவராய்ப் பாடங்கேட்பாராயினர். அவர் தம்முடைய போதனையை நம்பி, தம்மேல் மிக்க அன்பு உடையராயிருந்தபடியால், ஆசிரியரும் அதிக கவனத்தோடும் அவருக்குப் பாடஞ் சொல்லி வைத்தார்.

யாழ்ப்பாணத்திலுள்ள பிரபுக்களையாவது, மற்றைச் சாமானிய சனங்களையாவது மேவாது, இப்பெருந் தொடக்கங்களைத் தொடங்கினராதலானும், சர்வலோகைக நாயகராகிய சிவபெருமானாலே விதிக்கப்பட்ட விதிகளுக்கு மாறாக நடப்பவர்கள் பிராமணராயிருந்தாலும், சைவ குருமாராயிருந்தாலும், பிரபுக்களாயிருந்தாலும், சுற்றத்தாராயிருந்தாலும், மித்திரர்களாயிருந்தாலும், பகைவராயிருந்தாலும், எவரையுந் தாட்சண்ணியமின்றி அவ்வப்போதே கண்டித்தலானும், எத்திறத்தாரும் அவர்மீது பொறாமையுங் கோபமுங் கொண்டு, அவருக்கும், அவரது தொடக்கங்களுக்கும் விரோதமாக அநேக இடையூறுகளைச் செய்தார்கள். செய்தும், தமது மனச்சான்றிற்கு விரோதமில்லாமலும், லோகோபகாரத்தின் பொருட்டும் சிதசித்துப் பிரபஞ்சமெங்கும் வியாபித்திராநின்ற சர்வசீவ தயாநிதியும், முழுமுதற் கடவுளுமாகிய சிவ பெருமானுடைய திருவடிகளை மனம் வாக்குக் காயங்களினாலே முறையே சிந்தித்துத் துதித்து வணங்கி, அவரது திருவருளையே முன்னிட்டுத் தொடங்கினராதலால், அவர்களுடைய இடையூறுகள் அவரையும் அவரது நன்முயற்சிகளையும் அணுகப் பெற்றில. இப்படி இடையூறுகளைச்

செய்த பிரபுக்களுள் அநேகர், அவை அவர்மீது பலியாமை கண்டபின் அவருக்கு நண்பராயினர்.

இப்படி நிகழுநாளிலே, தமது வித்தியா சாலையிலே, கல்வி கற்கும் பிள்ளைகளுக்கு, கருவி நூலுணர்ச்சியும் சமய நூலுணர்ச்சியும் ஆகிய இரண்டையும் ஊட்டத்தக்க புத்தகங்கள் இங் கில்லாதிருந்தமையானும், இங்கிருந்த புத்த கங்கள் தானும் எழுத்துப் பிழை, சொற்பிழை, வசனப் பிழைகளே பொதிந்தவைகளாத லானும், அச்சிலும் ஏட்டுப்பிரதிகளிலும் உள்ளவைகளைத் தாம் பரிசோதித்தலும், புதி தாகச் சில நூல்களைச் செய்தலுமாகிய இரண்டி னாலும், அப்பிள்ளைகளுக்குப் பயன் பெரிது சித் திக்கப் பண்ணலாம் என்றும், அவைகளை அச்சிடு வித்தற்கு ஒரு அச்சியந்திரம் அவசியம் வேண்டு மென்றும் நினைந்து, அவ்வாறோர் அச்சியந் திரத்தைக் கொண்டுவரும் பொருட்டுச் சென்ன பட்டணம் போக முயன்று, தமது வித்தியாசாலை யைத் தம் மாணுக்கர் சிலரிடத்தே ஒப்புவித்து விட்டு, தம்மிடத்திலே எப்போது கல்விகற்க வந்தாரோ அக்காலந் தொட்டு ஒரு காலத்துந் தம்மைவிட்டுப் பிரியாத நல்லூர்ச் சதாசிவப் பிள்ளையையுங் கூட்டிக்கொண்டு சௌமியஞ ஆடிமீ பயணம் புறப்பட்டார்.

புறப்பட்டு வேதாரணியம் போய், அங்கு நின்றும் மாயூர மார்க்கமாய்ச் சென்று, திருமூல நாயனுர் அரசின்கீழ்ச் சிவயோகத்திலிருந்து, ஒவ்வொரு வருஷத்திற்கு ஒவ்வொரு திருப் பாட்டாக மூவாயிரந் திருப்பாட்டினுல் திருமூல

மந்திரம் என்னுந் தமிழ் நூலை யருளிச் செய்த தலமாகிய திருவாவடுதுறை மடத்தை யடைந்தார். அங்கே யிருக்கும்பொழுது, கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்த பண்டாரசந்நிதிகளும், தமிழ்வித்துவான்களும் இதற்கு முன்னரே அவருடைய கல்வித் திறமை முதலியவைகளைக் கேள்விப்பட் டிருந்தார்களாதலால், அவரிடத்திலே இலக்கண விலக்கியங்களிலும், சைவ சித்தாந்த சாத்திரங்களிலும் பலவாட்சேபங்களைப் பண்ணுவாராயினுர்கள். அவ்வாட்சேபங்களுக்கு அவர் சொல்லிய விடைகள் பல நூல்களின் சாரமாயும், யுக்தியனுபவங்களுக்கு முழுது மியைந்ததாயுமிருந்தன. ஒருநாள் பண்டாரசந்நிதிகள், சைவப் பிரசங்கஞ் செய்யும்படி அவரைக் கேட்டார்கள். அப்பொழுது அவர் செய்த பிரசங்கஞ் சிவாகமங்களிலே பிரதிபாதிக்கப்படும் பதி பசு பாசங்களை யுணர்த்துவதாயும், சுருங்கச் சொல்லன் முதலாகிய பத்தழகென்னுந் திவ்விய இலக்கணஞ் செறிந்த செந்தமிழ் வசனமாயும், இலக்கண அமைதிக்கு ஒரு சிறிதும் மாறுபாடில்லாததாயும், தருக்க சம்பிரதாயம் நிறைந்ததாயும், பிறரொருவராலுஞ் செய்தற்கரியதாயும், கடவுட் பத்தியுடையாரை மாத்திரமன்றி அஃதில்லாதாரையும் மனமுருக்கிக் கண்களினின்றும் அருவி சொரியப் பண்ணுவதாயும், ''தேருந்தோறு மினிதாந் தமிழ்'' என்றபடி கேட்குந்தோறுங் கேட்குந்தோறுந் தெவிட்டாததாயு மிருந்தபடியால், திருக்கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து உபய சந்நிதானங்களும், மற்றை வித்து

வான்களும் அவருடைய வாக்கு வல்லபத்தைக் குறித்து ஆச்சரியமுஞ் சந்தோஷமுங் கொண்டு, அவருக்குரிய இயற்பெயருக்குப் பின் நாவலர் என்னுந் திவ்விய சிறப்புநாமத்தைச் சூட்டினுர்கள். அப் பெரியோர் கூறியபடியே ஏனையோரும் அக் காரணச் சிறப்புப்பெயரை அவருடைய இயற் பெயரின் பின்வைத்து ஆறுமுக நாவலர் என அவரை அழைப்பாராயினுர்கள். பின்பு அங்கு நின்றும் புறப்பட்டுச் சென்ன பட்டணஞ் சேர்ந்தார்.

அங்கே சிலகாலமிருந்து சூடாமணி நிகண்டுரையும், சௌந்தரியலகரியுரையும் அச்சிற் பதிப்பித்துக்கொண்டு, ஓர் அச்சியந்திரமும் விலைக்கு வாங்கிக்கொண்டு, அதை விட்டு நீங்கி வரும்பொழுது, திருவண்ணுமலை யாதீனத்துச் சின்னப்பட்டமாகிய அருணுசல தேசிகரைக் காணும்படி நேரிட்டது. அங்ஙனம் நேரிட்ட பொழுது தேசிகர் ஆறுமுகநாவலரது கல்வித் திறமையயுஞ் சமய உணர்ச்சியையுங் கண்டு, மிகவும் பாராட்டி அம்மடத்திற்ருனே சிலகால மிருந்து போகும்படி கேட்டுக்கொண்டார். அவருடைய கேள்விக்கிசைந்து அங்கே தங்கினுல், யாழ்ப்பாணத்திலே தாந்தொடங்கிய முயற்சிகள் வீணுய் முடியுமென்ற அச்சமும், யாழ்ப்பாணத்தாரில் அநேகர் பரமதத்திற் பிரவேசித்து விடுவார்கள் என்றதனுலுண்டாகிய இரக்கமுங் காரணமாகத் திரும்ப வருவேனென்று சொல்லிக் கொண்டு விரைவில் யாழ்ப்பாணம் வந்து சேர்ந்தார்.

சைவப்பிரகாச வித்தியாசாலையை வைக்கும் பொருட்டு, வண்ணார்பண்ணையிலே யுள்ள வர்த்தகர்களுள் அதி கௌரவமுடையவராகிய, அ. ஆறுமுகச்செட்டியார் சௌமியவருஷ (1849) ஐப்பசிமீ ஒரு நிலம் தருமசாதனஞ் செய்தனர். சில புண்ணியவான்களுடைய உதவியினாலே அந் நிலத்திலே ஒரு வித்தியாசாலை கட்டப்பட்டது. சாதாரணவருஷ தைமீ முதலாக வித்தியாசாலை அதிலே நடைபெற்று வந்தது. இது நிற்க,

தாங்கொண்டுவந்த அச்சியந்திரத்திற்கு வித்தியாநுபாலன யந்திரசாலை எனப் பெயர் கொடுத்துத் தாபித்தபின், அதிலே சைவசமயிகளுக்கு ஆவசியகம் வேண்டற்பாலனவாகிய புத்தகங்களைப் புதிதாகச் செய்தும், பரிசோதித்தும் அச்சிற் பதிப்பித்தார். அங்கில பாஷையிலிருக்கும் பாலபாடங்கள் போலத் தமிழ்ப் பாஷையிலும் பாலபாடங்கள் செய்தால், அவைகள் சுவசமயமாகிய சைவசமயத்தை அனுட்டிக்குந் தமிழர்களுக்கு மிகப் பிரயோசனமுள்ளவைகளாயிருக்குமென நினைந்து, அநேக நீதிசாரங்களையுஞ் சைவ சமய சாரங்களையுந் திரட்டி வசனரூபமாக எழுதி, முதற் பாலபாடத்தினிறுதியிலே ஆத்திசூடி, கொன்றைவேந்தன் என்னும் நீதி நூல்களையும், இரண்டாம் பாலபாடத்திலே அவைகளுக்கு உரையையும் எழுதிச் சேர்த்து அச்சிடுவித்தனர். எவ்வளவோ காலமாகப் பற்பலராலே பற்பல விதமாக அருத்தம் பண்ணப்பட்டு, அநேகருக்கு இதுதான் பொருளோ, அதுதான் பொருளோ என்று சந்தேகமுறக் கிடந்தவைகளாகிய "அஃகஞ்

சுருக்கேல்'' முதலியவைகளின் பொருள் மிக எளிதில் விளங்கக்கிடந்தன. அப்போது அவருக்கு வயசு 28 ஆயிற்று.

அடுத்த விரோதிகிருதுஸு சித்திரைமீ கொலைமறுத்தல் முதலியவற்றையும், அவ்வருஷம் ஐப்பசிமீ பவணந்தி முனிவரியற்றிய நன்னூலுக்கு சங்கர நமச்சிவாயப் புலவராற் செய்யப்பட்டு, திருவாவடுதுறைச் சிவஞானசுவாமிகளால் திருத்தப்பட்ட விருத்தியுரையையும், திருச்செந்தினிரோட்டக யமகவந்தாதிக்கும், தாமெப்பொழுதும் நியமமாகப் பாராயணம் பண்ணி வந்த திருமுருகாற்றுப்படைக்கும் உரை எழுதி, அவைகளையும் அச்சிடுவித்தனர். தமது வித்தியாசாலை வண்ணார்பண்ணையிலே தாபிக்கப்பட்டிருத்தலால், அச்சியந்திரத்தையும் அவ் வித்தியாசாலைக்குச் சமீபமாக வைத்திருந்தால் அவ்விரண்டினையும் பிரயாசையின்றி நடத்தலாமென்று நினைந்து, அச்சியந்திரத்தை வைத்தீசுவரன் கோயிலுக்குத் தெற்கேயுள்ள மடத்துக்கு நல்லூரினின்றுங் கொண்டுவந்தார். அச்சுக்கூடவேலைகள் அதிகப்பட்டு இராத்திரி காலங்களினும் மடத்திலே தங்கவேண்டி யிருந்தமையால், அம் மடத்தைத்தானே தமக்கு உறைவிடமாக்கிக் கொண்டார். அப்போது அவருக்கு வயசு 29 ஆயிற்று.

பத்தியரூபமாகவிருக்குந் திருத்தொண்டர் *பெரிய புராணத்தைக் கத்தியரூபமாக்கினுல்

---

* பெரியபுராணத்தைக் கத்தியரூபமாகச் செய்தமைக்குக் காரணம் அப்புத்தகத்தின் முகவுரையிற் காட்டியிருக்கின்ருர். அதனைப் பார்த்தறிக.

அது சைவசமயிகளுக்குப் பத்தியை விளைவித்த லாகிய பயனைக் கொடுக்குமென்று கருதி, அதனைச் சுத்தச் செந்தமிழ் நடையில் எழுதி அச்சிட்டார். இப்படி அநேக புத்தகங்களை அச்சிட்ட பின்னர், சுன்னாகத்தில் வசித்த முத்துக்குமார கவிராயர் கிறிஸ்து மதத்திலுள்ள அபத்தங்களையும், ஆட்சேபத்துக்கிடமாக இருந்தவைகளையுந் திரட்டிப் பாடியிருந்த ஞானக்கும்மி என்னும் நூலைப் பரிசோதித்து, நல்லூர் சி. விநாயகமூர்த்திச் செட்டியார் பேரால் அச்சிட்டு வெளிப் படுத்தினார். அப்போது அவருக்கு வயசு 30 ஆயிற்று.

இஞ்ஞானக்கும்மி வெளிப்படுத்தப்பட்ட உடனே கிறிஸ்து மதத்தவர்களெல்லாருந் திரண்டு, கூட்டங் கூடி, இவ்வச்சுக்கூடத்தை இல்லாமற் பண்ணவேண்டுமென ஆலோசனை பண்ணினார்கள். ஆலோசனைபண்ணியும், பரம கருணாநிதியாகிய சிவபெருமானுடைய மகிமை இவ்வச்சியந்திரம் வாயிலாக எவ்விடங்களிலும் விளங்கவேண்டியிருந்ததனால் அவர்களுடைய முயற்சி சித்திக்கவில்லை. பின்பு தங்கள் முயற்சி பலியாமை கண்டு, நாவலருக்குஞ் சைவ சமயத் திற்கும் ஞானக்கும்மிக்கும் விரோதமாகப் பிரசங்கங்கள் வாயிலாகவும் பத்திரிகைகள் வாயி லாகவும் வேண்டியவாறே பேசியும் எழுதியும் வந்தார்கள். அக்காலத்திலே, உடுவிற் பாதிரியா ரிடத்தே உபதேசியாயிருந்த ஒருவர் தாம் பிரசங்கிக்கப் போகுமிடங்களிலெல்லாம் கிறிஸ்து மதப் பிரசங்கத்தை ஒருவாறு சுருக்கி, சைவசமய

தூஷணமே பேசிவந்தார். அம்மட்டில் நில்லாது பத்திரிகைகளிலும் மறைந்து நின்று எழுதி வந்தார். இத்தூஷணங்களை ஒரு சிறிதுஞ் சகிக்க லாற்றாத நாவலர் வச்சிரதண்டம் என்னும் துண்டுப் புத்தகத்தை எழுதி விநாயகமூர்த்திச் செட்டியார் பேரால் வெளிப்படுத்திவிட்டார். அதன்பின் அவ்வுபதேசியாரும், பாதிரிமார்களும், அவர்களைச் சார்ந்த பிறரும் அடங்கியிருந் தார்கள்.

கிறிஸ்தவர்கள் சுப்பிரமணியப் பெருமான் எம்போல்வார் எனவும், அவர் எம்மைப்போல இரு பெண்களைக் கலியாணஞ் செய்திருக்கின்றார் எனவும், அம்மனைவியர்களில் ஒருவராகிய வள்ளி நாயகியைத் தாம் விரும்பியபோது, அவ் வள்ளி நாயகி தமது விருப்பத்திற்கு உடன்படாமை கண்டு தமது தமையனாராகிய விக்கினேசுரரை அச்சமயத்தில் யானையாய் வரும்படி செய்து, அவர் வாயிலாகத் தம்மோடு கூடும்படி செய்தா ராகையால் நம்மினு மிழிந்தவரெனவும், இவ் வியல்புடையவரை முற்றறிவுடைய கடவுளாகக் கொண்டு வழிபடுதல் ஒருவாற்றானுங் கூடா தெனவும், தத்தமக்கு வேண்டியவாறே பேசி வந்தார்கள். இவைகளைக் கேள்வியுற்ற நாவலர் கிறிஸ்தவர்களுடைய வாய் அடங்கும்படியாகவும், அவர்களுடைய துர்ப்போதனையில் மயங்கிக் கிடந்த சைவசமயிகளது ஐயந் தீரும்படியாகவும், சுப்பிரமணியக்கடவுளுக்குச் சரீரமெனப்படுவது நம்மனோர்க்குள்ள சத்த தாதுக்களாலாகிய சரீரம் போலாகாது; முற்றறிவு, வரம்பிலின்பம்,

இயற்கையறிவு, தன்வயமுடைமை, குறைவிலாற்றல், வரம்பிலாற்றல் என்னும் ஆறு குணங்களுமே ஆறு திருமுகங்களாகவும், மற்றையருட் குணங்கள் மற்றையவயவங்களாகவும் அமையப் பெற்ற அருட்டிருமேனியெனவும், அவருடைய பன்னிரண்டு திருக்கரங்களினுள்ள படைக்கலங்களாகிய தோமரம், கொடி, வாள், குலிசம், அம்பு, அங்குசம், மணி, தாமரை, தண்டம், வில், மழு என்னும் பதினொன்றும் பதினொரு உருத்திரரெனவும், வேல் இப்பதினொரு ஆயுதங்களுக்கும் மேலாகிய ஞானசத்தியெனவும் அவருடைய தேவிமாராகிய தெய்வநாயகி வள்ளிநாயகி யென்னு மிருவரும் அவருக்குக் கிரியா சத்தி இச்சாசத்தி எனவும் சாதிக்கின்றதாகிய ஒரு புத்தகத்தை எழுதி, அதற்குச் "சுப்பிரபோதம்" எனப் பெயர் தந்து வெளிப்படுத்தி விட்டார். வெளிப்படுத்திய பின்னர் பாதிரிமாருந் துர்ப்போதனை செய்தலை ஒழித்துக் கொண்டார்கள். மற்றைய சனங்களும், "நாங்கள் ஒருபோதுங் கேட்டறியாதனவும், எங்களுக்கு ஒருவராலுந் தெரிவிக்கப்படாதனவுமாயுள்ளவைகளை இப்பொழுதே அறிந்தோமென்றும், சுப்பிரமணியப் பெருமான் இவ்வளவு பெருந் தகையினையுடையர் என்பதனை இப்புத்தகம் வாயிலாகவே அறிந்தோம்" என்றும் சொல்லிக்கொண்டார்கள். இம்மட்டில் நில்லாது அநேகர் நியமமாகவும், வேறநேகர் சுக்கிரவாரம், கார்த்திகை, கந்த சட்டி முதலிய விசேஷ தினங்களிலுஞ் சுப்பிரமணியசுவாமி தரிசனத்தின் பொருட்டுக் கோயில்

களுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்யத் தலைப்பட்டார்கள். அப்போது அவருக்கு வயசு 31 ஆயிற்று.

தமது வித்தியாசாலையிலே, சைவசமய நூல்களைப் படிப்பித்துக்கொண்டும், சைவப் பிரசங்கங்களைச் செய்துகொண்டும் வருநாளிலே, பாதிரிமாராலே பின்னுஞ் சைவசமய தூஷணஞ் செய்யப்படுதலைக் கண்டு, அத் தூஷணங்களை நிராகரித்துச், சைவ தூஷண பரிகாரம் என்னும் நூலைச் செய்து ஆனந்தவருஷ வெளிப்படுத்தினர். இந்நூலுக்குப், போலி நியாயங்களாலும், பொருந்தாத நியாயங்களாலும் ஒரு மறுப் பெழுதி, அதற்குச் சுப்பிரதீபம் எனப் பெயர் கொடுத்து, பாதிரிமாருக்குள் வேலையாயிருந்த ஒரு * சுதேச கிறிஸ்தவர் வெளிப்படுத்தினர்.

---

* இவர் பாதிரிமாரைவிட்டு அரசாட்சியாரிடத்தே உத்தியோகம் பெற்றுக்கொள்ளும் பொருட்டு, நெடுங் காலமாக அநேக விண்ணப்பப் பத்திரங்கள் கொடுத்து, அவை சித்திபெறுமை கண்டபின் இந்தியா தேசத்திற்குப் போயினர். அங்கே B. A. பரீக்ஷை கொடுத்து, சிறந்த கவர்ண்மெண்டு உத்தியோகம் பெற்றுச் சிறப்புற்று வாழுநாளிலே, தாம் முன் கிறிஸ்து மதத்திலே பிரவேசித் தமை தவறென்றுஞ் சற்சமயமாகிய சைவசமயத்திற்கு விரோதமாகச் சுப்பிரதீபம் எழுதியது குற்றமென்றுங் கண்டு,அவற்றின் பொருட்டுப் பிராயச்சித்தஞ் செய்வித்து, மீட்டுஞ் சைவத்திற் புகுந்து, சைவ சமயமே சற்சமய மென்றும் அச்சமயத்தாலுணர்த்தப்படும் சிவன் ஒருவரே பஞ்சகிருத்திய நிருத்தஞ் செய்யும் பிறப்பிறப்பில்லாத பதியென்றும், மற்றைச் சமயக் கடவுளரெல்லாம் பிறப் பிறப்புடையவரென்றும் அறிந்து, அறிந்த உண்மையைக் கிறிஸ்தவர்களுக்கும் பிறருக்கும் போதித்துக்கொண் டிருந்து, சிலகாலத்தின்பின் தேகவியோகமெய்தினர்.

பாதிரிமாராகிய நாங்கள் முயன்றதுபோலவே நாவலரும் முயன்று சைவப் பிரசங்கங்கள் செய்தாரென்றும், அச்சுக்கூடந் தாபித்து நாங்கள் அச்சிட்டமாதிரியாகப் புத்தகங்கள் அச்சிட்டா ரென்றும், அச்சிட்ட புத்தகங்களிலே "பொய் சொல்லாதே", "மாமிசம் புசியாதே", "உன்னை நிந்திக்கிறவனையும் நீ நிந்தியாதே", "பாவஞ் செய்கின்றவன் நரகத்திலே துன்பத்தை யனுபவிப்பான்", "புண்ணியஞ் செய்கின்றவன் சுவர்க்கத்திலே இன்பத்தை யனுபவிப்பான்" என்றற் றொடக்கத்துச் சன்மார்க்க விஷயங்களை எழுதிப் பதிப்பித்தாரென்றும் *றொப்பின்சன் பாதிரியார் (Rev. E. J. Robinson) இங்கிலாந்து தேசத்திலே 1867ஆம் ஷு வெளிப்படுத்திய இந்து பாஸ்றேஷ் (Hindo Pastors) என்னும் புத்தகத்திலே 125ஆம், 126ஆம் பக்கங்களிலே சொல்லுகின்றார்.

குறைவில்லாத செல்வமாகிய கல்வியைக் குறைவறப் பெற்று எங்கும் புகழ்படைத்து வாழு நாளிலே, அநேகர் அவரை இல்லறத்திற் புகல் வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். அவ் வேண்டுகோளுக்கு இசையாது மறுத்துவிட்டார்.

இல்வாழ்க்கையிலே புகாமைக்குக் காரணம் அவர் வெளிப்படுத்திய யாழ்ப்பாணத்து வண்ணார்

---

* இவர் நெடுங்காலமாக இலங்கைத் தீவின் வட பாகமாகிய யாழ்ப்பாணத்திலே உவெஸ்லியன் மிசனரி (Wesleyan Missionary)மாரில் ஒருவாரயிருந்தவர். கிறிஸ்து மதத்தில் மிக்க பத்தியுடையவர். இங்கிலிஷில் அதி சமர்த்தர். எவராலுஞ் சன்மார்க்கரெனப் பாராட்டப் பட்டவர்.

பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலையின் ஆவேதனம் நான்காம் பக்கம் பத்தாம் பிரிவிற் கண்டுகொள்க. இல்லறத்திலே புகுதற்குச் சிறிதுஞ் சம்மதமில்லாதவராயிருந்தபடியால், தாஞ் சிவ பூசை எழுந்தருளப்பண்ணித் தம்முடைய காலத்தை, முற்கூறியவற்ருேடு சிவபூசையிலும் செபதியானுதிகளினும் போக்கல் வேண்டுமென்ற உள்ளக் கிளர்ச்சியினுலே பூசை எழுந்தருளப் பண்ணிக்கொள்ளும்படி கருதி, தமது மாணுக் கருட் சிரேட்டராகிய சதாசிவப்பிள்ளையையுங் கூட்டிக்கொண்டு ஆனந்தஞு ஐப்பசிமீ குறு நாட்டுக்குச் சென்ருர். அங்கே சென்று ஆசாரி யரை அடைந்து, தாங்களிருவரும் க்ஷணிகலிங்க பூசை எழுந்தருளப்பண்ணிக்கொள்ள வேண்டு மென்றும், அதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்தல் வேண்டுமென்றும் விண்ணப்பஞ் செய்தார். இப்படியிருக்க, மற்றைநாட் காலை யிலே ஒரு தூரதேசத்தவர் இரண்டு படிக லிங்கங்க ளுடன் அவர் தங்கியிருக்கும் இடத்திற்கு வந்தார். நாவலர் அத்தூரதேசத்தவரை நோக்கி, ''நீர் இங்கு வருதற்குக் காரணம் யாது?'' என்று வினுவ, அவர், ''இந்த ஊரிலே அநேகர் வந்து சிவபூசை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு மீட்டுந் தங்கள் தேசங்களுக்குப் போதலுண்டு. அது பற்றிச் சிவபூசை எழுந்தருளப்பண்ணுங் கருத் துடையாராய் வந்துள்ளார் யாருக்காவது, இவ்விலிங்கங்களை விற்கலாமென்று கொண்டு வந்தேன்'' என்ருர். அந்தச் சமையத்தில் அச் சைவாசாரியரும் அவ்விடத்திற்கு எழுந்தருளி வந்தார். நாவலர் அவைகளைப் பஞ்சசூத்திர

விதிப்படி சோதித்தபொழுது, அவைகளிலொன்று குற்றமில்லாததாயும், நான்காம் வருணத்தார் பூசித்தற்குரிய இலக்கணங்களை யுடையதாயு மிருந்தது. பரிசோதித்தலைக் கண்ட சிவாசாரியர் அவரை நோக்கி, "இவைகளெல்லாவற்றையு மறிந்த தாங்கள் உடையவர் பூசை எழுந்தருளப் பண்ணுவிடின், வேறு யாவர் உடையவர் பூசை பண்ணுதற்குத் தகுந்தவர்" என்று சொல்லி உடையவர் பூசையே எழுந்தருளப்பண்ணல் வேண்டுமென்று பலவாருகக் கேட்டுக்கொண்டார். அவருந் தமது காலத்தை நைட்டிகப் பிரமசரிய ஒழுக்கத்தாற் போக்குதற்கு எண்ணியிருந்தாராதலால் படிகலிங்க பூசை எழுந்தருளப் பண்ணுதலில் யாதொரு குற்றமுமில்லை யென்று கண்டு, தாம் உடையவர் பூசையும் சதாசிவப் பிள்ளை க்ஷணிகலிங்க பூசையும் ஆனந்தஹு ஐப்பசிமீ 18உ ஆகிய சுபதினத்திலே எழுந்தருளப் பண்ணிக்கொண்டார்கள். அங்கே சிலநாளிருந்து பூசை பழகிக்கொண்டு விரைவில் யாழ்ப்பாணத்திற்குத் திரும்பினர். அப்போது அவருக்கு வயசு 32 ஆயிற்று.

இப்படி நிகழுநாளிலே அவருடைய மாணுக்கருட் சிலர் அவரை விட்டு நீங்கி, இல்லறத்திலே புகுந்தார்கள். சிலர் யாத்திரைபண்ணவேண்டும் என்னும் விருப்பத்தினுலே சிதம்பரம் முதலிய தலங்களுக்குப் போயினர். அவர்களுள் ஒருவராகிய ஆறுமுகப்பிள்ளை, திருவண்ணுமலை யாதீனத்துக்குப் போய், காஷாயம் பெற்று, அம் மடத்துத் தம்பிராஞய் இப்போதுமிருக்கின்ருர். இது நிற்க,

தமது வித்தியாசாலை எந்நாளும் நிலைபெறும் பொருட்டு முதல் சேர்க்கவேண்டுமென்று நினைந்து, இதற்குச் சில வருஷங்களுக்கு முன்னே நிருபங்கள் எழுதிப் பற்பல விடங்களுக்கும் அனுப்பியிருந்தார். கொழும்பிலேயுள்ள சிரேட்ட பிரபுக்களுள் ஒருவராகிய இ. நன்னித்தம்பி முதலியார் நளவருஷம் பங்குனிமீ 400 ரூபா அனுப்பி யிருந்தார். அத்தொகையையே முதலாக வைத்து, பிங்களவருஷம் மாசிமீ 14உ புதவாரத்திராத்திரி யிலே (Feb. 1858) அவ்வித்தியாசாலையிலே ஒரு சபை கூட்டி, அதன் வரலாற்றைப் பிரசங்கித் தார். அப்போது வந்திருந்த பிரபுக்கள் தங்கள் தங்களால் இயன்றளவு உபகரித்தார்கள். *அநேக வருஷங்களாக வேதனம் பெறாது படிப்பித்துவந்த உபாத்தியாயர்கள் காலயுத்தி வருஷம் சித்திரைமீ முதலாக வேதனம் பெற்றுப் படிப்பித்தார்கள். அவ்வித்தியாசாலையின் பொருட்டு ஒரு வர்த்தகசாலை வாங்கப்பட்டிருக் கின்றது. அப்பொழுது மு. தில்லைநாதபிள்ளை இவ்வித்தியாசாலையின் முதலுபாத்தியாயராக நியமனம் பெற்றார். அப்போது, அவருக்கு வயசு 35 ஆயிற்று.

அவர், தமது வித்தியாசாலையைத் தம் மாணாக்கராகிய கு. ஆறுமுகச் செட்டியாரிடத் திலே ஒப்பித்துவிட்டு, காலயுத்திவருஷம் ஆனிமீ சென்னபட்டணம் போகப் பிரயாணப்பட்டார்.

---

*இதைப்பற்றிய வரலாறு முழுவதையும் வண்ணார் பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலை ஆவேதனத்திற் காண்க.



ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்
சைவப்பிரகாச வித்தியாசாலை – குரவர் கோயில்

பிரயாணப்பட்டு வேதாரணியம் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு, அதைவிட்டு நீங்கிப் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருவாவடு துறையாதீனத்தை அடைந்தார். அவ்வாதீனத்துப் பண்டார சந்நிதிகளால் உபசரிக்கப்பட்டுச் சில காலந் தங்கிப் போகும்படி கேட்டுக்கொள்ளப் பட்டார். அவர்களுடைய கேள்விக்கிசைந்து, அம் மடத்திலே பிரசங்கங்கள் செய்துகொண்டும், புராணங்களுக்குப் பொருள்சொல்லிக்கொண்டுஞ் சிலநாளிருந்தார். அவைகளைப் பண்டாரச் சந்நிதிகள், சாஸ்திரிகள், வித்துவான்கள், தம்பிரான்கள், ஓதுவார்கள், பிரபுக்கள் முதலிய சமஸ்தருங் கேட்டு இனிது பாராட்டினுர்கள். பின் அவ்விடத்தைவிட்டு நீங்கித் தருமபுர ஆதீனத்தை அடைந்து, அங்கு சிலநாள் தங்கும்படி பண்டார சந்நிதியாற் கேட்கப்பட்டார். அங்கிருக்கு நாளிலே, சைவப் பிரசங்கங்கள் செய்தலிலே தம் நேரத்தைப் போக்கினுர். பின்பு அவ்விடத்தை விட்டகன்று, வழியிலுள்ள சீர்காழி சிதம்பரம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு சென்ன பட்டணம் போனுர்.

சென்னபட்டணம்போய்ச் சேர்ந்தவுடன் திருவாசகம், திருக்கோவையார் என்னுமிரண்டையும் பரிசோதித்து அவர் மாணுக்கராகிய சதாசிவப் பிள்ளை பேராலே சித்தார்த்திஇல வைகாசிமீ வெளிப்படுத்தினுர். அவ்வருஷத்திற்றுனே இவைகளைத் தவிர வேறும் அநேக புத்தகங்களையும் அச்சிட்டு வெளிப்படுத்தினுர். அப்போது அவருக்கு வயசு 37 ஆயிற்று.

கல்வி, செல்வம் என்னும் இரண்டினும் மேம் பட்டவரும், வித்துவான்களுக்கு அவரவர் திறமைக்கேற்பச் சம்மானஞ் செய்பவரும், தம் மிடத்து வரும் யாசகர்களுக்கு வரையாது கொடுக்கும் வள்ளலும், இராமநாதபுரத்து ஜெமிந்தாரின் மாநேசருமாயிருந்த பொன்னுச் சாமித்தேவர், அவருடைய கல்வித் திறமையை அவர் பதிப்பித்த புத்தகங்களாலறிந்து, திரு வள்ளுவர் பரிமேலழகருரையையும், திருக் கோவையார் நச்சினார்க்கினியருரையையும், தருக்க சங்கிரகம் அன்னம்பட்டியத்தையும் பரி சோதித்து அச்சிடும்படிக்கும், அதற்குச் செலவு தாமே தருவேமென்றும் வேண்டிக்கொண்டார்.

அவ் வேண்டுகோளின்படி, முந்தியதை ரௌத்திரிஸு ஐப்பசிமீ"த்தினும், பிந்தியவிரண் டையுந் துன்மதிஸு வைகாசிமீ"த்தினும் வெளிப் படுத்தினர். இந்நூல்களைப் பரிசோதித்து வெளிப் படுத்தியபோது திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவானாகிய திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரப் பிள்ளை சொல்லிய சிறப்புப் பாயிரத்தின் ஒரு பாகம் வருமாறு :

"தரைசெய்தவப் பயனாகி யமைந்தபெரு வளப்புதுவைத்
தலைமை யோன்பொன்
வரைசெய்நிதிப் பெருவாழ்க்கை மாகனவான் பெரும்புலவர்
மறவா தென்று
முரைசெய்பெரும்புகழ்ப்பொன்னுச்சாமிநரேந்திரன் மகிழ்கூர்ந்
துரைப்பக் கேட்டு
நரைசெய்விடை யேறுயர்த்த நம்பிரா னடிக்கன்பே
நயக்கு நல்லோன்.

மன்னுபெருந் தமிழ்ப்பாடை யிலக்கணமு மிலக்கியமும்
வரம்பு கண்டோன்
பன்னுசிவ புராணங்கள் பலதெரிந்தோன் சிவாகமநூற்
பரவை மூழ்கி
யுன்னுமநு பூதியெனும் விலைவரம்பி லாமணிகை
யுறக்கொண் டுள்ளா
னின்னுநய குணத்தினனுய்ச் சைவமெனும் பயிர்வளர்க்கு
மெழிலி போல்வான்.

நீடுபுகழ்த் திருக்கேதீச் சரந்திருக்கோ ணுசலமிந்
நிலவா நின்ற
நாடுபுகழ்த் தலம்பொலியாழ்ப் பாணத்து நல்லூர்வாழ்
நகராக் கொண்டோன்
றேடுபுக ழுருவமைந்த கந்தவே டவத்துதித்த
செல்வன் யாரும்
பாடுபுக ழாறுமுக நாவலனவ் வாறச்சிற்
பதிப்பித் தானே.''

''அகத்தியந்தொல் காப்பியமுன் னுயபல விலக்கணமுஞ்
சகத்தியல்பல் லிலக்கியமுஞ் சாற்றுபர மதநூலு
மகத்துவமெய்ப் பொருணூலு மதியமையப் பயின்றுணர்ந்து
சகத்தியலு மனுபூதித் தோன்றலா யமர்பெரியோன்.

மாறுபடு பரசமய வழியனைத்து மறமாற்றி
யாறுபடு செஞ்சடிலத் தண்ணலா ரருணெறியே
தேறுபடும் படிவளர்த்துத் திகழுமா தவமுடையோன்
வீறுபடு சிவனடியார் மேன்மைமுழு மையுமுணர்ந்தோன்.

கருள்விரவு தலைக்கழிக்குங் கண்மணியும் வெண்ணீறும்
பொருள்விரவு மைந்தெழுத்தும் பொருளாகக் கொண்டுவப்போன்
றெருள்விரவு சுத்தசைவ சித்தாந்தப் பெருஞ்செல்வ
னருள்விரவு பரவுபுக ழாறுமுக நாவலனே.''

"மன்னுகோ ணுசல மாகே தீச்சர
மென்னு மிரண்டு மிரண்டுகண் ணுகப்
பெற்றவீ ழத்திற் பிறங்கும்யாழ்ப் பாணத்
துற்றபல் வளனுக் குறைவிட ஞகிச்
சொல்லூர் கழனி சூழ்தரக் கொண்டு
செல்லூர் பொழிலாற் சேர்ந்துல களந்து
வில்லூர் மாட மிகக்கொடு பொலியு
நல்லூர் வாழ்க்கை நயந்தரு ளறிஞன்
கந்தவே டவத்திற் கருதரன் பான்முன்
வந்தவே ளென்ன வந்தவ தரித்தோ
னீற்ருெடு கண்மணி நிறையப் பூண்பார்ப்
போற்ருெடு பொலியும் புண்ணிய புருட
னவநெறி யாய வனைத்துங் களைந்து
சிவநெறி வளர்க்குந் திப்பிய குணத்த
னெழுத்துமுத லாக வியம்பிலக் கணமும்
வழுத்திலக் கியமும் வரம்புகண் டெழுந்தோன்
சமயம் விசேடந் தகுநிரு வாணமென்
றமையுமுத் தீக்கையு மடைவுறப் பெற்ருேன்
சுமங்கல விசேடச் சுருதியா மூலா
கமங்களின் முப்பொருள் கருதுபே ரருளான்
யுத்தியி னமைத்துணர்ந் தோங்கனு பூதி
சித்தியுற் றமைந்த சிவசிந் தாமணி
கற்றுணர் புலவருட் களிக்கு
முற்றுண ராறு முகநா வலனே."

அப்போது திருவாவடுதுறையாதீனத்து மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம்பிள்ளை மாணுக்கராகிய தியாகராசச்செட்டியார் சொல்லிய சிறப்புப்பாயிரத்தின் ஒருபாகம் வருமாறு :-

"செந்தமி ழென்னுஞ் சுந்தர மங்கை
கரந்தரத் தழகு களிமங் கலநா
ணிலக்கண மனைத்து நலக்க விளக்குந்
துலக்க மிகுந்த தூண்டா விளக்குப்
புணர்தரு மின்ப மணவுறு புராண

முணர்வோர் யார்க்கு மொளியுறு நேத்திர
நல்லறி வுறுத்தித் தொல்பவந் தொலைக்கும்
பல்கலை கட்கெலாம் புல்லுமோ ரில்லம்
பொய்தெரித் தகற்றி மெய்யிது வென்னுஞ்
சைவசித் தாந்த தெய்வ வைப்புக்
கண்ணுபுண் ணியங்கட் கண்ணிய வுயிராந்
தண்ணிய மாசிவ புண்ணியப் பிழம்பு
சிவனடி யவரைச் சிவமென மதிக்குந்
தவமது வளர்க்கு மவமறு சீல
னென்னுளங் குடிகொண் டிருக்கு
முன்னுசீ ராறு முகநா வலனே.''

''தென்மொழி யென்னு மன்பெரும் பௌவ
மொருங்கு குடித்த பெருங்கும்ப முனிவ
னெல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியமுத
லிலக்கண மெல்லா நலக்கவைத் தடுக்கிய
திருவ நீண்ட வொருபெரும் பேழை
யாரணம் புகலும் பூரண புராணனே
பொருளெனப் புகலும் புராண வாகரஞ்
சொல்பல சமயமாந் துகளற வடித்துச்
சமயா தீதமாஞ் சைவசித் தாந்தத்
தெய்வவா ரமுதம் பெய்து நிறைத்துப்
பொருவற வைத்த பூரண கும்பம்
பெறுபெரி தடைந்தவா றுமுகநா வலனே.''

சிதம்பரத்திலே சைவப்பிரகாசவித்தியாசாலை தாபித்தல் வேண்டுமென்னும் ஆசை மிகுதியினாலே அந்தத் தலத்திலே வித்தியாசாலை தாபிக்க முயன்று, அதனைத் தாபித்தலா லுண்டாகிய பிரயோசனத்தையும், அதனைத் தாபிக்கின்றவர்களும் அதற்குதவி செய்கின்றவர்களுமாகிய இருதிறத்தாரும் அடையும் பலத்தையுங் குறித்து, ரௌத்திரி௵ வைகாசிமீ வெளிப்படுத்திய, '' தமிழ்நாடெங்கும் சைவசமயம் வளர்ந்தோங்

குதற்கு ஏதுவாகச் சிதம்பரஸ்தலத்திலே தாபிக்கப்படும் சைவப்பிரகாச வித்தியா சாலையைக் குறித்து மகிமை பொருந்திய சைவ சமயிகளுக்கு யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் எழுதிய விக்கியாபனம்'' என்னும் பத்திரிகையிலே விரிவாகச் சொல்லியிருக்கின்றார். அவ்வாசை முற்றிற்று என்பதையும் அதனாற் சைவசமயிகள் அடைந்த பிரயோசனத்தையும் பின்வருஞ் சரித்திரத்தினாலுணர்க.

சைவசமய நூலுணர்ச்சியினுந் தமிழ்க் கல்வி யினுஞ் சிறந்தவரென்று பேர்படைத்து வருங் காலத்திலே, சென்னபட்டணத்துக்குச் சமீபமா யிருக்குந் திருமயிலாப்பூரிலுள்ள திருவண்ணமலை யாதீனத்துச் சின்னப்பட்டமாகிய ஆறுமுக தேசிகர், நாவலரைத் தாம் பார்த்துக்கொள்ளல் வேண்டுமென்னும் ஆசை மிகுதியினாலே அவ ரிடத்திற்குச் சில ஓதுவார்களை யனுப்பி, தம் முடைய திருமடத்திற்கு அழைப்பித்து, அவ ருடைய இலக்கண விலக்கியத் திறமையையுஞ் சித்தாந்த நூலுணர்ச்சியையுங் கண்டு, மிகவுஞ் சந்தோஷங் கொண்டு, தாந் தரித்திருந்த உருத்திர சஞ்சியத்தை ஞாபகப் பொருட்டாக விருக்கட்டு மென்று அவரது மேனியிலே தமது திருக்கரங்களாற் சாத்தியருளினார்.

பின்பு ஆவசியகம் யாழ்ப்பாணம் வரவேண்டி யிருந்தபடியால் சென்னபட்டணத்தை விட்டு, பல தலங்களையும் வணங்கிக்கொண்டு சிதம்பரம் வந்து, சுவாமி தரிசனஞ் செய்து, திருவாவடு துறையையடைந்தார். அங்கேசிலநாள் தங்கும்படி

நேரிட்டது. அங்கிருக்கும் நாளிலே உபய சந்நிதானங்களும் சித்தாந்த நூல்களிலும் இலக்கிய இலக்கணங்களிலும் ஆராய்தலிற் பொழுது போக்குவாராயினர்கள். அவர்கள் தங்கள் மடத்திலேயே இருக்கவேண்டுமென்றும், அவ்வூரிலே வித்தியாசாலைகள் தாபிக்க வேண்டுமென்றும், அவரைக் கேட்டார்கள். அவர்களுடைய கேள்விக்கிசைந்து அம்மடத்தையே தமக்கு உறைவிடமாக்கிக் கொண்டால், தாம் பற்பல விடங்களிலுஞ் சென்று வித்தியாசாலைகள் தாபித்தலும், சைவப் பிரசங்கங்கள் செய்தலும், சுயாதீனமாயிருத்தலுமாகிய இவைகளெல்லாவற்றிற்குந் தடையாயிருக்குமென் றெண்ணி, அதற்கு உடன்படாது மறுத்துவிட்டார். சிலநாட் சென்றபின் திருவாவடுதுறையை விட்டு நீங்கி, வழியிலேயுள்ள பலதலங்களையும் வணங்கிக்கொண்டு திருநாகைக் காரோணத்துக்கு வந்து, அவ்வூரவர்களுடைய வேண்டுகோளின்படி சைவப் பிரசங்கஞ் செய்து, சிலநாட்டங்கி, அவர்களுக்கு விடைகொடுத்தபின்பு, தோணியேறி, துன்மதிஇல பங்குனிமீ யாழ்ப்பாணம் வந்து சேர்ந்தார். அப்போது அவருக்கு வயசு 39 ஆயிற்று.

*சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலை தாபித்தற்கு மூலதனஞ் சேர்க்கும்பொருட்டு, துந்துபிஇல வைகாசிமீ 26உ சனிவாரத்திரவிலே, யாழ்ப்பாணத்து வண்ணார்பண்ணைச் சைவப்

---

* இவ் வித்தியாசாலையைப் பற்றிய வரலாறு முழுவதையும் சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலை ஆவேதனங்களிற் கண்டுகொள்க.

பிரகாச வித்தியாசாலையிலே ஒருசபை கூட்டி, மேலேசொல்லப்பட்ட வித்தியாசாலை தாபித்தலாலுண்டாகும் பயனையும், பிறவற்றையும் விரித்துப் பிரசங்கித்தார். அப்போது அவ்விடத்திலே வந்திருந்த சைவசமயப் பிரபுக்கள் தங்கள் தங்களாலியன்ற பொருளுதவி செய்தார்கள். இன்னும் அவ்வருஷம் ஆடிமீ 21உ சோமவாரத்திரவிலே, பருத்தித்துறைச் சித்திவிநாயகர் கோயிலிலே, இவ்விஷயத்தைக் குறித்துப் பிரசங்கித்தார். அங்கே வந்திருந்த பிரபுக்களுந் தங்கள் தங்களாலியன்ற பொருளுபகரித்தார்கள். இதுவன்றிப் பருத்தித்துறையிலும் புலோலியிலுமுள்ள சில வர்த்தகர்கள், தங்கள் வியாபாரத்திலே இவ் வித்தியாசாலையை நடத்தும்பொருட்டு, மகமை ஏற்படுத்திக் கொடுத்துவந்தார்கள்.

இப்படி நிகழுநாளிலே, சைவசமய பத்தியுடையாரநேகர், சைவப்பிரகாச வித்தியாசாலையிலே சைவப்பிரசங்கங்கள் முன்போலச் செய்தல் வேண்டுமென்று, பலமுறை வேண்டிக்கொண்டார்கள். சைவப்பிரசங்கங்கள் செய்தலிற்றானே தங்காலத்தைப் போக்கல்வேண்டுமென்னுங் கருத்தே அவருள்ளத்திற் குடிகொண்டிருந்தமை பற்றி, அவர்கள் வேண்டுகோளுக்கிசைந்து, சைவப்பிரசங்கங்கள் செய்துவந்தார்.

சைவசமய நெறியில் வழுவாதொழுகுஞ் சைவப்பிரசாரகராகிய நாவலர், சமய தீக்ஷை, விசேஷ தீக்ஷை, நிருவாணதீக்ஷை, ஆசாரியாபிஷேகம் என்னுமிவைகளைப் பெற்றுள்ளவர்கள், சிவ

தீக்ஷையில்லாத வைதிகப் பிராமணர் கையாலே விபூதி வாங்குதலைக் கண்டு, அது சிவாகமவிரோத மென்று துணிந்து, அதனை நீக்கக் கருதி, அவர்களிடத்தே விபூதி வாங்காத ஒரு நியமத்தைக் கொண்டிருந்தார். ஆகலின், சிவதீக்ஷையுடையோர் அஃதில்லாதாரை வணங்குதலும், அவர்களைச் சிராத்த முதலியவற்றிலே வரித்தலும், அவர்கள் கையாலே விபூதி வாங்குதலும், அவர்களைக் கொண்டு சிவாகமப்பிரகாரங் கட்டப்பட்டுப் பிரதிட்டை செய்யப்பெற்ற கோயில்களிலே பூசை, திருவிழாக்கள் செய்வித்தலும் பிறவுமாகிய இவைகளெல்லாஞ் சிவாகமவிரோத மென்பதையும், இப்படிச் செய்வோர் யாதொரு பயனையும் அடையமாட்டார் என்பதையும், சுருக்கி ஒருபிரகாரஞ் சனங்களுக்குப் பிரசங்கங்களிலே சொல்லி வந்தார். இப்படி நிகழு நாளிலே, வைதிகப் பிராமணர்களுள்ளே சிலர், தம்மிடத்திலே விபூதி வாங்காமையினுல் அவர் மேற் கோபங்கொண்டு, புறம்பே அவரைத் தூஷித்தார்கள். அம்மட்டினில்லாது சிவபெருமானின் திருமேனியாயும், ஆன்மாக்களுக்கு மலத்தைக் கெடுத்து ஞானத்தை யுதிப்பித்து மோக்ஷத்தைக் கொடுக்கும் இயல்பினை யுடையவைகளுமாயும் உள்ள சிவாகமங்களையும் நிந்தித்தார்கள். அவர்கள் செய்யும் நிந்தைகளைச் சில பிரபுக்கள் கேட்டு, மேலும் மேலும் அவ்வாறு செய்யும்படி, அவர்களை ஏவிவிட்டார்கள். தம்மைத் தூஷித்தலைப் பொறுப்பினும், சிவாகம நிந்தை சிவனடியார் நிந்தைகளை ஒருபோதும் பொறுக்க மாட்டாத சைவப்பிரசாரகர், துந்துபிஹு

மாசிமீ 19உ தமது வித்தியாசாலையிலே, வேதம் பொதுநூலென்றும், ஆகமம் சிறப்பு நூலென்றும், வைதிக மார்க்கத்தி லொழுகுவோர் புண்ணியலோகங்களை அடைவர்களென்றும், சைவ மார்க்கத்திலொழுகுவோர் சாலோகம், சாமீபம், சாரூபம் என்னும் பதமுத்திகளையும், சாயுச்சியமாகிய பரமுத்தியையும் அடைவர்களென்றும், அநேக பிரமாணங்களை எடுத்துக் காட்டிப் பிரசங்கித்தார். அப்பிரசங்கத்துக்கு விரோதமாக வைதிகப் பிராமணர் சிலர், சில பிரபுக்களையடுத்து, அவர்களுடைய உதவியினலே வைதிக மார்க்கத்திலொழுகுவோரே உயர்ந்தோரென்றும், அவர்களைச் சைவமார்க்கத்திலொழுகுவோர் வழிபடலாமென்றும், தாங்கள் பரார்த்த பூசை செய்ய விதியிருக்கின்றதென்றும், தாபிக்கிறதற்காக வெகு முறைகளிலே சனங்களைக் கூட்டி, அவர்கள் மெச்சும்படியாகப் பொன்முலாங் கொடுத்த வெகு இங்கிலிசுப் புத்தகங்களைக் கொண்டுவந்து, அவைகளிலே தாங்கள் சொல்லியவைகளுக்குப் பிரமாணங்களுண்டென வாய்ப் பறையறைந்தார்கள். ஆனல், அவர்களிலொருவராவது பிரசித்த சபையிலே எழுந்து பேசுதற்குச் சத்தியில்லாதவராயிருந்தபடியாலும், தாங்கள் எடுத்த விஷயத்தைத் தாபித்தற்கு ஆதாரமில்லாமையாலும், மற்றக்கிழமை இவ்விஷயம் பேசப்படுமென்று ஒவ்வொரு கிழமையினுஞ் சொல்லிச் சொல்லி, ஒரு கிழமையினும் பேசாது அலைத்துவிட்டார்கள். இவைகளையெல்லாம் அறிந்த சனங்கள் நாவலர் சொல்வதே நூற் சம்மதமெனவும், தங்களை அலைத்தவர்களாகிய

வைதிகப்பிராமணர் சொல்வது அசம்மதமெனவுந் தெளிந்து கொண்டார்கள். தெளியவே, வைதிகப் பிராமணருக்கு அஞ்சலி, வந்தனம் பண்ணி வந்த அநேகர், அது செய்யாதுவிட்டார்கள். சிராத்தம், விவாகம் முதலிய கருமங்களிலே அவர்களைத் தானபாத்திரமாகக் கொண்ட அநேகர், கொள்ளாது விட்டார்கள். வைதிகப் பிராமணரைக் கொண்டு பரார்த்த பூசை செய்வித்த கோயிலதிகாரிகளுளனேகர், அவர்களை நீக்கிச் சிவப்பிராமணரைக் கொண்டு பூசை செய்விக்கத் தொடங்கினுர்கள். வைதிகப் பிராமணர் கையாலே விபூதி வாங்கும் வழக்கத்தையுடைய சிவதீக்ஷை பெற்ற அநேகர், அவர்கள் கையாலே விபூதி வாங்காது விட்டார்கள். இந்தப் பிரகாரஞ் சிவதீக்ஷை பெற்ருேருக்கு மரியாதை நடத்தலையும், அவர்கள் சைவர்களாலே வணங்கப்படுதற்கு யோக்கியதையுடையவரென்று சிவாகமங்களிலே சொல்லப்பட்டிருத்தலையும் அறிந்த வைதிகப் பிராமணருள் அநேகர், சிவதீக்ஷை பெற்றுச் சிவபூசை எழுந்தருளப்பண்ணிச் சிவாகம நெறியிலே ஒழுகத் தொடங்கினுர்கள். யாழ்ப்பாணமெங்குஞ் சிவாகம ஆராய்ச்சியும், சிவபூசைச் சிறப்பும், தேவார திருவாசக பாராயண ஓசையும், சிவபூசைக்கு இன்றியமையாச் சிறப்பினதாயுள்ள பூசைமணியினேசையும் பரவத் தொடங்கின. வைதிக மார்க்கத்தினும் அதிகமாகச் சைவமார்க்கந் தழைத்தோங்கியது. சைவமார்க்கத்தைப் பரப்புதற்குத் திருவவதாரஞ் செய்த சைவப்பிரசாரகராகிய நாவலருடைய கீர்த்தி தமிழ்நாடெங்கும் பரம்பிற்று. சர்வஞ்

ஞத்துவமுள்ள எமது பிதாவாகிய சிவபெருமானுடைய கிருபையை என்னென்று சொல்வேம்!! யார்க்கெடுத்துரைப்போம்!!! அப்போது அவருக்கு வயசு 40 ஆயிற்று.

அடுத்த ருதிரோற்காரிஞூ மார்கழிமீ வித்தியாசாலையையும், வர்த்தகசாலையையும், மு. தில்லைநாதபிள்ளையிடத்தே ஒப்புவித்துவிட்டுச் சென்னபட்டணம் போதற்குப் புறப்பட்டார். அடுத்த தைமாசத்திலே அர்த்தோதய புண்ணிய காலஞ் சமீபித்து வந்ததினுல், சேதுஸ்நானம் பண்ணிக்கொண்டு போதல் வேண்டுமென்னும் ஆசை மிகுதியினுலே, இராமேச்சரம் போய், சேதுஸ்நானமும் சுவாமி தரிசனமும் பண்ணிக் கொண்டு, மாசிச் சிவராத்திரிக்கு மதுரைக்குப் போகவேண்டுமென்று நினைந்து, அங்கு நின்றும் புறப்பட்டு, இராமநாதபுரத்துக்குப் போயினுர். அங்குள்ள திருவாவடுதுறை மடத்திலிருந்த விசுவலிங்கத் தம்பிரானுடைய வேண்டுகோளின்படி அம்மடத்திலிருந்தார். இதற்குச் சில வருஷங் களுக்கு முன்னே சென்னபட்டணத்துக்குப் பொன்னுச்சாமித்தேவர் போயிருந்தபோது, அவருக்கும் இவருக்கும் ஒரு விஷயத்தைக் குறித்து ஒருவருக்கொருவர் மனவருத்தமிருந்தது. இப்படி மனவருத்த மிருந்தபடியால், தேவரைக் காண விருப்பமில்லாதிருந்தார். நாவலர் தமது சமஸ்தானத்துள்ளிருக்கின்ற மடத்திலே வந்திருக் கின்ருர் என்பதைக் கேள்வியுற்ற பொன்னுச் சாமித்தேவர், ஒருநாள் தம்முடைய சமஸ்தான வித்துவானெருவரை யழைத்து "நாவலர் அவர்கள் நம்முடைய தேசத்திலே வந்திருந்தும்,

நம்மைக் காணவில்லையே! எந்த வித்துவானும் இத்தேசத்துக்கு வந்தால் நம்மைக் காணும லிருக்கிறதில்லையே. இஃதென்ன ஆச்சரியம்'' என்று சொன்னார். அதற்கு அவர், ''நான் போயறிந்து வருகிறேன்'' என்று சொல்லி அவ ரிடத்திலே வந்தார். வந்து, பல விஷயங்களையும் பேசிய பின்பு, அவரை நோக்கி, ''தாங்கள் தேவரை இன்னுங் காணவில்லையா?'' என்று கேட்டார். அதற்கு அவர், ''தேவரைக் காணு தற்கு எனக்கு இட்டமில்லை'' என்றார். அவர், ''தேவரைக் காணுதற்குத் தங்களுக்கு இட்ட மில்லையாயினும் இத்தேசத்துக்கு வந்திருக்கிற படியால், கண்டுகொண்டுபோதலே தகுதி'' என்று சொல்லிப் போய்விட்டார். போய், ''நாவலரவர்கள் தங்களைக் காணுதற்குச் சற்றும் பிரியமில்லாதவராயிருக்கின்றார்கள்'' என்று சொன்னார். தேவர் அவரை நோக்கி, ''நீர் எந்தவிதமும் நாவலர் அவர்களை வரும்படி செய்தல் வேண்டும்; நம்முடைய தேசத்துக்கு வந்திருந்தும் நம்மைக் காணாது போவார்களே யானால் நமக்கு அவமானமாகுமே'' என்று சொல்லி, பின்னும் மற்றைநாள் அவரிடத்திற்கு அவரை அனுப்பி வைத்தார். அனுப்பப்பட்டவர் அவரிடத்திலே வந்து, அவரை நோக்கி, ''எந்த வித்துவானாவது, பிரபுவாவது, இந்தச் சமஸ் தானத்துக்கு வந்தால், தேவரவர்களைக் கண்டு போதல் நெடுங்காலமாயுள்ள வழக்கம்; அப்படி யிருக்கத் தாங்கள் தேவரவர்களைக் காண விருப்ப மில்லையென்று சொல்லுதல், நமக்கு அதிச யத்தை விளைக்கின்றது. மேலும் தேவரவர்களைக்

காணுது போதல் வித்துவாணுயிருக்கும் தங்களுக்கு முறையல்லவே'' என்று சொன்ஞர். அவர், அவருக்குத்தரமாக, ''ஒருவரைக் காண விருப்பமில்லாத என்னைக் காணும்படி சொல்லுதல் உமக்குப் புத்தியன்று. இன்னும் பிரியமில்லாத ஒன்றைச் செய்தல் எனக்கு வழக்கமுமன்று'' என்று சொல்லி, அவரை யனுப்பிவிட்டார். அவர் தேவரிடத்திற் போய், ''தங்களைக் காணவேண்டுமென்று நான் பலவாருக நாவலர் அவர்களுக்குச் சொன்னேன்; சொல்லியும் அவர்கள் சம்மதித்தார்களில்லை'' என்று சொன்ஞர். பின்னுந்தேவர் அவரைநோக்கி ''நீர் இன்னுமொருமுறை போய்ப் பார்த்து வாரும்'' என்ருர். அவர் மற்றைநாட் காலையில் அவரிடத்திலே வந்து பண்ணிய சம்பாஷணையினுல், தேவரைக் காணுதற்கு அவருக்கு ஒருபோதுங் கருத்தில்லையெனக் கண்டார். காணவே, அவர் அவருடைய ஆண்டன்மை, வீரம், துணிபு முதலியவைகளையறியாதவராதலால், பொன்னுச்சாமித்தேவருடைய அதிகாரத்தையும், அவர் அவ்வதிகாரத்தை எவ்வளவு பிறர்மேற் செலுத்தக் கூடியவரென்பதையும், அவரைப் பகைத்துக் கொண்டு அச்சமஸ்தானத்தை விட்டு நீங்குதல் அரிதென்பதையும், இன்னுமநேக பயனற்ற சொற்களையுஞ் சொன்ஞர். அவர் தேவருடைய அதிகாரம், செல்வாக்கு முதலியவைகளை எனக்குச் சொல்லுதலினுல் நான் அவைகளுக்குப் பயந்து அவரைக் காணுதற்கு உடன்படுவேனென்று நினைந்து, இவரெனக்குச் சொல்லுகின்ருர். இவருடைய சொற்களுக்குப் பயந்து அவரைக்

காணுதற்கு உடன்படுவேனுயின், நான் எடுத்துக் கொண்ட நன் முயற்சிகளேயும் இன்னேரன்னேர்க்கஞ்சிக் கைநெகிழவிட நேரிடுமே. அவ்வாருயின் அந் நன்முயற்சிகளே என் மனத்தோடு பொருந்தச் சிவபெருமானுடைய திருவருள் வழி நின்று, அவ்வருளேயே துணேக்கொண்டு செய்யத் தொடங்கினேனல்லனுய்ப் பழிபாவங்களுக்கு மாளாவேனேயென்று தமக்குள்ளே நினேந்து, பொன்னுச்சாமித் தேவருடைய குறைகளேயும், அவராலும் அவரைச் சார்ந்தோர்களாலும் அத் தேசத்தார் படுமிடர்களேயும் வெளித்திறந்து, அவர் முன்னிலேயிற் பேசிக் கண்டித்து, அவரையனுப்பிவிட்டார். அவர் போய் இங்கே நடந்த சமாசார முழுவதையும் அவருக்குத் தெரிவித்து, ''இந்தப்பிரகாரமாகத் தங்களுடைய சமஸ்தானத்திலேஒருகாலத்தினும்ஒருவரும்பேசத் துணியவில்லே ; அப்படியிருக்கத் தங்களுக்கு விரோதமாகப் பேசத் துணிந்தமை ஆச்சரியத்தை விளேக்கின்றது. ஆதலால், தங்கள் அதிகாரத்தை அவருக்குக் காட்டிவிடுதலே தகுதி'' என்ருர். அவருக்கு அவர் உத்தரமாக, ''நாவலர் அவர்கள் இத் தேசத்துக்கு வந்திருந்தும் நம்மைக் காணவில்லேயே யென்றதனுல் அவர்களுக்கு நாம் விரோதஞ் செய்யத் தலேப்படுவேமாயின் எங்களுக்கு அவர்களாற் சம்பவிக்கும் தீங்குகள் பல. எப்படியெனின், நாவலர் அவர்கள் இங்கிலிஷ் படித்தவர்களா யிருத்தலானும், சென்னபட்டணத்திலுள்ள உத்தியோகத்தர்கள் பிரபுக்களாகிய இவர்கள் அவர்களுக்கு இட்டர்களும் சீஷர்களுமாயிருத்தலானும், நாம் அவர்களேப்

பகைத்துக்கொள்வேமாயின் நமக்கும் நமது இராச்சியத்திற்குந் தீங்கு நேரிடும். அல்லாமலும் தற்காலத்து வித்துவான்களுக்குள்ளே, அவர்கள் சிறந்த வித்துவானும் பிரபுவுமாயிருக்கின்ருர்கள். அன்றியும் திருவாவடுதுறை முதலிய ஆதீனங்களிலேயுள்ள பண்டாரசந்நிதிகளால் இலக்கணவிலக்கியங்களிலுஞ் சைவசித்தாந்தத்தினும் மிகச் சிறந்தவர்களென்றும், சமய விஷயங்களையாவது மற்றெந்தவிஷயங்களையாவது தருக்க சம்பிரதாயத்தோடு பிரசங்கித்தலில் மிகச் சிறந்தவர்களென்றும் நன்கு மதிக்கப்பட்டிருக்கின்ருர்கள். இத்தமிழ் நாட்டிலுள்ள மற்றை வித்துவான்கள் நம்மிடத்திலே சம்மானம் வாங்குதற்கும், நம்மால் மதிக்கப்படுதற்கும் பேராசை யுடையராய் நம்முடைய தானத்துக்கு ஓயாது வருகின்ருர்கள். அங்ஙனமாக, **நாவலரவர்கள்** நம்மிடத்திலே சம்மானம் பெறுதற்காவது, நம்முடைய தயவைப் பெறுதற்காவது, நம்மாலே வித்துவானென்றழைக்கப்படுதற்காவது, விருப்பமுடையர்களாயிருக்கவில்லையே. ஆதலால், அவர்களுடைய தயையுஞ் சிநேகமும் நமக்கு வேண்டுமாயின், அவர்களை நாமாக வலிந்து நமது தானத்திற்கு அழைத்துக்கொள்ளுதலே புத்தி'' என்று சொன்ஞர். சொல்லிய பின்பு அவரைத் தமது அவைக்களத்துக்கு வரச்செய்தற்கு ஒருபாயத்தை ஆலோசித்து, சில வைஷ்ணவ சாஸ்திரிகளையழைத்து அவர்களைக் கொண்டு, ''தாங்கள் சைவசமயமே மெய்ச்சமயமென்று பிரசங்கங்கள் செய்து வருகின்றீர்களென்று நாங்கள் கேள்வியுற்றேம். தாங்கள், பிரபு

அவர்களுடைய அவைக்களத்திலே வந்து சைவ சமயமே மெய்ச்சமயமென்று தாபிப்பீர்களாயின், அதனை மறுத்து, விட்டுணுசமயமே மெய்ச்சமய மென்று தாபிப்போம்.'' என்பன முதலிய பொருள்களை உள்ளடக்கிய கடிதமொன்றை எழுதுவித்து அனுப்புவித்தார். அக்கடிதம் வந்த வுடனே, ''எழுத்துச் சொற்பிழைகளில்லாமற் கடித மெழுதத்தானும் தெரியாத நீங்கள்தாமா, சமயவாதஞ் செய்யத் துணிந்தீர்கள்? உங்கள் துணிவிருந்தவாறு நன்று! நன்று!!'' என்று பரிகாசஞ்செய்து அனுப்பிவிட்டார். தேவர், தம்முடைய ஆலோசனைகளொன்றேனும் சித்தி பெறாமையைக் கண்டு, பசுக்கன்று தாயைவிட்டுப் பிரிந்தாலும், தாயானது தனது கன்று நிற்குமிடந் தேடி, அதைச் சென்றணைந்து, அதற்கு மிக்க அன்போடும் பாலைச் சுரந்து கொடுத்தல் போல, தாங்களும் நாமறியாது தங்களுக்குச் செய் திருக்குங் குற்றங்களைப் பொறுத்து, இதுகண்ட வுடன் எழுந்தருளி வரல்வேண்டும் என்னும் பொருளை உள்ளடக்கி ஒரு கவியைப் பாடி, பின்னுந் தம்முடைய வித்துவானிடத்திற் கொடுத்து, அனுப்பி வைத்தார். அனுப்பப்பட்டு வந்தவர், மிகுந்த பணிவோடும் அச் சீட்டுக் கவியை அவருக்குக் கொடுத்தார். அவரதை வாசித்த பின்பு, நம்மை யொருவர் பலவாறு வலிந்து அழைக்க, நாம் போகாதிருத்தல் சிறப் பன்று என்று தமது உள்ளத்திலே நினைந்து, பின்வருங் கட்டுப்பாடுகளைப் பண்ணிக்கொண்டு தேவரிடத்திற்குப் போதற்குச் சித்தங்கொண் டார். அக்கட்டுப்பாடுகளாவன :- அங்கவஸ்திரந்

தரித்துக்கொண்டும், பாதகுறடிட்டுக்கொண்டும், தம்மோடு கூடப்போகும் எல்லாரோடும், அரமனையிற் சேறல்; தேவரிடத்திலே பரிசு பெருது விடுதல்; தேவர் எழும்பொழுதெல்லாம் எழா திருத்தல் முதலியவைகளே. பின்பு, தாமிருந்த மடத்தை விட்டு நீங்கித் தமது பரிசனங்களோடும் அரமனைக்குச் சென்ருர். நாவலர் அவர்கள் வருவார்களென்று எதிர்பார்த்திருந்த தேவர், அவரைக் கண்டவுடனே எதிர்கொண்டழைத்து, ஆசனத்திருத்தி, அவரோடு கல்வி விஷயங்கள் பலவற்றைப் பேசிய பின்பு பிரசங்கிக்குமாறு வேண்டிக்கொண்டார். அவ் வேண்டுகோளுக் கிசைந்து, "சைவசமயமே சமயம் சமயாதீதப் பழம் பொருளை'' என்னும் தாயுமான சுவாமி பாடற் செய்யுளையே பீடிகையாக எடுத்துக்கொண்டு, சிவனொருவரே பிறப்பிறப்பில்லாத கடவுளென்றும், அவரை வழிபடுவோர் அனுசரிக்குஞ் சமயமாகிய சைவசமயமே மெய்ச்சமயமென்றும், விட்டுணு மதத்தை அதிப் பிரபல நியாயங்களாலே கண்டித்தும், அவ்வைணவ சாஸ்திரிகள் முன்னிலையிற் பிரசங்கித்தார். தேவர் அப் பிரசங்கத்தை மிகப் புகழ்ந்து, ஒரு காலத்தும் ஒரு வித்துவானும் பெருதனவும், ஒரு வித்துவானுக்குங் கொடாதனவுமாகிய இரண்டு சாதுராவை யழைப்பித்து, அவைகளை ஏற்றுக் கொள்ளுமாறு பலவாருக வேண்டிக்கொண்டார். இது முன்னே தாஞ் செய்துகொண்ட கட்டுப் பாட்டுக்கு விரோதமானதென்று மறுத்தும், தேவருடைய ஆராமையையும் அன்பையுங் கண்டு ஏற்றுக்கொள்ளச் சம்மதித்த பின்பு, தேவர்

அவைகளைத் தமது கைகளாலெடுத்து அவருடைய மேனியிற் சாத்திவிட்டார். அதன் பின்பு தேவர், ஏட்டுப் பிரதிகளிலுள்ள கடினமான நூல்களைத் தாங்கள் பரிசோதித்து உலகத்திற்குப் பயன்படும் பொருட்டு அச்சிட்டு வெளிப்படுத்தல் வேண்டு மென்றும், அதற்குத் தம்மாலாய உதவிகளைக் காலந்தோறுஞ் செய்வேமென்றும், வாக்குக் கொடுத்தார். பின்பு, அவரும் அவரோடு கூடச் சென்றவர்களும் அரமனையைவிட்டு நீங்கி மடத் துக்குப் போனார்கள். மற்றைநாள் திருவுத்தர கோசமங்கைக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு மீட்டும் அம்மடத்திலே வந் திருந்தார். பின் அவ்விடத்தை விட்டுப் புறப் பட்டு மதுரைக்குப் போயினர். அப்போது அவருக்கு வயசு 41 ஆயிற்று.

மதுரையிலுள்ள திருஞானசம்பந்தசுவாமிகள் ஆதீனத்துப் பண்டார சந்நிதிகளும் மற்றைச் சைவப் பிரபுக்களுங் கேட்டுக்கொண்டபடி அந்தத் தலத்திலே சிலநாள் தங்கியிருக்கும்பொழுது, கோயிலுக்கு நியமமாகப்போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு வருவார். இப்படியிருக்கு நாளிலே, பண்டாரசந்நிதிகள் கேட்டுக்கொண்ட படி, மீனாட்சி அம்மை சந்நிதானத்திலே, அந்தத் தலத்தின் பெருமையையும், அதிலெழுந்தருளி யிருக்குஞ் சொக்கலிங்க மூர்த்தியுடைய பெருமை யையும், சைவசித்தாந்தத்தினுடைய உயர்வையும் விரித்து, சனங்களுக்கு இனிது விளங்கும்படி பிரசங்கித்தார். உடனே கோயிலருச்சகர், அம்மைக்குச் சாத்திய விபூதிப்பிரசாதமும்,

பரிவட்டமும், புட்பமாலையுங் கொண்டுவந்து, விபூதிப் பிரசாதத்தைச் சைவப்பிரசாரகருடைய கையிற் கொடுத்து, பரிவட்டத்தைச் சிரசிலே கட்டி, மாலையைத்தோளிலிட்டு ஆசீர்வதித்தார். பின் கோயிலில் நின்று வாத்திய முதலிய வரிசைகளோடு மடத்துக்கு அனுப்பப்பட்டார். அச்சனங்கள் இப்படிப்பட்ட பிரசங்கத்தை முன்னொரு காலத்துங் கேட்டிராதபடியால், பிரசங்கத்தி லாராமையும், அவரிலன்பும் வைத்தார்கள். இன்னுஞ் சிலநாட் சென்றபின் தங்கள் மடத்திலே பிரசங்கஞ் செய்வித்தார்கள். பிரசங்கம் முடிந்தவுடன் மகா சந்நிதானம் சந்தோஷங் கொண்டு தமது திருச் செவிகளில் அணிந்திருந்த சுந்தர வேடங்களைக் கழற்றி நாவல ருடைய செவிகளிலணிய, அதுகண்ட சின்னச் சந்நிதானம் தாம் அணிந்திருந்த ஆறு கட்டிகளைக் கழற்றி அவ்வாறு செய்ய, உபயசந்நிதானங்களும் பிரசங்கத்தை இனிது பாராட்டி வரிசையோடு அனுப்பிவிட்டார்கள். சின்னச்சந்நிதானம் இலக்கணக்கொத்திலுள்ள சந்தேகங்களைக் கேட்டு நிவிர்த்திபண்ணிக்கொண்டார். அங்கிருக்கும் பொழுது திருப்பூவணம், திருவேடகம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு திருப்பரங்குன்றத் திற்குப் போய், அந்தத் தலத்திலிருக்கின்ற சுப்பிரமணியப் பெருமானை வணங்கிச் சிலநா ளங்கிருந்து, மீட்டும் மதுரைக்கு வந்தார். பின் உபய சந்நிதானங்களிடத்திலே அநுமதி பெற்றுக் கொண்டு பிரயாணப்பட்டுவரும்போது, வழியிலே யுள்ள திருப்புத்தூர் என்னுந் தலத்தை வணங்கிக் கொண்டு, மயூரகிரியென்று ஆன்றோரால் கூறப்

பட்ட குன்றக்குடிக்கு வந்தார். திருவண்ணுமலை யாதீனம் இந்தத் தலத்திலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வாதீனத்துப் பண்டார சந்நிதிகள், தமது திருமடத்திலே சிலநாளிருந்து போகும்படி கேட்டுக்கொண்டார்கள். அங்கிருக்கு நாளிலே, அவருடைய காலம் சித்தாந்த விஷயத்திலே பண்டாரசந்நிதிகள் செய்யும் ஆட்சேபங்களுக்குச் சமாதானஞ் சொல்லுதலிற் போக்கப்பட்டது. ஒருநாள் சைவசித்தாந்தத்தினது உயர்வையும், அதன்வழி ஒழுகுவோர் எய்தும் பயனையுங் குறித்து, அத்திருமடத்திலே பிரசங்கிக்கும்படி பண்டாரசந்நிதிகளாற் கேட்கப்பட்டுப் பிரசங்கஞ் செய்தார். அப்போது பண்டாரசந்நிதிகள், சாஸ்திரிகள், தம்பிரான்கள், சைவப் பிரபுக்கள், ஓதுவார்கள் முதலிய எத்திறத்தவருஞ் சிரத்தையோடு வந்திருந்து கேட்டார்கள். பிரசங்கஞ் செய்து முடிந்தபின், வேறு மடத்துப் பண்டாரசந்நிதிகள் தானும் அத்திருமடத்து வீதிவழியே பல்லக்கு ஏறிக் கொண்டுபோனல், தமது கட்டுப்பாடு அழிந்து போமென்று அதற்கிடங்கொடாத பண்டார சந்நிதிகள், பல்லக்கொன்று திட்டப்படுத்தி, சித்தாந்த சைவப் பிரவர்த்தகராகிய நாவலரை அதன்மேலேற்றி, தம்பிரான்கள், ஓதுவார்கள், சாஸ்திரிகள் முதலானவர்கள் சூழ்ந்து செல்ல, கட்டியத்தடி, வாணத்தடி, கோணத்தடி, வெள்ளிக்கைப்பந்தி முதலிய விருதுகளும், பெரிய மேளம் முதலிய வாத்தியங்களும் முன் செல்ல, பட்டணப் பிரவேசஞ் செய்வித்தார்கள். பின்னுஞ் சிலநாள் மடத்திலேயிருந்து, பண்டார சந்நிதிக

ளிடத்திலே விடைபெற்றுக்கொண்டு திருப்பெருந்துறைக்குப் போனூர். அங்குள்ள திருவாவடுதுறை ஆதீன மடத்திலிருந்த கட்டளைத் தம்பிரானுல் உபசரிக்கப்பட்டு, அம்மடத்திலேயிருந்து, காலந்தோறுஞ் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு வந்தார். இங்ஙனம் நிகழுநாளிலே, இராமநாதபுரம் இராமசுவாமிப்பிள்ளை திருவிளையாடற் புராணத்திலும், வன்ருெண்டச் செட்டியார் நன்னூல் விருத்தியுரையிலும் தங்களுக்குள்ள சந்தேகங்களைக் கேட்டு, நிவிர்த்தி பண்ணிக் கொண்டார்கள். அவ்விடத்தைவிட்டு நீங்கித் தொண்டைமான் புதுக்கோட்டைக்குப் போனூர்.

அங்கிருக்கும்போது நாட்டுக்கோட்டை வர்த்தகர்களால் நெடுங்குடிக்கும்பாபிஷேகத்தின் பொருட்டழைக்கப்பட்டு அரிமளத்தில் வந்திருந்த போது, அங்குள்ள ஆலயத்திலே சைவப் பிரசங்கஞ் செய்யும்படி அவர்கள் பிரார்த்தித்துக் கொண்டார்கள். அவர்கள் பிரார்த்தனைக் கிசைந்து, அங்கே போய்ச் சிவபெருமானுடைய மகிமைகளையும், அவரை வழிபடுவோர் தரிக்குஞ் சிவசின்னங்களின் வரலாறுகளையும் விரித்துப் பேசி, முடிவிலே அச்சின்னங்களைத் தரிப்பவர்கள் மாமிசபோசன மில்லாதவரா யிருத்தல் வேண்டுமென்று பிரசங்கித்தார். அப்பிரசங்கத்தைக் கேட்ட மாத்திரத்தே அநேகர் தங்கள் வீடுகளுக்குப் போனவுடன் மாமிசம் பாகம் பண்ணும் பாத்திரங்களை உடைத்துவிட்டு, அன்று தொடக்கம் மாமிச போசனத்தை விடுத்தார்கள். பின் நெடுங்குடி சென்று சுவாமிதரிசனஞ் செய்து

பிரசங்கம் பண்ணி மீட்டும் புதுக்கோட்டைக்கு வந்து, அங்கு நின்றும் புறப்பட்டு திரிசிராப் பள்ளி, திருவானைக்கா, தஞ்சாவூர் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு கும்பகோணம் வந்தார். அங்கே சுவாமிதரிசனஞ் செய்துகொண் டிருக்கு நாளிலே, திருக்கேச்சரத்துக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு மீட்டும் கும்ப கோணத்தில் வந்திருந்தார்.

நாவலர் கும்பகோணம் வந்திருக்கிறார் என்பதைக் கேள்வியுற்ற திருவாவடுதுறை யாதீனத்துப் பண்டார சந்நிதிகள், வித்துவான் களிற் சிறந்தவரென்று தமிழ்நாடெங்கும் புகழ் படைத்தவரும், தேவாரம் பெற்ற அநேக ஸ்தலங்களுக்குப் புராணஞ் செய்த மகா வித்துவானுமாகிய மீனாட்சிசுந்தரம்பிள்ளை யையும், சில ஓதுவார்களையும், அவரை மடத்துக் கழைத்துக்கொண்டு வரும்படி, அனுப்பி வைத்தார்கள். அனுப்பப்பட்டு வந்தவர்களால் அழைக்கப்பட்டு மடத்திற்குச் சென்று அங்கிருக்கு நாளிலே, பிரசங்கங்கள் செய்துகொண்டும், சித்தாந்த நூல்களிலும், இலக்கண இலக்கியங் களிலும் அவர்களுக்கு உள்ள சந்தேகங்களைத் தீர்த்தும் வந்தார். சந்தேக நிவிர்த்தி பெற்றவர் களுள் ஒருவரான நமசிவாயத் தம்பிரான் முன் சென்னபட்டணத்திலும் போயிருந்து சிலகாலம் அவரிடத்திலே பாடங் கேட்டவர். இப்போது அவர் மேற்படி ஆதீனத்து இரண்டாம் பட்டமா யிருக்கிறார்.

அத் திருவாவடுதுறையை விட்டு நீங்கிப் புள்ளிருக்குவேளூர் சென்று, சுவாமியை

வணங்கிக்கொண்டு புறப்பட்டு, பரசமய கோளரியாகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் திருவவதாரஞ் செய்தருளிய சீர்காழியின் எல்லையை அடைந்த மாத்திரத்தே கைகளைச் சிரசின்மீது குவித்து அந்தத் திருப்பதியை வணங்கி, பின்பு திருக்கோயிலினுள்ளே போய், அங்கெழுந்தருளியிருக்குந் தோணியப்பரையும், பெரியநாயகியம்மையையுந் தரிசித்துக்கொண்டு, சிதம்பரத்துக்குப் புறப்பட்டார். சிதம்பரம் வந்து சேர்ந்தவுடன், சில மாசங்களுக்கு முன்னே மேலைவீதியிலே விலைக்கு வாங்கப்பட்டிருந்த நிலத்திலே, இரத்தாட்சிஹு ஆவணிமீ 6உ ஒரு வித்தியாசாலை கட்ட ஆரம்பித்து, அடுத்த புரட்டாசி மாசத்திலே நிறைவேற்றினுர். அவ்வித்தியாசாலைக் கட்டடத்துக்கு வேண்டிய மரங்களெல்லாந் தச்சுவேலை முற்றமுடிப்பித்து இணுவில் வேங்கடாசலையராலே கொடுக்கப்பட்டன.

அங்கே ஐப்பசிமீ 28உ சுக்கிர வாரமும் சுக்கிலபக்ஷத் திரயோதசி திதியும், ரேவதி நக்ஷத்திரமுங் கூடிய சுபதினத்திலே, விருச்சிக லக்கினத்திலே, ''சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலை'' எனப் பெயர்கொண்ட பள்ளிக்கூடத்தைத் தாபித்தார். தில்லைவாழந்தணர்கள், மற்றைப் பிராமணர்கள், சைவாசாரியர்கள் முதலிய யாவருந் தங்கள் தங்கள் பிள்ளைகளைக் கல்வி கற்றற்கு இவ்வித்தியாசாலைக்கு அனுப்பினுர்கள். இவ்வித்தியாசாலையிலே கருவி நூல்கள் மாத்திரமன்றிச் சமய நூல்களும் படிப்பிக்கப்படுகிறபடியால், சைவசமயிகள் யாவரும்

வித்தியாசாலையில் மதிப்பும், அதன் தாபகர் மேல் அன்பும் வைத்தார்கள். திருவாவடுதுறை யாதீனம், தருமபுரவாதீனம், திருவண்ணமலை யாதீனம் முதலியவாதீனத்துப் பண்டார சந்நிதிகளும், மற்றைய விடங்களிலுள்ள சைவப் பிரபுக்களும், சிதம்பர தரிசனத்தின் பொருட்டு வரும்போதெல்லாம் வித்தியாசாலைக்கு வந்து, பிள்ளைகளைப் பரீக்ஷை செய்து, சமர்த்தர் எனக் காணப்பட்ட பிள்ளைகளுக்கு விலையேறப்பெற்ற புத்தகங்களைப் பரிசாகக் கொடுத்து, வித்தியா சாலையி னொழுங்கையும், அதிலே படிப்பிக்கும் உபாத்தியாயர்களின் திறமைகளையும், அதனைத் தாபித்தவருடைய நன்முயற்சிகளையும் பற்றி, வித்தியாசாலையிற்றானே பலசனங்க ளெதிரே பாராட்டி வியந்து பேசிப் போவார்கள். இவ் வித்தியாசாலைக் கட்டட முதலியவைகளைச் சிரத்தையோடும் நடத்தி வந்தவர், சிதம்பர வாசத்தின் பொருட்டு இதற்கு ஏறக்குறைய 20 வருஷத்துக்கு முன்னே யாழ்ப்பாணத்தினின்றும் போயிருந்த * காசிநாதபிள்ளை.

---

* இவர் யாழ்ப்பாணத்தைச் சார்ந்த பச்சிலைப்பற்று மணியகாரனின் புத்திரர். விவாகஞ் செய்த சில காலத் தால் மனைவி யிறக்கக் கண்டு, பிரபஞ்ச வாழ்விலே அமிழ்ந்திக் கிடத்தல் புத்தியன்றென்று கருதி, சிதம்பரம் போய், சிவபூசை எழுந்தருளப்பண்ணி, மந்திரக் கிரியா பாவனையுடன் பத்தியாய்ச் சிவபூசை பண்ணிக்கொண்டும், திரிகாலத்தினும் நியமமாகச் சுவாமி தரிசனஞ் செய்து கொண்டும், சுவாமிக்குப் பூமாலை கட்டிக்கொடுத்தல் முதலிய திருத்தொண்டுகளைச் செய்துகொண்டும் வந்தவர். இப்படியிருக்குங் காலத்திலே, **நாவலர்** வித்தியாசாலை தாபிக்கும் பொருட்டுச் சிதம்பரம் வந்தபோது, அங்கே

அம்மாசத்திலே சுவாமி தரிசனத்தின் பொருட்டுத் திருநாகைக்காரோணத்திற்குப் போயிருந்த பொழுது, நாட்டுக்கோட்டை வர்த்தகர்கள் சிலர், அவரைச் சிரத்தையோடும் உபசரித்து, சிதம்பர வித்தியாசாலைக்குத் தங்களாலியன்ற பொருளுதவி செய்தார்கள். அதை விட்டகன்று, அவருடைய சீஷர்களுள் ஒருவராகிய கா. வேலுப்பிள்ளையால் அழைக்கப்பட்டு, திருவேட்டக்குடிக்குப்போய், சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு தம்மோடு கூடச் சென்றவர்களுக்கு விடைகொடுத்த பின்பு, அந்தத் தலத்தை விட்டு நீங்கித் திருக்கடவூர் சென்று, அங்கும் சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு மீட்டும் சிதம்பரத்துக்கு வந்தார்.

---

இவருடைய சிவபத்தியைக் கண்டு, வித்தியாசாலைக் கட்டடத்தை நடத்தும்பொருட்டு இவரிடத்திலே பணத்தை ஒப்பித்து, விரைவில் முடிக்கும்படி கற்பித்தார். அதனை ஏற்றுச் சிரத்தையோடும் விரைவிலே நடத்தி முடித்தமை கண்டு, சிதம்பரம் விட்டுச் சென்னபட்டணம் போகும்போது, அவரையே வித்தியாசாலைக்கு அத்தியட்சராக நியமித்துவிட்டுப் போனார். சிதம்பரத்திலே வெகுகாலம் வாசஞ் செய்தவராதலானும், சிவபத்தியிற் சிறந்தவராதலானும், யாவரையும் வசீகரிக்கத்தக்க நற்குண மிருந்தமையானும், வித்தியாசாலையின் உபாத்தியாயர்களும் பிள்ளைகளும் அவருடைய கட்டளைகட் கமைந்து நடந்தார்கள். **நாவலர்** சுக்கிலஹு யாழ்ப்பாணம் வரும்போது அவருடன் கூடிக்கொண்டு வந்து, அவருறைவிடத்திலே அவருக்கு அநேக உதவிகளைச் செய்துகொண்டிருக்குங் காலத்திலே, சுரத்தாற் பீடிக்கப்பட்டு ஆறுநாட் சுகவீனமாயிருந்து, பிரமாதிஹு வைகாசிமீ சிவபத மடைந்தார். அவருடைய அபரக் கிரியைகள் யாவும் **நாவலரால்** சிறப்பாக நடப்பிக்கப்பட்டன.

சிதம்பராலய பூசகர்களுள்ளே சிலர், சிவாகமங்களை நிந்தித்து, அவைகளிற் கூறப்படும் தீக்ஷைகளினல் யாதொரு பயனில்லையென்றும், அக்கருத்துப் பற்றியே 'நாங்கள் அவைகளைப் பிரமாணமெனக் கொள்ளாதும் தீக்ஷைகளைப் பெருதும் இருக்கின்ருே'மென்றும், சிதம்பராலய கிரியைகள் முழுதும் வைதிகக் கிரியைகளே யென்றுஞ் சொல்லிக்கொண்டு திரிந்தார்கள். அசேதனதிலகர்களாகிய சிலர் இவர்களுடைய சொல்லையே மெய்யென நம்பியிருந்தார்கள். அந் நிந்தைகளைக் கண்டுங் கேள்விப்பட்டு மறிந்த மாத்திரத்தே சிவாகம நிந்தை செய்வோரைக் கண்டித்தலே அவைகளை யருளிச்செய்த சிவ பிரானுடைய கட்டளையென்று தெளிந்து, அப் பூசகர்கள் அநுட்டிக்கும் வைதிகக் கிரியைகளைச் சொல்லும் வேதம் பொதுநூலென்றும், முத்தி யின்பத்தைக் கொடுக்கமாட்டா தென்றும், அவர்கள் நிந்திக்கின்ற சிவதீக்ஷைகளைப் பற்றிப் பேசுஞ் சிவாகமமே சிறப்புநூலென்றும், அதுவே பதி பசு பாசமென்னுந் திரிபதார்த்த லட்சணங் களைப் பற்றிச் சொல்வதென்றும், பரார்த்த பூசைக்கு விதிகள் அதிற்ருனே சொல்லப்பட்டிருக் கின்றனவென்றும், அச்சிவாகமத்திற் பேசப்படு கின்றனவாகிய தீக்ஷைகளே எத்தீக்ஷையினுஞ் சிறந்தவை யென்றும், அவைகளே பாசம் மூன் றையுந் தவிர்ப்பனவென்றும், சிதம்பராலயக் கிரியைகளின் பொருட்டு ஆதிகாலத்திலே தில்லை வனத்திலே சிவபெருமான் தமது அருட்சத்தி யாகிய சிவகாமியம்மையார் காணத் திரு நிருத்தஞ் செய்யத் தரிசிக்கப்பெற்றவராகிய

பதஞ்சலி மகாமுனிவர் சிவாகம முறைப்படி ஒரு பத்ததி செய்தருளினுரென்றும், ஆதியிலே யிருந்த தில்லைவாழந்தணர்கள் சிவதீக்ஷைகளைப் பெற்றிருந்தார்களென்றும், இப்போதுள்ளவர்கள் சிவாகம அறிவுஞ் சிவதீக்ஷையு மில்லாது பூசை செய்தல் சிவாகமத்துக்குஞ் சிவாகமத்தைச் சிர மேற்கொண்ட முனிவர்களுடைய அனுஷ்டானத் துக்கும் விரோதமென்றும், மார்கழிமீ ரதோற்சவ தினத்திற்கு முதற்றினமாகிய உற்சவதினத்திலே, வெகு சனங்களெதிரே, சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலையிலே, அதிப் பிரபல நியாயங்க ளோடும் எடுத்துக்காட்டி, பூசகர்களாற் சொல் லியவைகளெல்லாவற்றையுங் கண்டித்துப் பிர சங்கித்தார். அந்த ஸ்தலத்திலே சிலநாளிருந்து, பின் சென்னபட்டணம் போனுர்.

சிதம்பராலய பூசகர்களுடைய சிவநிந்தை, சிவாகம நிந்தை, சிவனடியார் நிந்தை யெல்லா மொருபுறத்திருக்க, கருங்குழி இராமலிங்கபிள்ளை யென்னு மொருவர் தாஞ் சிவானுபூதி பெற்றவ ரென்றும், ஓதாதுணர்ந்தவரென்றுந் தம்மைச் சொல்லியும், அம்மட்டில் நில்லாது உள்ளபடி சிவானுபூதிச் செல்வர்களாகிய திருஞானசம்பந்த மூர்த்திநாயனுர், திருநாவுக்கரசுநாயனுர், சுந்தர மூர்த்திநாயனுர், மாணிக்கவாசக சுவாமிகள் முதலிய உண்மை நாயன்மார்கள் சிவானுக்கிர கத்தைப் பெற்று, அவ்வநுக்கிரகத்தினுலே அவர்க ளருளிச் செய்த அருட்பாக்களைத் தள்ளித் தாஞ் செய்துகொண்ட பாக்களை ஆன்மார்த்த பூசை பரார்த்தபூசைகளிலும் உற்சவங்களிலும்

சந்தியாகாலங்களிலும் மூடசனேந்திரர்களாகிய சிலரைப் பாராயணம் பண்ணும்படி செய்தும், தம்மைத் திருவருட்பிரகாசவள்ளலென்றும், தாஞ் செய்த பாக்களை அருட்பாக்களென்று தாமாகச் சொல்லியும் பிறரைக்கொண்டு சொல்லுவித்தும், அம்மட்டில் நில்லாது மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த திருவாசகம், திருக்கோவையார் என்னுமிரண்டையும் சபாநாயகர் தமது அருமைத் திருக்கரங்களால் எழுதியதுபோல வந்து எழுதுவாரென்றும், அவைகளை எழுதும் பொருட்டுப் பொன்னேடும் பொன்னெழுத்தாணியுந் தாம்செய்த ரசவாதத்தினலே பெற்றுக்கொண்ட பொன்னினலே செய்தல் வேண்டுமென்றும், அம்மட்டோ அத்திரவியத்தைக் கொண்டு தாமே பார்பதீபுரமெனப் பெயர்பெற்ற ஓர் ஆலயமும் அதனுள்ளே ஒரு கனகசபையுங் கட்டிச் சிதம்பரசபாநாயகரை அதிலே எல்லாருங்காண நடுப்பகலில் எழுந்தருளி வந்து நின்று நிருத்தம் பண்ணும்படி செய்வாரென்றும், அம்மட்டில் நில்லாது செத்தவர்களை உயிர்ப்பிப்போமென்றும், புத்திரரில்லாதவர்களுக்குப் புத்திரபாக்கியங் கொடுப்போமென்றும், குருடர், செவிடர் முதலானவர்களுடைய குறைவுபாடுகளை நீக்குவோமென்றும், பசித்தவர்களெல்லாருக்கும் அன்னங் கொடுப்போமென்றும், தண்ணீரால் விளக்கெரித்தோமென்றும், பிரமவிட்டுணுக்களாலுந் தேடி அறிதற்கரிய கடவுள் பருக்கைக் கற்கணிறைந்த சென்னபட்டணத் தெருவிலே அர்த்தராத்திரியிலே நடந்துவந்து தமது வீட்டுக் கதவைத் திறப்பித்து, மகனே! இதை வாங்கிக்கொள் என்று தமக்கொன்று

தந்தாரென்றும், அம்மட்டில் நில்லாது மாணிக்க வாசக சுவாமிகள் சிதம்பரத்திலே சபாநாயக ருடன் இரண்டறக் கலந்தது போலத் தாமுங் கலப்போமென்றும், இன்னும் இவைபோலப் பல பிரயோசனமற்ற வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டு திரிவாராயினர்.

இராமலிங்கபிள்ளை தமக்கு இட்டுக்கொண்ட எவ்வெப் பெயர்களையாவது, தாமெவ்வளவோ அற்புதங்களைச் செய்தோம் செய்கின்றோம் செய் வோமென்று சொல்வதையாவது, தம்முடைய பாக்கள் மிகச் சிறந்தவை யென்பதையாவது, சிவபெருமான் சாக்கிரத்திலே தம்மோடு கலந்து பேசுகின்றா ரென்பதையாவது பொறுப்பினும், சிவஞானச் செல்வர்களாகிய சமயாசாரியர்கள் திருவாய்மலர்ந்தருளிய அருட்பாக்களை நிறுத்தித் தமது பாக்களைப் பாராயணம் பண்ணுவித்தலை யும், தம்மை அச் செல்வர்களோடு சமத்துவ முடையர் என்பதையும், தமது பாக்கள் அவர்க ளுடைய பாக்களினுஞ் சிறந்தவை யென்பதையும் ஒருவாற்றானும் சகிக்கலாற்றாத நாவலர், பல சனங்களெதிரே, தேவார திருவாசக முதலியவை பசுகரண நீங்கிச் சிவகரணம் பெற்ற நாயன்மார்க ளாலே அருளிச் செய்யப்பட்டன வென்றும், இவைகளே சிவாலய நித்தியநைமித்தியங்களினும் சந்தியாவந்தனம் சிவபூசை முதலியவைகளிலும் ஓதத் தகுவனவென்றும், இவைகளே வேதத்தினும் பார்க்கத் தமக்கு அதிக பிரீதி யுள்ளவைகளென்று எமது பிதாவாகிய சிவபெருமான் தமது அருட் சத்தியும் நமது உலகமாதாவுமாகிய உமா

தேவியார் கேட்கும்படி திருவாய்மலர்ந்தருளிய சிவரகசியத்திலேகூறப்பட்டிருக்கின்றன என்பவை முதலிய பல முக்கியப் பிரமாணங்களைக் காட்டிப் பிரசங்கித்தார். அப்பிரசங்கங்களுக்குப் பின்பு பிள்ளையின் மாணுக்கர்கள் சிலர் வேண்டிய வாறே அவருக்கு விரோதமாகத் தூஷித்தார்கள். தூஷித்தும், தமது மனச்சான்றுக்கு விரோதமில் லாமலும் பரங்கருணைத் தடங்கடலாகிய சிவ பெருமானின் திருவருளையே முன்னிட்டு, அவ ரால் அருளிச்செய்யப்பட்ட வேதசிவாகமங்களின் விதிவிலக்குகளையும், அவருடைய மெய்யடியாரின் மகிமைகளையும் பேசினுராதலால், அவர்களுடைய தூஷணம் அவருக்கு ஒரு தீமையையுஞ் செய்திலது. அப்போது அவருக்கு வயசு 42 ஆயிற்று.

சைவப்பிரகாச வித்தியாசாலைகளுக்கு *மூன்ரும் பாலபாடம் அவசியம் வேண்டியிருந்தபடியால், வேத சிவாகமங்களிலும், இதிகாச புராணங்களி லும், நீதிநூல்களிலும் உள்ளவைகளைத் திரட்டி வசனரூபமாக வெழுதி, இறுதியிலே ஔவையா ரருளிச்செய்த வாக்குண்டாம் நல்வழியையும், சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச்செய்த நன்னெறி யையும் உரையுடன் சேர்த்து அச்சிட்டார். அதன்பின் பெரியபுராணம் சூசனத்தோடும், கந்தபுராணம் திருவிளையாடற் புராணங்கள் வசனரூபமாகவும் அச்சிற் பதிப்பித்துக்கொண்டு வந்தார். அங்ஙனம் வேலை நடந்துவருங் காலத் திலே, பெரியபுராண சூசனத்தில் அதிக கவனஞ்

---

* மூன்ரும் பாலபாடம் என்றெழுதியதே இப்பொழுது நான்காம் பாலபாடம் என வழங்குவது.

செலுத்திவந்தபடியால், சரீர மெலிவும், நித்திரை யின்மையும், அன்னத்துவேஷமும் உண்டுபட்டன. அவ் வேதுவினால் அவை முடியாமல் இன்னுங் குறைவேலையாயிருக்கின்றன.* நாலைந்து மாசம் அவ்வேலைகளைச் செய்யாதிருந்து, தமக்கு உண்டு பட்ட நோய்களைத் தீர்த்துக்கொண்டு, பின்பு பொன்னுச்சாமித்தேவருடைய வேண்டுகோளின் படி சேதுபுராணத்தைப் பரிசோதித்து அட்சயவூ புரட்டாதிமீ த்திலும், திருவாவடுதுறைச் சிவ ஞானமுனிவ ரருளிச்செய்த இலக்கண விளக்கச் சூறுவளி, தொல்காப்பியச் சூத்திர விருத்தி என்னு மிரண்டையும், மேற்படி ஆதீனத்து சுவாமிநாத தேசிகர் அருளிச்செய்த இலக்கணக்கொத்தையும் இப்போது எழுந்தருளியிருக்கும் மகாசந்நிதானம் சுப்பிரமணிய தேசிகரது கட்டளைப்படி பரிசோ தித்து, அட்சயவூ கார்த்திகைமீ த்திலும் அச் சிட்டு வெளிப்படுத்தினார். இன்னும் அம்மாசத் திலே ஏட்டுப்பிரதியிலுள்ள கந்தபுராணத்தையும், வேறநேக புத்தகங்களையும் பரிசோதித்தும், நூதனமாக வியற்றியும் வெளிப்படுத்திய பின்பு, அடுத்த மார்கழி மாசத்திலே ஆர்த்திரா தரிசனத் தின் பொருட்டுச் சிதம்பரத்துக்கு வந்தார். அப்போது அத்தேசமெங்கும் மகாமாரி யுண்டு பட்டதால், அநேகாயிரக்கணக்கான சனங்கள்

---

* அவற்றுள் கந்தபுராணவசனம் சிதம்பரம் நாவலர் வித்தியாசாலை மானேஜர் பொன்னம்பலபிள்ளையாலும், திருவிளையாடல் வசனம் யாழ்ப்பாணம் நாவலர் சைவப் பிரகாச வித்தியாசாலை மானேஜர் த. கைலாசபிள்ளை யாலும் பூர்த்திசெய்யப்பட்டன. பெரியபுராண சூசனம் இன்றுங் குறையாயே இருக்கின்றது.

ஒவ்வொரு நாளும் இறப்பாராயினர்கள். இப்படி யிருக்கவும் பகற்காலத்திலே தமது வித்தியாசாலே யிற் போயிருந்து, பயப்படவேண்டா மென்று சனங்களுக்குத்தைரியஞ் சொல்லுதலிலும், இராக் காலத்திலே தமது உறைவிடத்தில் வருவோர் களுக்குக் கடவுளுடைய மகிமையை யெடுத்துப் பிரசங்கிப்பதிலும் பொழுதுபோக்குவார். அப் போது அவருக்கு வயசு 44 ஆயிற்று.

பின்பு, சென்னபட்டணம்போய் வசிக்குங் காலத்திலே அங்குள்ள சிவபத்திமான்களிற் பலர், சைவப் பிரசங்கஞ் செய்யும்படி பிரார்த்தித்துக் கொண்டார்கள். அவர்கள் பிரார்த்தனேக்குடன் பட்டு, தமதுறைவிடத்திலே சுக்கிரவாரந்தோறுஞ் சைவப்பிரசங்கங்கள் செய்தார். அப்பிரசங்கங்கள் எல்லாருக்கும் பயன்பட்டன வென்பது சத்தியம். அடுத்த வருஷமாகிய பிரபவ வருஷத்திலே சில புத்தகங்கள் அச்சிட்டு வெளிப்படுத்தினர். இவ் வருஷத்திலே யாழ்ப்பாணத்தினுள்ள சைவப் பிரகாச வித்தியாசாலேயின் முதலுபாத்தியாயரா யிருந்த மு. தில்லேநாதபிள்ளே தமது நாற் பத்து நான்காம் வயதாகிய பிரபவஞ ஆனிமீ தேகவியோகமானர். அவருடைய இடத்துக்கு மா. வைத்தியலிங்கபிள்ளே நியமிக்கப்பட்டார். சென்னபட்டணத்திலுள்ள சிவபத்திமான்களிற் சிலர், தொண்டைநாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவஸ்தலங்கள் கிலமாயிருத்தலால், அவை களே ஜீர்ணோத்தாரணஞ் செய்யும்பொருட்டு, பொருள்சேர்க்க விரும்பி, பிரபவஞ மார்கழிமீ 22உ சென்னபட்டணத்திலே, பெத்துநாயக்கன் பேட்டையிலே, சுப்பிரமணிய முதலியார் தெரு

விலே, கோ. வி. அய்யாசாமி முதலியார் வீட்டிலே, ஒரு சபைகூட்டி, அதற்குத் திருத்தொண்டை நாட்டுப் பதிபுண்ணிய பரிபாலன சபையெனப் பெயர்தந்து, அச்சபைக்கு நாவலரை அக்கிராசனுதி பதியாய் வீற்றிருக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். அச்சபைக்கு அக்கிராசனுதிபதியாயிருந்து சபையின் விருத்தாந்தங்கள் வாசிக்கப்பட்டபின்பு, அச் சிவபுண்ணியத்தின் பெருமையைச் சபையார்களுக்குப் புலப்படும்பொருட்டுப் பிரபல நியாயங்களோடும் எடுத்துப் பிரசங்கித்தார்.

அப்பிரசங்கங்கள் வருமாறு :-

'' கனம்பொருந்திய சைவசமயப் பிரபுக்களே !

தங்கள் தங்கள் சமயம் இஃது எனவும், அதற்குரிய கடவுள் இவர் எனவும், அக்கடவுள் ஆன்மாக்கள் செய்யும் வழிபாட்டைக் கொண்டருளும் முறைமை இஃது எனவும், அவரை ஆன்மாக்கள் வழிபடும் முறைமை இஃது எனவும், அறிதலும், அறிந்தபடி அநுட்டித்தலும், எல்லாச் சமயத்தாருக்கும் கடனுகும். ஆதலினுல் நம்முடைய சமயக்கிரமத்தை அறிதலும், அறிந்தபடி அநுட்டித்தலும், சைவசமயிகளாகிய நமக்குக் கடனுமே.

''நாமெல்லாம் சைவர்கள். சைவர் என்னுஞ் சொற்குச் சிவனை வழிபடுவோர் என்பது பொருள். ஆகவே, சிவனை வழிபடுவோர் யாவர், அவரெல்லாஞ் சைவரெனப்படுவர். சைவர் ஆதிசைவரும், மகாசைவரும், அநுசைவரும், அவாந்தரசைவரும், பிரவரசைவரும், அந்தியசைவரும் என ஆறுவகைப் படுவர். அவர்களுள்ளே ஆதிசைவராவார் அநாதி

சைவராகிய சதாசிவமூர்த்தியுடைய ஐந்து திருமுகங்களிலுந் தீக்ஷிக்கப்பட்ட பஞ்சரிஷிகோத்திரத்துச் சிவப்பிராமணர். மகாசைவராவார் வைதிகப் பிராமணருள்ளே சிவதீக்ஷை பெற்றவர். அநுசைவராவார் க்ஷத்திரியருள்ளும் வைசியருள்ளும் சிவதீக்ஷை பெற்றவர். அவாந்தர சைவராவார் சூத்திரருள்ளே சிவதீக்ஷை பெற்றவர். பிரவரசைவராவார் அறுவகையநுலோமருள்ளும் சிவதீக்ஷை பெற்றவர். ஒழிந்த சாதியாரெல்லாருள்ளும் சிவபெருமானை வழிபடுவோர் அந்திய சைவரெனப்படுவர். இதனுற் பிராமணர் முதற் புலையரீருகிய எல்லாச்சாதியாரும் சிவபெருமானை வழிபடுதற்கு உரியர்கள் என்பது பெறப்பட்டது. ஆயினும், வழிபடற் கிரியைகள் வருணந்தோறும் சில வேறுபாடுடையனவாம்.

''சிவபெருமான் புறத்தே சிவலிங்க முதலிய திருமேனியும் தமது மெய்யடியாருடைய திருவேடமும் இடமாகக்கொண்டு நின்றும், அகத்தே உயிர் இடமாகக் கொண்டு நின்றும், ஆன்மாக்கள் செய்யும் வழிபாட்டைக் கொண்டருளுவர். லிங்க என்பது சித்திரித்தல் எனப் பொருள் படுதலால், படைத்தல் காத்தல் முதலியவைகளினுலே உலகத்தைச் சித்திரிப்பதாகிய சிவத்தினுடைய பிரபாவமே இலிங்கம் எனப்படும். அவ்விலிங்கத்தினது விளக்கத்துக்கு இடமாகிய வாணம் சைலம் முதலியவைகளும் உபசாரத்தினுல் இலிங்கம் எனப்படும்.

''இலிங்கம் ஆன்மார்த்தலிங்கம் எனவும், பரார்த்த லிங்கம் எனவும் இரண்டு வகைப்படும்.

அவைகளுள் ஆன்மார்த்த லிங்கமாவது ஆசாரியரிடத்தே எழுந்தருளப் பண்ணிக்கொண்டு மரண பரியந்தம் தன்பொருட்டுப் பூசிக்கப்படும் இலிங்கமாம். இஃது இட்டலிங்கம் எனவும் பெயர்பெறும். பரார்த்தலிங்கமாவது பிறர் பொருட்டுச் சர்வ சங்கார காலமளவும் பூசிக்கப்படும் இலிங்கமாம். அதுவே திருக்கோயிலுள்ளிருக்கும் இலிங்கம். அது சுயம்பு, காணம், தைவிகம், ஆரிடம், மானுடம் என ஐவகைப்படும். சிவலிங்கம் அசைவில்லாததாதலினுலே தாவரம் எனப்படும்.

''சைவசமயத்தை அடைந்தவர் சிவபெருமானுடைய திருவடியைச் சேர்தற்குரிய மார்க்கம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு வகைப்படும். அவைகளுள்ளே, சரியையாவது புறத் தொழிலினுலே உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. கிரியையாவது புறத்தொழில் அகத்தொழில் என்னும் இரண்டினுலும் அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. யோகமாவது அகத் தொழிலினுலே அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. ஞானமாவது புறத்தொழில் அகத் தொழில் என்னும் இரண்டுமில்லாமல் அறிவுத் தொழின் மாத்திரத்தினுலே அம் மூன்று திருமேனிக்கும் மேலாய் அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாய் நிறைந்து நிற்கின்ற சிவத்தினிடத்தே செய்யும் வழிபாடு. இந்த நான்கு மார்க்கத்தில் ஒழுகுவோர்களே மெய்யடியார்கள். இவ்வடியார் திருமேனி அசைவுடையதாதலாற் சங்கமம் எனப்படும்,

''சிவபெருமான், எங்கும் வியாபகமாய் நிற்பினும், சிவலிங்க முதலிய திருமேனியும் மெய்யடியார் திருவேடமுமாகிய இவ்விரண்டிடத்து மாத்திரமே தயிரில் நெய்போல விளங்கிநிற்பர்; மற்றையிடங்களினெல்லாம் பாலில் நெய்போல வெளிப்படாது நிற்பர். ஆதலினாலே, சைவசமயிகளாகிய நாமெல்லாம் நமது பரம பதியாகிய சிவபெருமானை இலிங்கமும் சங்கமமுமாகிய இவ்விரண்டிடத்தும் விதிப்படி சிரத்தையோடு வழிபடல் வேண்டும்.

''இவ்வழிபாடு மேற்கூறிய சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு மார்க்கத்தாராலும் செயற்பாலதேயாம். மலநீங்கிய ஞானிகளும், பூர்வமலவாசனை தாக்காமைப் பொருட்டும், சிவானந்தம் மேன்மேல் வளர்தற் பொருட்டும், சிவலிங்கமுதலிய திருமேனியையும், மெய்யடியார் திருவேடத்தையும் வழிபடல் வேண்டுமென்று சிவஞானபோத முதலிய ஞான நூல்களில் உணர்த்தப்பட்டது. நித்திரை செய்வோர் கையிற் பொருள் அவரறியாது தானே நீங்குதல் போலச் சிவஞானிகளுக்குச் சரியாதிகள் தாமே தவிர்வனவன்றி அவர் அவைகளைத் தவிர்ப்பாரல்லர். சரியாதிகளைத் தாமே விடுத்தவர் நரகத்து வீழ்வர். இவ்வுண்மை உமாபதிசிவாசாரியர் அருளிச்செய்த சங்கற்ப நிராகரண முதலிய உண்மை நூல்களினாலே துணியப்படும்.

''ஒரு பிரபுவினுடைய பணிகளுள்ளே உட்டொழில் செய்வார் புறத்தொழிற்கும் உரியராவர்; புறத்தொழில் செய்வார் உட்டொழிற்கு

உரியராகார். அதுபோலவே சிவபெருமானுடைய உண்மைப் பணிகளாகிய ஞான முதலிய நான்கனுள்ளும் மேற்பணி செய்வார் கீழ்ப்பணிக்கும் உரியராவர்; கீழ்ப்பணி செய்வார் மேற்பணிக்கு உரியராகார். ஆதலினால், ஞானி ஞான முதலிய நான்கினுக்கும் உரியன்; யோகி யோக முதலிய மூன்றினுக்கும் உரியன்; கிரியாவான் கிரியை முதலிய இரண்டற்குமுரியன்; சரியாவான் சரியையொன்றற்கே உரியன் என்பது பெறப்படும். இவ்வாறே சிவஞானசித்தியாரினும் செப்பப்பட்டது. இதனாலே திருக்கோயிலினுள்ளிருக்கும் சிவலிங்கப் பெருமானை வழிபடல் ஞானி முதலிய நான்கு திறத்தாருக்கும் இன்றியமையாக் கடனேயாம் என்பது துணியப்பட்டது. சிவாநுபூதிப் பெருவாழ்வுடையர்களாகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசக சுவாமிகள் என்னுஞ் சமயாசாரியர்கள் நால்வரும் தலந்தோறுஞ் சென்று சிவலிங்கப்பெருமானை வணங்கித் திருப்பதிகஞ் செய்தமையே இதற்குச் சான்றாகும். இது ஞானத்திற் சரியை எனப்படும். அது சதமணிக்கோவையிலே,

வெண்பா

''வன்றொண்டர் சம்பந்தர் வாகீசர் மற்றுமுளோர்
பொன்றரிய ஞானம் புகுந்திருக்கச்—சென்று
பதிதோறும் பாடிப் பணியுமதென் மாட
மதிதோ யருட்டுறையாய் வந்து.''

என்னும் வினாவாலும் ''ஞானத்திற் 'சரியை'' என்னும் விடையாலும் அறிக.

"சிவலிங்க வழிபாடு நான்கு பாதத்தாராலும் செய்யப்படுமாயினும், அஃது அவரவர் கருத்து வகையால் வேறுபடும். படவே, அவருக்குச் சிவ பெருமான் அருள் செய்யும் முறைமையும் வேறு படும். அதனைச் சிறிது சொல்வாம். சரியையா ளர்கள் பகுத்தறிதலில்லாமற் சிவலிங்க முதலிய திருமேனியே சிவமெனக் கண்டு வழிபடுவர்கள்; அவர்களுக்குச் சிவபெருமான் அங்கே வெளிப் படாது நின்று அருள்செய்வர். கிரியையாளர்கள் அருவப்பொருளாகிய சிவபிரான் ஈசான முதலிய மந்திரங்களினலே சிவலிங்க முதலிய திருவுருக் கொண்டார் என்று தெளிந்து மந்திர நியாசத்தி னல் வழிபடுவர்கள்; யோகிகள் யோகிகளுடைய இருதயமெங்கும் இருக்கும் சிவபிரான் இந்தத் திருமேனியிலும் இருந்து பூசை கொண்டருள்வர் என்று தெளிந்து சாத்திய மந்திரங்களினல் வழி படுவர்கள்; இவ்விரு திறத்தார்களுக்கும் சிவ பெருமான் கடைந்தபோது தோன்றும் அக் கினியும் கறந்தபோது தோன்றும் பாலும்போல அவ்வம் மந்திரங்களினல் அவ்வவர் விரும்பிய வடிவமாய் அவ்வத் திருமேனிகளில் அவ்வப் போது தோன்றி நின்று அருள்செய்வர். ஞானிகள் இம் முத்திறத்தாரும்போல ஓரிடமாகக் குறியாது அன்புமாத்திரத்தால் அங்கே வழிபடுவர்கள். அவர்களுக்குச் சிவபெருமான் கன்றை நினைந்த தலையீற்றுப் பசுவின் முலைப்பால்போலக் கருணை மிகுதியினல் அவ்வன்பே தாமாகி எப்பொழுதும் வெளிப்பட்டு நின்று அங்கே அருள்செய்வர்.

"ஆரண வுருவார் தில்லை யம்பல மெய்தப் பெற்றோ
ரோருணர் வாவ ரென்று மொன்றல ரொன்று ரல்லர்
காரண ராகா ரொத்த கருத்திலர் நிருத்த வின்பப்
பூரண ரவர்கள் வாழும் புவனமும் பொதுவா மன்றே."

என்னும் கோயிற்புராணத் திருவிருத்தத்தினாலே சிவாநுபூதிமான்கள் எழுந்தருளியிருக்குந் தலமும் சிதம்பரமாமென்று அறிவுறுத்தப்பட்டது. அங்ஙனமாகவும், சிவாநுபூதிமான்களாகிய சமயாசாரியர்கள் தலந்தோறுஞ் சென்று சிவலிங்க வழிபாடு செய்தார்களாயின், சரியையாளர் கிரியையாளர்களாகிய நம்போலிகட்குப் பேசவேண்டுவதென்னை! இங்ஙனமாகவும், தற்காலத்திலே சிலர் பரஞானமாகிய அநுபவ ஞானத்தை அடையாதும், அபரஞானமாகிய சாத்திரஞானத்தையும் குருசந்நிதியிற் கிரமமாகப் பெறாதும், தங்களை ஞானிகளெனத் தங்கள் வாயினாலே பாராட்டிச் சரியை கிரியைகளை இகழ்ந்து எரிவாய் நரகத்துக்கு இரையாகுகின்றார்கள். அது நிற்க.

"ஞானத்தின் மிக்க முத்தி நெறியும் ஞானாசாரியரின் மிக்க ஆசாரியரும் இல்லாமையாலும், ஞானாசாரியர்களுள்ளும் மிக மேலாயினோர்கள் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் முதலிய சமயகுரவர்களே யாதலாலும், காமுகனாயினோன் தன்னைப் புகழ்ந்து தன்னாலுரைக்கப்பட்ட வாக்கினும் தன் காமக்கிழத்தியர்வாய்த் தோன்றிய வாக்கில் விருப்பமிக்குடையனாய் அதனால் வசீகரிக்கப்படுமாறுபோலச் சிவபெருமான் தம்மைப் புகழ்ந்து தம்மாலுரைக்கப்பட்ட வேதத்தினும் தம் மெய்யன்பர்களாகிய சமயாசாரியர்கள் வாய்த் தோன்றிய தேவார திருவாசகங்களில்

விருப்பமிக்குடையராய் அவைகளால் வசீகரிக்கப் படுவராதலாலும், அவர்களால் வணங்கப்பட்டு அவர்கள் திருப்பதிகங்களைப் பெற்ற சிவஸ்தலங் களே உத்தமோத்தம சிவஸ்தலங்களாகும்.

''ஆதலினால், சைவசமயிகளாகிய நாமெல் லாம், அந்தச் சிவஸ்தலங்களை விதிப்படி சிரத்தை யோடு வழிபடுதலும், அவைகளுள்ளே கிலமாயின வைகளை ஜீர்ணோத்தாரஞ் செய்தலும், நித்திய பூசை முதலியவைகள் இல்லாத ஸ்தலங்களிலே நித்திய பூசை முதலியவை நடத்துவித்தலுமே உத்தமோத்தம சிவபுண்ணியங்கள்.

''திருக்கோயின் முதலியவை அழிந்தால், அவைகளை முன்போலச் செய்தவர் பெறும்பயன் அவைகளை முன்செய்தவர்கள் பெற்ற பயனிலும் ஆயிரமடங்கதிகமாகும். திருக்கோயின் முதலிய வைகளிலே ஒருறுப்புக் கிலமாயின், அதனை முன்போலச் செய்தவர் பெறும்பயன் முன்செய் தவர் பெற்ற பயனிலும் நூறுமடங்கதிகமாகும்.

இதற்குப் பிரமாணம் :

சிவபுண்ணியத்தெளிவு

'மாதவர் மடங்க ளாதி
வரதன்மந் திரங்க ளாதி
நாதமா மிலிங்க மாதி
நளினபுட் கரிணி யாதி
சேதமுற் றிடின்முன் போலச்
செய்கின்றோர்க் குறும்ப லந்தா
னேதுமுன் செய்தோர் தம்மி
லாயிரங் குணித மோங்கும்.'

'உரைத்திடு மடங்க ளாதி
யுறுப்பினிற் சிதையி னூலிற்
றெரித்திடு முறையே நன்றுத்
தெளிவுறச் செய்கின் றோர்க்கு
வரைத்திடின் முன்னஞ் செய்தோர்
மருவிடும் பலத்தின் மேலாய்
விரித்திடும் பலமு நூறு
மடங்கென விளம்பு மாதோ.'

''சிவாலயங்களிலே நித்திய பூசை முதலியவை காலந்தோறுந் தவறுமற் சிரத்தையோடு விதிப்படி செய்யப்படுமாயின், உலகத்திலே காலந்தோறும் மழை தவறுமற் பெய்யும்; நென் முதலாகிய வளங்கள் பெருகும்; ஆரோக்கியம் உண்டாகும்; அரசநீதி நடக்கும்; நித்தியபூசை முதலியவைகள் சிரத்தையோடு விதிப்படி செய்யப்படாதொழியின், உலகத்திலே மழையின்மையும் பஞ்சமும் மசூரிகை விஷூசி முதலிய கொடு நோய்களும், கன்னங் களவு முதலிய தீத்தொழில்களுமே விருத்தியாகும்.

இதற்குப் பிரமாணம்:

திருமந்திரம்

'ஆற்றரு நோய்மிகு மவனி மழைகுன்றும்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்றிருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைக டப்பிடிற் றனே.'

'முன்னவனுர் கோயிற் பூசைகண் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரிவளங் குன்றுங்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினிக்
கென்னரு ணந்தி யெடுத்துரைத் தானே.'

''கிலமாயுள்ள ஸ்தலங்களை ஜீர்ணோத்தாரஞ் செய்தற்கும் நித்தியபூசை முதலியவை இல்லாத ஸ்தலங்களிலே நித்தியபூசை முதலியவை நடத்து தற்கும் பெரும்பொருள் வேண்டுமாதலாலும், தனித்தாயினும் சிலர் மாத்திரங் கூடியாயினும் இவைகளை முடித்தல் இயலாமையாலும், சைவ சமயிகளாகிய நம்மவர்களெல்லாம் ஒற்றுமை யுடையவர்களாய் ஒருங்குகூடல் வேண்டும். அப் படிக் கூடாதவழி இக் கருத்துச் சித்திபெறாது. தமிழர்களாகிய நம்மவர்கள் யாதாயினும் ஒரு கருமத்தை நடத்துதற்கு ஒருங்குகூடுதல் அரிது. ஒரோவழிக்கூடினும் ஐக்கியத்தோடு நிலைபெற்று எடுத்த கருமத்தை நிறைவேற்றல் மிக அரிது. அவர்கள் ஐக்கியமேயின்றிப் பெரும்பான்மையுந் தங்கள் உள்ளத்தில் விளையும் பகைமையையே பாராட்டிக் கலகம் விளைத்து எடுத்த கருமத்தைக் கைநெகிழ விடுதலே வழக்கம். இது பற்றியே நம்மவர்கள் லௌகிகநெறி, வைதிகநெறி என் னும் இரண்டினும் மேன்மையடையாது, அன்னிய தேசத்தார்களும் அன்னிய பாஷையாளர்களும் அன்னிய சமயத்தார்களுமாய் உள்ளவர்களாலே அவமதிக்கப்பட்டுத் தலைகவிழ்கின்றார்கள். சகோ தரர்கள் பலர் தங்கள் பிதாவினுடைய வீடு முதலியவற்றிற்கு இடையூறு நிகழும்பொழுது தங்களுள்ளே எத்துணைப் பகை இருப்பினும் அதனைச் சிறிதும் பாராட்டாது ஒற்றுமையுடை யர்களாய்த் திரண்டு அவ்விடையூற்றை நீக்கி அப் பிதாவுக்கு இனியர்களாய் ஒழுகுவது இயற்கை; அதுபோலவே சைவசமயிகளாகிய நாமெல்லாம் நமது பரம பிதாவாகிய சிவபெருமானுடைய

திருக்கோயின் முதலியவற்றிற்கு இடையூறு நிகழும்பொழுது நம்முள்ளே எத்துணைப் பகை இருப்பினும் அதனைச் சிறிதும் பாராட்டாது ஒற்றுமையுடையர்களாய்த் திரண்டு அவ்விடையூற்றை நீக்கி அச் சிவபிரானுக்கு இனியர்களாய் ஒழுகுவதன்றோ அழகு. இப்படிச் செய்பவர்களன்றோ சைவசமயிகளென்னும் பெயருக்கும் அதனாற் பெறற்பாலதாகிய பெரும் பயனுக்கும் பாத்திரராவார்கள். இவ்வியல்பில்லாதவர்கள் அங்ஙனம் ஆவார்களா! ஆகார்கள்; ஆகார்கள்.

"நம்மவர்களெல்லாம் பொறாமை, பகை முதலியவைகளின்றி ஐக்கிய முடையவர்களாய்க் கூடும் பொருட்டும், தங்கள்தங்களால் இயன்ற மட்டும் வாக்காலும், காயத்தாலும், பொருளாலுஞ் சகாயஞ் செய்து மேற் சுட்டிப்போந்த உத்தமோத்தம சிவபுண்ணியங்களை விதிப்படி சிரத்தையோடு நிறைவேற்றிப் பெரும் புகழையும் பெரும்புண்ணியத்தையும் அடையும்பொருட்டும், திருவருள் சுரக்கும்படி பரம காருண்ணிய சமுத்திரமாகிய சிவபெருமானுடைய திருவடிகளைப் பிரார்த்திக்கின்றோம்."

திருத்தொண்டைநாட்டுப் பதிபுண்ணிய பரிபாலன சபையின் இரண்டாம்முறைக் கூட்டம் பிரபவஸு மாசிமீ 1உ சென்னபட்டணத்திலே, பச்சையப்ப முதலியார் பாடசாலையிலே கூடிற்று.

அது சமயத்தில் அக்கிராசனுதிபதி அவர்கள் அச் சிவபுண்ணியத்தின் பெருமையைச் சபையார்களுக்கு விளங்கும்பொருட்டுப் பிரசங்கித்தார்கள்.

அந்தப் பிரசங்கம் வருமாறு :

இறைவனூற்பயன்

'தமக்கினிமை வஞ்சகரே தாந்தமுதற் சாரார்
தமக்கினியார் தம்முதற்சார்ந் தார்.'

இத் திருக்குறள் தமக்குத்தாம் வஞ்சகராவார் இவரென்பதும், இனியராவார் இவரென்பதும் உணர்த்துகின்றது. இதன் பொருள், தமக்கு இனிமை தாம் வஞ்சகர் தம்முதற் சாராரே — தங்களுக்கு இனிமையா யுள்ளதிலே தாங்களே வஞ்சகர்களாயுள்ளவர்கள் தங்கள் நாயகரை அடையாதவர்களே; தமக்கு இனியார் தம்முதற் சார்ந்தாரே—தங்களுக்கு இனியர்களா யுள்ளவர்கள் தங்கள் நாயகரை அடைந்தவர்களே எ—று. தாமென்றது பசுக்களாகிய ஆன்மாக்களை. தம்முதலென்றது பசுபதியாகிய சிவபெருமானை. இனிமை—இன்பம்.

"துன்பத்தில் வெறுப்பும் இன்பத்தில் விருப்பும் ஆன்மாக்களுக்கு இயற்கையேயாயினும், அவர்கள் இன்பம் இது, துன்பம் இது, துன்பத்தினின்று நீங்கி இன்பம் பெறுநெறி இஃது என உள்ளபடி அறிதற்கும், துன்பத்தினின்று நீங்கி இன்பத்தைப் பெறுதற்கும் சுதந்திர சத்தியுடையர்களல்லர். சுதந்திரர் சிவபெருமானொருவரே. ஆன்மாக்களோ பரதந்திரர்கள். ஆன்மாக்கள் இவ்வுண்மையை அறிந்து சிவபெருமானது திருவருள் வழிபட்டொழுகினன்றி இன்பத் துன்பங்களை அறிதலுந் துன்பத்தினின்று நீங்கி இன்பத்தைப் பெறுதலும் இயலாவாம். நித்தியமாகிய பேரின்பம்

முத்தியின்பமொன்றே; மற்றை யின்பங்களெல்லாம் முட்பூவிற்றேன்போல்வனவாம்.

''சிவபெருமானை அடைதலாவது அவரை விதிப்படி சிரத்தையோடு வழிபடுதல். அவ்வழிபாட்டுக்கு மிக மேலாகிய கருவி சிவஞானம். இவ்வழிபாடே முத்திக்கு வாயில். சிவஞானம் ஏழு பகுதிகளை உடையது. அவையாவன: அத்துவசுத்தியாகிய நிருவாண தீக்ஷை பெற்றுக்கொண்டு சிவஞான நூல்களாகிய சைவ சித்தாந்த சாத்திரங்களை ஓதல், ஓதுவித்தல், அவற்றின் பொருளைக் கேட்டல், கேட்பித்தல், கேட்டதைச் சிந்தித்தல், சிந்தித்ததைப் பின்பு தெளிதல், தெளிந்தபடியே அதன்பின் நிட்டைகூடல் என்பனவாம்.

''இச்சிவஞானத்துக்கு ஏதுக்கள் சிவாகமத்தில் விதிக்கப்பட்ட சரியை கிரியை யோகங்களாகிய பதிபுண்ணியங்களாம். பதிபுண்ணிய மெனினும் சிவபுண்ணிய மெனினு மொக்கும். ஸ்மிருதியில் விதிக்கப்பட்ட யாக முதலியவை பசுபுண்ணியங்களாம். ஞானம், யோகமின்றியும் யோகம், கிரியையின்றியும் கிரியை, சரியையின்றியும் சித்தியாவாம். அது,

'விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கு
மரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே.'

என்னுந் தாயுமான சுவாமி பாடலாலறிக.

''சரியை சிவசாலோக்கியத்தையும், கிரியை சிவசாமீப்பியத்தையும், யோகம் சிவசாரூப்பியத்தையும், ஞானம் சிவசாயுச்சியத்தையுங்

கொடுக்கும். யாக முதலிய பசுபுண்ணியங்களோ சுவர்க்கத்தைக் கொடுக்கும். இவைகளெல்லாவற்றையும் அறிதலும் அநுட்டித்தலுங் கல்வி கேள்விகளாலன்றிக் கூடாமையால், வித்தியாசாலைகளைத் தாபித்தலுஞ் சைவப் பிரசாரஞ் செய்வித்தலுமே முக்கிய தருமங்களாம். இவைகளினுற்றானே மேற்கூறிய சிவ தருமங்களுஞ் சிவஞானமும் அபிவிருத்தியாகும். இவைகளை விருத்திசெய்தலின் மிக்கபுண்ணியமும், விருத்தி செய்யாமையின் மிக்க பாவமும் இல்லை; இல்லை.

இதற்குப் பிரமாணம்:

சிவதத்துவ விவேகவிருத்தியில் உத்தரிக்கப்பட்ட சுலோகத்தின் மொழிபெயர்ப்பு

'நிகரறுநற் சிவதரும சிவஞா னத்தை
நிறுத்திடுவோ னிலுமுயர்ந்தோ னிலத்தி னில்லை
பகர்பரம சிவயோகி யவனே யாகும்
பரிவினிறுத் திடுமாற்றல் படைத்து முய்தி
யகலுமய லானிறுத்தா தொழிந்தோன் யோகி
யாயினுமீ சுரப்பிரிய னல்ல னன்னுன்
புகருறுதீ நரகினிடை வீழ்ந்து புன்கண்
பொருந்திடுவ னெனமறைகள் புகலு மன்றே.'

''ஆதலினால், இப் பதிபுண்ணியங்களை அபிவிருத்திசெய்தற்பொருட்டு இங்குள்ள சைவ சமயப் பிரபுக்கள் ''திருத்தொண்டை நாட்டுப் பதிபுண்ணிய பரிபாலனசபை'' எனப் பெயர் கொண்ட ஒரு சமாசந் தாபித்தார்கள். சைவ சாத்திரங்களைக் கற்பித்தலுஞ் சைவப் பிரசாரஞ் செய்வித்தலுமே எல்லாச் சிவபுண்ணியங்களையுஞ் சிவஞானத்தையும் வளர்க்குங் கருவிக

ளாய்ச் சிறந்துள்ள உத்தமோத்தம சிவபுண்ணியங்களாமாயினும், அவைகள் பரம தருமமென்பது கல்வியறிவுடையராகிய சிலருக்கு மாத்திரமன்றி மற்றவர்களுக்கு விளங்காமை பற்றி அவைகளுக்குப் பொருளுபகரிக்க உடன்படுவோர் தற்காலத்தில் அரியராதலாலும், சிவாலயத் திருப்பணிகள் பரம தருமமென்பது கல்வியறிவுடையவருங் கல்வியறிவில்லாதவருமாகிய எல்லாருக்கும் விளங்குதல்பற்றி அவைகளுக்குப் பொருளுபகரிக்க உடன்படுவோர் பலராதலாலும், சைவசாத்திர படனத்துக்குஞ் சைவப் பிரசாரத்துக்கும் முக்கிய ஸ்தானங்கள் சிவாலயங்களாமாதலாலும், சிவாலயங்களுள்ளே பல கிலமாயிருத்தலாலும், அவைகளைத் தற்காலத்திலே ஜீர்ணோத்தாரஞ் செய்யாவிடின் விளையுங் கேடு பெரிதாதலாலும், இச் சபையார், முன்னே சிவாலயத் திருப்பணிகளை நடத்துங் கருத்துடையர்களாயினார்கள்.

"சிவாலயத் திருப்பணிகளுக்குப் பொருள் கொடுப்பவர்களும் அப் பொருளை வாங்கிச் சிவாலயத் திருப்பணிகளைச் செய்பவர்களும் முத்தியை அடைவார்கள்.

இதற்குப் பிரமாணம் :

சைவசமய நெறி

'திருப்பணிசெய் வார்க்குஞ் சிவனையுன்னிச் செம்பொன்
விருப்புடனீ வார்பெறுக வீடு.'

'உய்வா ருதவுநிதி வாங்கித் திருப்பணியைச்
செய்வார் பெறுக சிவம்.'

"சிவபத்தர்கள் தங்களிடத்துள்ள திரவியத்தை மூன்று பாகம்பண்ணி ஒரு பாகத்தைத் தங்கள் சீவனத்தின் பொருட்டு வைத்துக்கொண்டு மற்றை யிரண்டு பாகங்களையுஞ் சிவபுண்ணியங் களுக்குக் கொடுத்தல் வேண்டும் என்று சிவாகமங்கள் சொல்கின்றன. இப்படிச் செய்தல் அரிதாயினும், சைவசமயிகளாகிய நம்மவர்களெல்லாம் உலோபஞ் செய்யாது, இச் சபையார் எடுத்துக்கொண்ட சிவபுண்ணியத்தின் பொருட்டுத் தங்கள் தங்களால் இயன்றபடி சிறிதாயினுந் திரவியம் உபகரிக்கக்கடவர்கள். இப்படிச்செய்யின் 'ஆயிரமாகாணி அறுபத்திரண்டரை' என்றபடியே நம்மவர்களால் உபகரிக்கப் படும் பொருள் மிகப் பெருகி வளர்ந்து, சபையார் உத்தேசித்த சிவபுண்ணியங்களெல்லாம் இனிது நிறைவேறுதற்குக் காரணமாகும்.

"கனம்பொருந்திய பிரபுக்களே, இத்தேசத்தவர் இவ்வூரவர் இவ்வியல்புடையவர் என்று உங்களாலே நன்ருக அறியப்படாதவர்களும் தருமத்தை நடத்துதற்கு அறிவும் ஆற்றலும் இல்லாதவர்களும் தருமத் திரவியத்தின் வரவு செலவுக் கணக்கை உலகத்தார் அறியும்வண்ணம் வெளிப்படுத்துதற்கு உடன்படாதவர்களுமாய் உள்ளவர்கள் உங்களிடத்தே தனித்தனி வந்து தருமத்தின் பொருட்டு யாசிக்கும்பொழுது, நீங்கள் பெரும்பான்மையுந் தடைபேசாது உங்கள் உங்களால் இயன்றமட்டுந் திரவியம் உபகரிக்கின்றீர்களே. அத்திரவியத்தைப் பெறுவோர்களுள்ளே தாங்கள் சுட்டிய தருமத்தைத்

தொடங்குவோர் சிலர். அவர்களுள்ளும் பெற்ற திரவிய முழுதையும் அத் தருமத்தில் உபயோகப் படுத்துவோர் மிகச் சிலர். திரவியம் பெறும் பொழுது முழுதையுந் தருமத்தில் உபயோகப் படுத்துங் கருத்துடையவருக்கும் அக் கருத்து அத் தருமம் முடிவுபெறும்வரையும் நிலைபெறுதல் அரிது. ஒருபோது நிலைபெறினும், அவர் காலத்திலே அத் தருமம் நிறைவேருவிடத்து, அவருக்குப்பின் அத் திரவியம் அத் தருமத்திலே சேர்வது மிக அரிது; அரிது. பெற்ற திரவியத்தைக் கொண்டு தருமத்தை முடிப்பவருள்ளுஞ் சிலர் தாம் கல்வியறிவில்லாதவராதலாலும், கல்வியறி வுடையவரோடு சிறிதும் பரிசயமில்லாதவராத லாலும், எடுத்த தருமத்தை விதிப்படி நடத்தா தொழிகின்றனர். இங்ஙனமாதலின், நீங்கள் வருந்திச் சம்பாதித்த திரவியம் தருமத்தின் பொருட்டுக் கொடுக்கப்பட்டவிடத்தும், தருமத் தில் உபயோகப்படுவது சிறுபான்மை. இதற்குக் காரணம் நம்மவர்களுள் ஒரு தருமத்தை ஒருவரே தனித்து நடத்துதலாம்.

'' தருமங்களையும் அவைகளின் பலங்களையும் அவைகளைச் செய்யும் முறைமைகளையும் அறிய வும் அறிவிக்கவும் வல்லவர் கல்வியுடையவ ராதலாலும், அவைகளைத் திரவிய முபகரித்து முடிக்கவல்லவர் செல்வமுடையவ ராதலாலும், இவ்விரு திறத்தாருள்ளும் பலர் சபையாகத் திரண்டு விதானங்கள் செய்துகொண்டு அவ் விதானங்களின்படியே தருமங்களை நடத்தப் புகு வார்களாயின், அத் தருமங்களெல்லாம் விதிப்படி

நிறைவேறும். அவற்றின் பொருட்டுக் கொடுக்கும் பொருண் முழுதுந் தருமத்திற்ருனே உபயோகப் படும். ஆதலினுல், நம்மவர்களுள்ளே தருமஞ் செய்யக் கருத்துடையவர்கள் யாவரும் இச் சபை யிற் சேர்தலே உத்தமோத்தமம்.

"யாவராயினும் ஒரு தருமத்தின்பொருட்டுத் திரவியம் உபகரிக்கச் சங்கற்பித்தாராயின், சங் கற்பித்த அக்கணமே அத்திரவியந் தருமத் திர வியமேயாய்விடும். ஆகவே, அத் திரவியத்தைப் பின்பு கொடாதொழிந்தவர் தருமத்திரவியத்தை அபகரித்த அதிபாதகராகி எரிவாய் நரகத்தில் விழுந்து வருந்துவர். இஃது உண்மைநூற்றுணிவு. ஆதலினுல், நீங்கள் தருமத்தின் பொருட்டுச் சங்கற்பித்த பொருளைச் சிறிதாயினுந் தடை யின்றி அச்சத்தோடும் அன்போடுங் கொடுத்து விடல் வேண்டும்.

''புண்ணியத்தையேனும் பாவத்தையேனும் செய்தல், செய்வித்தல், உடன்படல் என்னும் மூன்றும் தம்முளொக்குமாதலால், நீங்கள் இத் தருமத்துக்கு உபகரித்தன் மாத்திரமன்றி உங்கள் உங்கள் பந்துக்கள் இஷ்டர்கண் முதலாயிஞே ருக்குஞ் சமயம் வாய்க்கும்பொழுதெல்லாம் நல் லறிவுச் சுடர்கொளுத்தி, அவர்களையும் இயன்ற மட்டும் இத் தருமத்துக்கு உபகாரர்களாக்க முயலல் வேண்டும்.

''தெய்வப் புலமை பொருந்திய ஔவையா ராலே 'சான்ருே ருடைத்து' என்று புகழப் பட்ட இத் திருத்தொண்டைநாட்டின் கண்ண

தாகிய இச் சென்னபட்டணம் இராசதானி யாயும் கல்வி, செல்வம், அதிகாரம் முதலியவற்றி ஞலே பிரசித்திபெற்ற தானமாயும் விளங்கு தலினுல், இப் பட்டணத்திலே தாபிக்கப்பட்ட இச் சபையார் எக்காலமும் ஐக்கியமுந் தருமத்திலே சிரத்தையும் இடையரு முயற்சியும் உடையர் களாகி எடுத்த தருமங்களை விதிப்படி நிறை வேற்றிக்கொண்டு வருவார்களாயின், மற்றை நாட்டார்களுந் தங்கள் தங்கள் நாடுகளில் இப் படியே சபை தாபித்துச் சிவபுண்ணியங்களைப் பரி பாலனஞ் செய்துவருவார்கள். அப்பொழுது, அவைகளுக்கெல்லாம் இச் சபையார்களே மூல காரணர்களாதலால், அப்புண்ணிய பலங்களிலும் இச் சபையார் பாகம் பெறுவார்களென்பதற்குச் சந்தேகம் உண்டோ? இல்லை; இல்லை.

"இப்பொழுது நாம் கூறியவாறே நடத்தப் படின், சிவபுண்ணியங்களும் சிவஞானமும் அபி விருத்தியாகும். ஆகவே, சபையார்களாகிய நீங்கள் உங்களுக்கும் பிறருக்கும் பயன்பட்டு உங்களுக்கு இனியர்களாகி உங்களுக்கு உங்க ளிலும் இனியராகிய சிவபெருமானுடைய திரு வருளைப் பெற்று வாழ்ந்திருப்பீர்கள். நமக்கு நம் மிலும் இனியர் சிவபெருமான் என்பதற்குப் பிரமாணம்:

திருநாவுக்கரசு நாயனுர் தேவாரம்

'என்னில் யாரு மெனக்கினி யாரிலை
யென்னி லும்மினி யாெனாரு வன்னுள
னென்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே'."

பிரசங்கம் முடிந்தபின் அக்கிராசனுதிபதிஅவர்களுக்குத் துதிகள் சொல்லிச் சபையை முடித்தார்கள். அது நிற்க,

சந்தானுசாரியர்களுள் ஒருவருந் தில்லைவாழந்தணர்களுள் ஒருவருமாகிய கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர் அருளிச்செய்த கோயிற் புராணத்துக்குப் புத்துரை செய்து, பிரபவஹூ தைமீ வெளிப்படுத்தினர். முன் பதிப்பித்த வேறநேக புத்தகங்களும் இவ் வருஷத்திலே இரண்டாம் பதிப்பு, மூன்ரும் பதிப்பு, நான்காம் பதிப்பாகப் பதிப்பிக்கப்பட்டன. அப்போது அவருக்கு வயசு 45 ஆயிற்று.

பின்பு, மறைஞானசம்பந்த சிவாசாரியர் அருளிச்செய்த சைவசமய நெறிக்கு, தம்மிடத்தே சிலகாலம் பாடங் கேட்டவரும், தருமபுரவாதீனத்தைச் சார்ந்த காசிமடாலயத்துக் கட்டளைத் தம்பிராஞயிருந்தவருமாகிய பரமசிவ சுவாமிகளுடைய வேண்டுகோளின்படி புத்துரை செய்து, விபவஹூ புரட்டாதிமீ வெளிப்படுத்தினர். அம்மாசத்திற்ருனே தொல்காப்பியம் சேனவரையருரையைப் பரிசோதித்து வெளிப்படுத்தினர்.

அவர் மாணுக்கராகிய சதாசிவப்பிள்ளையும் பாரதம், கொலைமறுத்தல், வைராக்கிய தீபம், வைராக்கிய சதகம், திருவுந்தியார், தாயுமான சுவாமி பாடல் முதலிய நூல்களை அவர் முன்னிலையிற் பரிசோதித்து வெளிப்படுத்தினர். இவ் வருஷத்திலே வெளிப்படுத்திய விஞ்ஞாபனத்தின் ஒருபாகம் வருமாறு :

''தமிழ்நாட்டில் வாழுஞ் சைவசமயிகளுக்கு,

''நான் ஜயவரு முதலாக பீற்றர் பார்சிவல் துரையுடைய இங்கிலிஷ் வித்தியாசாலையிலே இங்கிலிஷ் கற்றேன். பிலவவரு பார்சிவல் துரைக்குத் தமிழ்ப் பண்டிதனுயினேன். பிதிரார்ச்சிதம் நான் பெறவில்லை. என்னுடைய தமையன்மார்கள் நால்வரும் இயன்றமட்டும் பொருளும் உத்தியோகமும் உடையவர்களாயிருப்பவும், அவர்கள் பொருளுதவியும் நான் பெறவில்லை. இங்ஙனமாகவும், மேற்கூறப்பட்ட விருத்தியை நான் கீலகவரு புரட்டாதிமீ பரித்தியாகஞ் செய்தேன். பார்சிவல் துரை, 'நான் தங்களுக்கு உயர்வாகிய வேதனம் தருவேன். தாங்கள் என்னை விடலாகாது' என்று பலதரம் வற்புறுத்திச் சொல்லிய வழியும், நான் அவ் விருத்தியில் விருப்பம் வைக்கவில்லை. நான் இங்கிலிஷிலே அற்ப விற்பத்தியாயினும் பெற்றிருந்தும் என்னோடு இங்கிலிஷ் கற்றவர்களுள்ளும் எனக்குப்பின் இங்கிலிஷ் கற்றவர்களுள்ளும் அநேகர் தங்கள் தங்கள் சத்திக்கேற்ற உத்தியோகம் பெற்று வாழ்ந்திருக்கக் கண்டும், நானும் என் சத்திக்கேற்ற உத்தியோகத்தின் பொருட்டு முயற்சி செய்யின் அது தப்பாது சித்திக்குமென்றறிந்தும், அஃதில்லாமையால் விளையும் அவமதிப்பைப் பார்த்தும் உத்தியோகத்தை விரும்பவில்லை. தமிழ்க்கல்வித் துணைமாத்திரங் கொண்டு செய்யப்படும் உத்தியோகம் வலிய வாய்த்தபொழுதும் அதையும் நான் விரும்பவில்லை. கன்னியை நாயகனிடத்து ஒரு துட்டாயினும் வாங்காது வீடு, விளைநிலம், தோட்டம்,

ஆபரணம் முதலியவற்ருேடு விவாகஞ் செய்து கொடுக்கும் வழக்கமே யுடையது என் சென்ம தேசமேயாகவும், நான் இல்வாழ்க்கையிலே புக வில்லை. இவைக ளெல்லாவற்றிற்குங் காரணம் சைவசமயத்தையும் அதன் வளர்ச்சிக்குக் கருவி யாகிய கல்வியையும் வளர்த்தல் வேண்டுமென் னும் பேராசையேயாம்.

"இப் பேராசையினுல் இருபது வருஷகாலம் நான் செய்த முயற்சிகள் பல. அவைகளுள்ளே சித்திபெற்றவை மிகச் சில. சைவசமயிகள் யாவருஞ் சைவசமயத்திலே சிரத்தையுடையர்க ளாகித் தங்கள் தங்களாலியன்ற உதவி செய் வார்களாயின் நான் எடுத்த முயற்சிகள் எல்லாம் இதற்கு முன்னரே நிறைவேறிவிடும். நிறை வேறின் என்னைப்போலவே, பிறரும் அங்கங்கே நன்முயற்சிகளைச் செய்வார்கள். செய்யிற் கல்வி யுஞ் சமயமுந் தழைத்தோங்கும்.

"தன் இம்மைப் பயன்களெல்லாம் இகழ்ந்தும் கைம்மாறு வேண்டாதும் இருபது வருஷ காலம் சுவசமய விருத்தியின் பொருட்டு முயற்சி செய்வோனொருவன் மற்றைச் சமயத்தார்களுள் ளிருப்பானுயின் அவனெடுத்த முயற்சிகளுள் யாது சித்திபெருது. நம்முடைய சைவசமயிகள் தங்கள் சமயமும் பாஷையும் விருத்தியடையும்பொருட்டு நான் செய்யும் முயற்சிகளுக்கு உதவி செய்யாமை மாத்திரையினமையாது, பெரும்பான்மையும் அவமதிப்பும் இடையூறுமே செய்கின்ருர்கள். இதனுல் எனக்கு யாதாயினும் ஒரு குறைவு உண்டு என்னுங் கவலை எனக்குச் சிறிதுமில்லை.

எனக்குச் செயப்படுவனவற்றைக் காணுந்தோறும் கேட்குந்தோறும், பிறருக்குத் தமிழ் கற்றலின் கண்ணும், தமிழ்க் கல்வியையுஞ் சைவசமயத்தை யும் வளர்த்தலின்கண்ணும், ஊக்கங் கிளராவண் ணம் தடைவிளைகின்றதே யென்னுங் கவலை எனக்குப் பெரிதுமுண்டு. பூர்வகாலத்திலே சைவ சமய விருத்தியின்பொருட்டு முயன்ற பெரியோர் களுக்குச் சுவசமயிகளாலே நன்கு மதிப்பும் பர சமயிகளாலே இடையூறுஞ் செய்யப்பட்டன; தற் காலத்திலே சைவசமய விருத்தியின்பொருட்டு முயலும் எனக்கு சுவசமயிகளாலேயே அவமதிப் பும் இடையூறும் செயப்படுகின்றன. பரசமயி களோ எனக்கு இடையூறு செய்யவுமில்லை; என்னை அவமதிக்கவுமில்லை. இஃதென்னை ! ஆச்சரியம் !! சைவசமயவிருத்தியின்பொருட்டுமுயலுமெனக்கு நம்மவர்களாலே அவமதிப்பும் இடையூறுஞ் செய் யப்பட்டபோது, நான் தமிழ்க் கல்வியையுஞ் சைவ சமயத்தையும் வளர்த்தற்கு வேண்டும் முயற்சி களிலும் போக்குங் காலத்தை முன்பயின்ற இங் கிலிஷிலேயேபோக்கி உத்தியோகமுஞ் செல்வமும் பெற்று நம்மவர்களாலே நன்கு மதிக்கப்படல் வேண்டும் என்று விரும்பாவண்ணம் திருவருள் சுரந்த சிவபெருமானுடைய பெருங் கருணைத் திறத்தை மறவாதிருத்தலே எனக்கு வாய்ப் புடைத்தாயதொரு பெருஞ் செல்வம்''. அப்போது அவருக்கு வயசு 46 ஆயிற்று.

அவர் யாழ்ப்பாணத்துக்கு வரவேண்டியதா யிருந்தபடியால் சுக்கிலஸு ஆனிமீ சென்னபட் டணத்தை விட்டகன்று, சிதம்பரமார்க்கமாய்

வந்தார். வரும்போது சிதம்பரத்திலே ஆனித் திருமஞ்சனகாலஞ் சமீபித்ததால் நடேச தரிசனத்தின்பொருட்டு, தாமதித்துப் போகவேண்டுமென்று நினைத்து, அங்கே யிருந்தார். இருக்குங் காலத்திலே அவருக்கும் இராமலிங்கபிள்ளைக்கும் இராமலிங்கபிள்ளை பட்சத்தாராகிய தீக்ஷிதருக்கும் இடையே அநேக வாதங்களும், வியாச்சியங்களும் சம்பவித்தன. திருமஞ்சனத்தன்று ஆயிரக்கான் மண்டபத்திலே அவரைத் தூஷித்தார்கள். தூஷித்த பின்பு அவரும் அவரைச் சார்ந்தோரும் தங்களை அடித்தார்கள் என்னும் பொய்வழக்கை எடுத்தார்கள். அவ்வழக்கு தீஷிதர்களைச் சார்ந்த ஒரு சுதேச நீதிபதியினல் விளங்கப்பட்டுப் பொய் வழக்கெனக் காணப் பட்டபடியால் தள்ளுப்பட்டது. அவை ஏதுவாகச் சிதம்பரத்திலே எட்டுமாசம் வரையில் இருந்து, அதைவிட்டு நீங்கி மாயூரத்துக்கு வந்து, அதற்குச் சமீபத்திலுள்ள தருமபுரவாதீனத்துக்குப் போயினர். அவ்வாதீனத்திலே எழுந்தருளி யிருந்த சச்சிதானந்த தேசிகராற் கேட்கப்பட்டு அங்கே இருபதுநாட்டங்கி யிருந்தார். அங்கிருக்கு நாளிலே மாயூரம் காவேரிக் கரைக் கொட்டாரத்திலே, அங்குள்ளவர்களால் வேண்டப்பட்டுச் சைவப்பிரசங்கஞ் செய்தற்குடன்பட்டு, சர்வலோகைகநாயகராகிய சிவபெருமானுடைய மகிமையையும் அவரை வழிபடும் முறைமையையும் அதனலெய்தும் பயனையும் உலகத்திற்குப் பிரசங்கித்தலின் மிக்க புண்ணியம் பிறிதொன்றுமில்லையென்று கண்டு, அதனையே தமக்குத் தொழிலாகப் பூண்ட சைவப் பிரசாரகராகிய நாவலர்,

பிரசங்க தினத்தைக் குறித்து, அத்தினத்திலே சிவ பெருமானொருவரே பிறப்பிறப்பில்லாத கடவுளென்றும், சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்கின்ற பஞ்சகிருத்தியங்களைச் செய்யுங் கருத்தா வென்றும், தம் வயத்தராதல், தூயவுடம்பினராதல், இயற்கையுணர்வினராதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்ற லுடைமை, வரம்பிலின்பமுடைமை என்னும் எட்டுக் குணங்களுமே அவருடைய திருவருட் குணங்களென்றும், ஒவ்வொரு காலத்திலே அரி பிரமேந்திராதி தேவர்களும் தாந்தாம் விரும்பிய வரங்களைப் பெறும் பொருட்டு அவரையே வழிபட்டு அவ்வவ் வரங்களைப் பெறுதலாகிய அநுக்கிரகங்களைப் பெற்றார்களென்றும், அறுபத்து மூன்று நாயன்மாரும், மற்றைய அடியார்களும் சிவாநுக்கிரகத்தைப் பெற்று முத்தியடைந்த போதெல்லாம், விட்டுணு முதலிய தேவர்கள் அவர்களை நணுகப் பெறாது தூரத்தே நின்றார்க ளென்றும், அவரை வழிபடுஞ் சமயமே சரியை, கிரியை, யோகம், ஞானங்களை யறிவித்து, அவை வாயிலாக சாலோக சாமீப சாரூப சாயுச்சிய முத்திகளை யடையப்பண்ணுஞ் சமயமென்றும் விரித்துரைத்தார். இன்னும் விட்டுணு பதியல்லர் என்பதற்கு வியாக்கிரபாத முனிவருடைய புத்திரராகிய உபமன்னியுமகாமுனிவர் விட்டுணு வின் அவதாரமாகிய கிருஷ்ணருக்குச் சிவதீக்ஷை செய்து, சிவபூசை எழுந்தருளப்பண்ணிக் கொடுத் தார் என்னும் உண்மையைச் சைவபுராணம், கூர்மபுராணம், மகாபாரதம் முதலிய நூல்க

ளாலும், சிதம்பரத்திலே இவ்விருடிகளுள் நாமொருவரென்று சபாநாயகரால் எடுத்துச் சொல்லப்பட்ட தில்லைவாழந்தணர் வமிசத்திலே ஆதிசேடனின் அவதாரமாய்த் திருவவதாரஞ் செய்தருளிய *அப்பதீக்ஷிதர் விட்டுணு மதத்தைக் கண்டித்துச் செய்த கிரந்தங்களாலும், சிவ பெருமானே முழுமுதற் கடவுளென்னு முண்மை யைச் சகலருமறிந்துய்யும்பொருட்டுப் பிரசங்கித் தார். அச்சமயத்திலே எவ்வளவோ வைஷ்ணவ பண்டிதர்கள் வந்திருந்தும், அவர் பிரசங்கித் தவைகளெல்லாம் ஆட்சேபத்துக் கிடமில்லாத வைகளாயும் ஒருவராலும் மறுக்கப்படாதவைக ளாயு மிருந்தபடியால், எல்லாருஞ் சித்த சமாதானத்தோடுங் கேட்டுக்கொண்டிருந்து போனார்கள்.

மாயூரத்தை விட்டகன்று திருவிடை மருதூர் சென்று சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, பிறையாற்றுக்கு வந்து அங்குள்ள திருவேட்டக்

---

* இவர் வேதாகமங்களை நன்குயோதி யுணர்ந்தவர். சிவாகமத்திலே விதிக்கப்பட்ட தீக்ஷைகளே மிகச் சிறந் தவை யென்றுணர்ந்து, சமய விசேட நிருவாண தீக்ஷை களைப் பெற்றுச் சிவபூசை எழுந்தருளப் பண்ணி, மிகுந்த பத்தியோடும் சிவபூசை பண்ணிக்கொண்டு வந்தவர். அந்தரியாக பூசையிலே ஆதிசேடனது வடிவமாக விருப்பா ரென்றும், அப்பூசையின் பின் முன்னைய வடிவமாய் விடுவா ரென்றும் பெரியோர் சொல்வர். விட்டுணுபத்தியிற் சிறந்த தாதாசாரியனை, சிவனைத் தூஷித்துத் தம்மை அவமானஞ் செய்ததற்காக, சின்னக் காஞ்சீபுரத்திலே இடியிடித்துச் சாகும்படி சபித்தவர். விட்டுணு மதத்தைக் கண்டித்து எண்பத்துநான்கு கிரந்தஞ் செய்தவர்.

குடிக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்து கொண்டு, காரைக்கால் வந்து அங்கும் பிரசங்கஞ் செய்த பின்பு, அதைவிட்டகன்று வேதாரணியம் வந்தார். அங்குள்ள கோயிலிலே பிரசங்கஞ் செய்யும்படி அக் கோயிற் றருமகர்த்தாவினுலே வேண்டப்பட்டு, அவ்வேண்டுகோளுக்கிசைந்து பிரசங்கஞ் செய்தார். அடுத்தநாள் கோடியக்கரை வந்து, யாழ்ப்பாணம் வரும்படி தோணியேறி யாழ்ப்பாணம் ரேகுத்துறையில் சுக்கிலஞூ மாசிமீ 27உ வந்திறங்கினர்.

சைவசித்தாந்தப் பிரவர்த்தகரும் தீநெறியிற் செல்லாது நம்மையெல்லாம் ஆட்கொண்டருளிய பரமாசாரியருமாகிய நாவலர் யாழ்ப்பாணம் வருகின்றூர் என்பதை யறிந்து, அவர் வரவை எதிர் பார்த்து, வீதிகடோறும் பந்தரிட்டு, வாழைகள் நாட்டி, தோரணங்கள் நிரைத்து, பூமாலைகள் தூக்கி, பூரண கும்பங்கள் வைத்து, விளக்கேற்றி யிருந்த சைவ சமய பத்திமான்கள் யாவரும், அவர் வந்திறங்கியவுடன் அவரைப் பூம் பல்லக்கி லேற்றி, பலவாத்தியங்களொலிக்க, "இன்றன்றே நாமெல்லாம் உய்ந்தோம்! உய்ந்தோம்!!" என்று ஒருமொழியாக ஆரவாரித்து, அழைத்துக் கொண்டுவந்து, சைவப்பிரகாச வித்தியாசாலை யிலே அலங்கரிக்கப்பட்ட ஆசனத்தின்மீது இருத்தி ஞர்கள். அப்போது சனங்களெல்லாம் எளிதில் விளங்கிக்கொள்ளத்தக்கதாகப் பதி, பசு, பாசம் என்னும் திரிபதார்த்த லட்சணங்களை விரித்துப் பிரசங்கித்தார். பிரசங்கம் முடிந்தபின் அவர்கள் அவரை மடத்துக்கு அழைத்துக்கொண்டு போய் விட்டார்கள்.

மற்றைநாள் யாழ்ப்பாணத்திலுள்ள பிராமண குருமார்கள், சைவகுருமார்கள், வித்துவான்கள், பிரபுக்கள் என்னுமெத்திறத்தவரும், அவரைத் தரிசிக்க வந்தார்கள். அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, ''தாங்கள் யாழ்ப்பாணத்தை விட்டுச் சென்னபட்டணம் போயபின்பு, புறச் சமயத்தவர்கள் நமது சமயத்துக்கு விரோதமாகப் பிரசங்கங்கள் செய்தும், நமது சமய நூல்களினுஞ் சமயக் கிரியைகளினும் பற்பல ஆட்சேபங்களையுஞ் செய்தார்கள். அவைகளுக்கு மாறுக நமது சமயத்தைப் பிரசங்கிக்கவாவது, அவ்வாட் சேபங்களுக்குச் சமாதானஞ் சொல்லவாவது, இங்குள்ளவர்களுள் ஒருவராலும் முடியாமற் போயிற்று. தாங்கள் இங்கே எழுந்தருளி வரப் பெற்றுக்கொண்டேம். இனி, நாங்கள் பர சமயத்தவர்களால் ஆட்டுண்ணேம். தங்கள் வித்தியாசாலையிலே எங்கள் மீதிரங்கிச் சைவப் பிரசங்கங்கள் செய்வீர்களாயின், இம்மையிலே தீய வழியிற் செல்லாதுய்வேம்; மறுமையிலே நற்கதியையும் அடைவேம்'' என்று, விண்ணப்பஞ் செய்து கொண்டார்கள். கொடிகட்டி அன்ன தானஞ் செய்வோனொருவனிடத்திலே ஏழை ஒருவன் வந்து, ''நீர் கொடிகட்டி அன்னதானஞ் செய்கின்றீர் என்பதைக் கேள்விப்பட்டு, உம் மிடத்தில் வந்தேன். இப்போது, பசி என்னை மிக வருத்துகின்றது. ஆதலால், எனக்கு அன்னந் தருவீராக'' என்று வேண்டுவானுயின், அவ் வேழைக்கு அத் தாதா எவ்வளவு சந்தோஷத் தோடு அன்னத்தைக் கொடுப்பானே, அதுபோல,

''ஆலமே யமுத மாக வுண்டுவா னவர்க்க ளித்துக்
காலனை மார்க்கண் டற்காக் காய்ந்தனை யடியேற் கின்று
ஞாலநின் புகழே யாக வேண்டுநான் மறைக ளேத்துஞ்
சீலமே யால வாயிற் சிவபெரு மானே யென்றார்''

என்று பரசமய கோளரியாகிய திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் மதுரைச் சோமசுந்தரக் கடவுளை வேண்டிக்கொண்ட பிரகாரமே, தாமும் பரம கருணாநிதியாகிய சிவபெருமானுடைய புகழை உலகத்திற்குப் பரப்புதலையே தமக்குச் சதாத் தியானமாகவுந் தொழிலாகவும் பூண்ட சைவப் பிரசாரகரும், தாமே சைவப் பிரசங்கங்கள் செய்யவேண்டியிருக்க, இவர்கள் தம்மிடத்திலே வந்து சைவப்பிரசங்கங்கள் செய்யுமாறு விண் ணப்பஞ் செய்தமையிற் சந்தோஷங்கொண்டு, சைவப் பிரசங்கம் என்னுந் தேவாமிர்தத்தைச் சைவ நூலுணர்ச்சியில்லாத அவ்வேழைகளுக்கு வார்த்தார். அதனால் அநேகர் சைவநூல் அறிவை மிகவிரைவிலும் எளிதிலும் அறிந்துகொண்டார்க ளென்பது அனுபவத்தினால் அறிந்த சத்தியம். அப்போது அவருக்கு வயசு 47 ஆயிற்று.

அ. ஆறுமுகச் செட்டியாரால், வண்ணார் பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலையின் பொருட்டு, தருமசாதனஞ் செய்யப்பட்ட நிலத்திலே கட்டப்பட்டிருந்த கூடம் பழுதடைந் தமையால், அந்நிலத்திலே பெரிதாயும் பெல முள்ளதாயும் பிறிதொன்று கட்ட நினைத்து, அது கட்டி முடிவுபெறும் வரையும் வித்தியா சாலை வைத்தற்காக வாடகைக்கு வாங்கப்பட்ட வண்ணார்பண்ணை வைத்தீசுரன் கோயில் நிலத்

திலே ஒரு கூடத்தைப் பிரசோற்பத்தி வருஷம் கட்டுவித்தார். மேற்படி வித்தியாசாலை அந்தத் தானத்திலேயே நடைபெற்று வருகின்றது.

இந்தப் பிரகாரம் சைவப் பிரசங்கங்கள் செய்துகொண்டும், தமது வித்தியாசாலையைச் செவ்வையாய் நடாத்திக்கொண்டும்வருங் காலத்திலே, யாழ்ப்பாணத்திலுள்ள, உவெஸ்லியன் மிஷன் அங்கிலவித்தியாசாலையிலே இங்கிலிஷ் கற்ற சைவசமயப் பிள்ளைகளுளநேகர், விபூதி தரித்துக்கொண்டு பள்ளிக்கூடத்துட் பிரவேசித்தமையினால், அப்பள்ளிக்கூடத்தின் அதிபதியாகிய பாதிரியினால் வெளியே துரத்தப்பட்டார்கள். துரத்தப்பட்ட பிள்ளைகளெல்லாரும் பரசமய கோளரியுஞ் சுவமத ஸ்தாபகருமாகிய நாவலரிடத்திலே வந்து, ''விபூதி தரித்துக்கொண்டு பள்ளிக்கூடத்துட் பிரவேசித்தமையால், பள்ளிக்கூடத்தினின்றும் நீக்கப்பட்டோம். விபூதி தரியாது போவேமாயின், பள்ளிக்கூடத்தினுட் பிரவேசித்துப் படிக்கும்படி விடப்படுவேம். ஆயின், சைவ சமயிகளாகிய நாங்கள், அச்சமயத்திற்குரிய சிவசின்னமாகிய விபூதியைத் தரியாது போதல் எங்களுக்குச் சம்மதமன்று. ஆதலால், தாங்கள் எங்கள்மீதிரங்கி எங்களுக்காக ஒரு அங்கில வித்தியாசாலை தாபிப்பீர்களாயின், நாங்கள் எல்லாரும் வந்து கல்வி கற்றுக்கொள்ளுவேம். அது வாயிலாகப் புறச்சமயம் போதிக்கப்படுவதினின்றும் நீங்கிக்கொள்ளுவோம். சைவ சமயிகளாகிய எங்கள் பொருட்டு இப் பெரு நன்மையைச் செய்தல் வேண்டும்'' என்று

பிரார்த்தித்துக் கொண்டார்கள். ஓர் அங்கில வித்தியாசாலையை நடாத்துதற்கு வேண்டிய பொருள் ஒருசிறிது மில்லாதிருந்தும், பிள்ளைகள் கொடுக்கும் வேதனத்தைக் கொண்டும், கவர்ண் மேண்டாரிடத்திலே உதவி பெறலாமென்ற நம்பிக்கையைக் கொண்டும், பிரசோற்பத்திஞூ தைமீ (1872) 'வண்ணார்பண்ணைச் சைவ அங்கில வித்தியாசாலை' எனப் பெயர்கொண்ட ஒரு வித்தியாசாலையைத் தாபித்தார். அவ்வித்தியா சாலை பிள்ளைகளினுடைய வேதனத்தைக் கொண்டுந் தமது பொருள் கொண்டுஞ் சில காலம் சிறப்பாக நடத்தப்பட்டது. பின்னர், பிள்ளைகளினுடைய வேதனங் குறைந்ததனுலும், சமீபத்தில் வேறு பள்ளிக்கூடங்களிருக்கின்றன வென்று போக்குச் சொல்லிக் கவர்ண்மேண்டார் உதவி செய்ய மாட்டோமென்று மறுத்ததினுலும், சைவசமயிகளுடைய உதவி சிறிதுமில்லாதிருந்தத னுலும், அதில் வைத்த ஊக்கத்தைக் கைநெகிழ விட்டார். விடவே, உபாத்தியாயர்களுட் சிலர் தங்களுக்குக் கிடைக்கும் வேதனம் முன்னையிலும் பின்னர் அதிகங் குறைந்தமையால் ஆங்கீரச வருஷத்தினும், சிலர் ஸ்ரீமுக வருஷத்தினும் பள்ளிக்கூடத்தை விட்டு நீங்கினுர்கள். சிலர் அற்ப வேதனத்தைப் பெற்றுக்கொண்டு தாதுவருஷம் வரையினுங் கற்பித்துக்கொண்டிருந்து, பிள்ளை களில் அநேகர் இப்பள்ளிக்கூடத்திலே கவர்ண் மேண்டுப் பரீக்ஷை இல்லையென்று சொல்லிக் கொண்டு வேறு பள்ளிக்கூடங்களுக்குப் போகின்ற தைக் கண்டு, அதிபதி யவர்களிடத்திலே உத்தரவு பெற்றுக்கொண்டு வித்தியாசாலையை விட்டனர். அப்போது அவருக்கு வயசு 49 ஆயிற்று.

ஆங்கீரச வருஷத்திலே கோப்பாயிலும், புலோலியிலும் சைவப்பிரகாச வித்தியாசாலைகள் தாபித்தார். அவைகளுள்ளே புலோலி வித்தியாசாலை அவ்வூரவர்கள் கொடுத்த பொருள் கொண்டு நடத்தப்படுகின்றது. கோப்பாய் வித்தியாசாலைக்குப் பொருள்சேராமையாலே தமது வண்ணார்பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலைப் பொருள்கொண்டு சிலகாலம் உபாத்தியாயரை நியோகித்து நடத்திவந்தார். இது நிற்க.

இற்றைக்கு ஏறக்குறைய 25 வருஷ காலமாக நல்லூர்க் கந்தசுவாமி கோயிற் கிரியைகள் யாவும் சிவாகம விரோதமென்று கண்டு, அக் கோயிலுக்குப் போகாது விடுத்திருந்தார். இப்படியிருக்குங் காலத்திலே, தங்கள் கோயிலுக்கு அவரை யழைத்து அவரைக்கொண்டே தங்கள் கோயிலைத் திருத்துவித்தல் வேண்டுமென்று கருதி, ஆங்கீரசஞூ ஆனிமீ அக்கோயிலார்கள் அவரிடத்திலே வந்து, ''எங்கள் கோயிலிலே இற்றைத் தினம் தெய்வயானையம்மை திருக்கல்யாணப் படிப்புத் தினமாதலால், தாங்கள் எங்கள் கோயிலுக்கு வரல் வேண்டும்'' என்றும், ''தெய்வயானையம்மை திருமணப் படலத்துக்குப் பொருள் சொல்லல்வேண்டும்'' என்றும் அவரை வேண்டிக் கொண்டார்கள். அப்போது அவர், ''உங்கள் கோயில், சிவாகமத்துக்கு முழுவிரோதமாக நடத்தப்படுகின்றபடியால், நான் உங்கள் கோயிலுக்கு வரேன்'' என்று அவர்களுக்குச் சொன்னார். அவர்கள், ''தாங்கள் சிவாகம

சம்மதமென்று எவைகளைச் சொல்லுவீர்களோ, அவைகளையெல்லாஞ் செய்தற்கு யாதொரு தடையுமில்லை'' என்று சொல்லி, அவரைத் தங்கள் கோயிலுக்கு அழைத்தார்கள். சிவாகமப் பிரகாரம் அக்கோயிலை நடத்துவிக்கலாமென நினைந்து, அக்கோயிலுக்குப் போய் முற்கூறிய படலத்துக்குப் பொருள் சொல்லி, முடிவிலே கர்ப்பக் கிருகத்திலே வேலாயுதப் பிரதிட்டை செய்து இருபுறத்திலும் தெய்வநாயகி வள்ளி நாயகி விக்கிரகங்களை வைத்துப் பூசித்தல் ஆகம விரோதமென்றும், அவைகளை நீக்கிச் சிலா விக்கிரகந் தாபித்தல் வேண்டுமென்றும் பிரசங் கித்தார்.

சிலாவிக்கிரகந் தாபித்தலும், கோயிலைப் பிரித்துக் கட்டுதலும், சிவதீக்ஷை யுடையோரைக் கொண்டுபூசை செய்வித்தலுமாகிய இவைகளெல் லாம் அவர்களுக்குச் சம்மதமாயிருந்தமைபற்றி அக்கோயிலதிகாரி ஆயிரங் கடிதம் அச்சிற் பதிப் பித்துப் பரப்பிச் சனங்களை யழைத்து ஆங்கீரசஞூ தைமீ 7உ சனிக்கிழமை ஒரு சபை கூட்டி, அச் சபையிலே எழுந்து நின்று நாவலரை நோக்கி, ''இச்சபையாரை இன்றைக்கு இங்கே யழைத்த காரணத்தைப் பற்றி, தாங்களே இவர்களுக்குப் பிரசங்கித்தல் வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். அவருடைய வேண்டுகோளின்படி சுப்பிரமணியப் பெருமானுடைய இலக்கணங் களைப் போதித்தபின்பு, சபையார்களை விளித்து, அக்கோயிற் கிரியைகள் யாவும் ஆகம விரோத மென்றும், கர்ப்பக்கிருக முதலியவைகளைப்

பிரித்து ஆகமப் பிரகாரம் கருங்கல்லினுலே கட்டுவித்து விக்கிரகப் பிரதிட்டை செய்வித்தல் வேண்டுமென்றும், அதற்கு வேண்டுந் திரவியம் அவர்களே உபகரித்தல்வேண்டுமென்றும், அவ்வா றுபகரிக்கப்படும் பொருள் கொண்டே திருப்பணி நடத்துதற்கு ஒரு சபை அவர்களாலே தெரிவு செய்யப்படல் வேண்டுமென்றும் பிரசங்கித்தார். அப்போது அங்கிருந்தவருட் சிலர் திருப்பணிச் சபையாராகத் தெரிவு செய்யப்பட்டார்கள். தெரிவு செய்யப்பட்டபொழுது சனங்கள், "நாவல ரவர்கள் இச்சபையி லொருவரா யிருந்தாற்ருன் கையொப்பம் வைப்போம்'' என்றும், ''கை யொப்பப் பணந் தருவோம்'' என்றும் தங்கள் அபிப்பிராயத்தை வெளிப்படுத்திஞர்கள். அவர், தாம் அச் சபையிலே சம்பந்தமுடையராய் இருத்தற்குச் சற்றேனும் பிரியமில்லாதவரா யிருந்தும், அச்சபையிலே தாம் ஒருவராய்ச் சேரா விட்டால், திருப்பணி நடவாமற் போய்விடும் என்னுங் கருத்தால் ஒருவராயிருத்தற்குச் சம்மதித்தார். அதன்பின் சனங்கள் அவரையே சபாநாயகமாக வைத்துக்கொண்டு கையொப்பஞ் சேர்த்தார்கள். அச்சமயத்தில் ஏறக்குறைய 6000 ரூபா வரையிற் கையொப்பஞ் சேர்ந்தது. அத்தொகையில் 3000 ரூபா வரையில் அறவிடப் பட்டது. சில நாட்களின் பின் திருப்பணிச் சபையார் அப்பணத்தைக் கோயிலதிகாரியைச் சேர்ந்த ஒருவரிடத்திலே கொடுத்து, ''நீரே இந்தியாவிற்குப் போய்க் கருங்கற்கள் கொண்டு வரவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்கள். அவர் திருப்பணிச் சபையின் அக்கிராசஞதிபதி

யாகிய நாவலருடைய சிபாரிசுக் கடிதம் பெற்றுக் கொண்டு இந்தியாவுக்குப் போய், அத்தேசத்துக் கோயிற் றிருப்பணிகளுக்கும் கிடைத்திராத உயர் வாகிய கருங்கற்களைக் கருவூரினின்றும் அடிப் பித்துக்கொண்டு வந்தார்.

இவ்வருஷம் தாம் நெடுங்கால அனுபவத் தால் அறிந்த உண்மைகளைத் திரட்டி எழுதி, அதற்கு ''யாழ்ப்பாணச் சமயநிலை'' எனப் பெயர் தந்து வெளிப்படுத்தினர். அப்போது அவருக்கு வயசு 50 ஆயிற்று.

அடுத்த ஸ்ரீமுகவருஷம் சித்திரைமீ 12௳ புதன்கிழமை வண்ணார்பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலையுபாத்தியாயரும், அவருடைய சீடர்களுள் ஒருவருமாகிய வி. சுப்பிரமணிய பிள்ளை தேகவியோகமானர்.

நல்லூர்க் கந்தசுவாமி கோயிலிலே அவ் வருஷ மகோற்சவம் நடக்கும்போது, அக்கோயி லார்கள் ரதோற்சவ தினத்துக்கு முதற் றினத்திலே, ''எங்கள் கோயிலிலே நாளைக்கு ரதோற்சவத் திருநாளாதலால், தரிசனத்தின் பொருட்டு வரல்வேண்டும்'' என்று அவரை யழைத்தார்கள். அதற்கு அவர், ''உங்கள் கோயிலிலே கிராம சாந்தியிலும் தேர்த்திருவிழா விலும் வைரவ பூசையிலும் ஆடு வெட்டுகிற படியால், நான் அக்கோயிலுக்கு வரேன்'' என்று மறுத்தார். மறுத்தபொழுது அவர்கள், ''இனி யொருபோதும் எங்கள் கோயிலிலே ஆடு வெட்டோம்'', என்று அவருக்கு உறுதிமொழி

சொல்லித் தங்கள் கோயிலுக்கு வரும்படி வேண்டினார்கள். அவருடைய உறுதிமொழியை நம்பி மற்றைநாட் கோயிலுக்குப் போனார். ரதோற்சவ தினத்திலே ஆடு வெட்டப்படவில்லை. அதற்கு மூன்றாம் நாளிலே செய்யப்பட்ட வைரவ பூசையிலும் வெட்டப்படவில்லை.

இவ்வருஷத்திலே வித்தியாசாலையிலே பிரசங்கங்கள் செய்துகொண்டும் வித்தியாசாலையின் முதல் வகுப்புப் பிள்ளைகளை ஒழிவுள்ள நேரங்களிலே படிப்பித்துக்கொண்டும், இரண்டாஞ் சைவவினாவிடை, இலக்கணச் சுருக்கம் முதலிய நூல்களைப் புதிதாகச் செய்துகொண்டும், சிவராத்திரி புராணம், சிவஞானபோதச் சிற்றுரை முதலிய நூல்களைப் பரிசோதித்துக்கொண்டும் வந்தார். அப்போது அவருக்கு வயசு 51 ஆயிற்று.

வண்ணார்பண்ணையிலுள்ள த. இராகவப் பிள்ளை, கு. செல்வநாயகம்பிள்ளை என்னுமிருவராலே கட்டுவிக்கப்பட்ட நல்லூர்க் கந்தசுவாமி கோயிற் றெற்குவீதி மடத்திலே, பவஷு வைகாசிமீ 20வ திங்கட்கிழமை மூல நட்சத்திரத்திலே, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் குருபூசையும், அக்கோயில் வசந்த மண்டபத்திலே பிரசங்கமுஞ் செய்யப்பட்டன. அப்பிரசங்கத்திலே திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் மூன்றாம் வயசிலே உலக மாதாவாகிய உமாதேவியார் பொற்கிண்ணத்திலே கறந்து சிவஞானத்தைக் குழைத்து ஊட்டிய திருமுலைப்பாலை உண்ட மாத்திரத்திலே சிவாநுக்கிரகத்தினாலே பாடிய

"தோடுடையசெவி யன்விடையேறியோர்
தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென்
னுள்ளங்கவர்கள்வ
னேடுடையமல ரான்முனைநாட்பணிந்
தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே"

என்னுந் திருவிருத்தத்தையே பீடிகையாக எடுத்து, அதன் பொருளை முன்னர் விளக்கிப் பின்னர்ச் சிவபெருமானுடைய திருச்செவிகள் இரண்டினுள் ஒன்றிலே சங்கக் குண்டலமும் மற்றையதிலே திருத்தோடு மிருக்க, பிள்ளையார் திருத்தோடணிந்த திருச்செவியைச் சிறப்பித்துப் பாடியது என்னை? என வினவி, அதற்கு அதிப் பிரபல நியாயங்களால் விடை கூறி முடித்தது மன்றி, அத்திருப்பாட்டினுள்ளே இலைமறைகாய் போல் மறைந்து கிடந்த வேதப் பொருளையும் எடுத்து இனிது காட்டிப் பிரசங்கித்தார்.

கந்தசுவாமி கோயிற் றிருவிழாச் சமீபித்த படியால், தேவாரத் திருக்கூட்டச் சிறப்பையும், தேவாரம் முதலியவை திருவிழாக் காலத்திலே சுவாமிக்குப் பின்னுக ஓதுவதாற் சனங்களுக் குண்டாகும் கடவுட் பத்தியையும், இவ்வியாழ்ப் பாணத்துச் சனங்களுக்குக் காட்ட நினைந்து, திருவாவடுதுறையினின்றும் ஓதுவார் சிலரை அழைப்பித்து, திருவிழாக் காலத்திலே அவர்க ளுக்கும் இங்குள்ள மற்றைச் சைவர்களுக்கும் தெற்கு வீதி மடத்திலே புண்ணியவான்கள் சிலரைக்கொண்டு மாகேசுரபூசை செய்வித்து,

சுவாமி வீதியிலே உற்சவங்கொண்டருளும் பொழுது, சுவாமிக்குப் பின்னுக அவர்களைக் கொண்டுதேவாரம்ஓதுவித்துக்கொண்டுவந்தார். இவர்கள் தமிழ் வேதமாகிய தேவாரத்தை ஓத, அதனைக் கண்ட பிராமணர் தாங்களும் வந்து, சுவாமிக்குப் பின்னுக வேதம் ஓதுவாராயினுர்கள். அவரும் விபூதி உத்தூளனஞ் செய்து, திரிபுண்டரந் தரித்துத் தலையிலே சிரமாலையும் கழுத்திலே கண்டிகையுங் கையிலே பௌத்திரமுந் தரித்து, யாவருக்கும் பத்தியை விளைக்கத்தக்க சிவவேடப் பொலிவோடு திருக்கூட்டத் தலைவராய் நின்ருர். அத் திருக்கூட்டத்தின் சிறப்பை என்னென்று சொல்வோம்! எதற்கொப்பிடுவோம்!! ஆதியிலே சுப்பிரமணியப் பெருமானின் அவதாரமாய் விளங்கிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் 16000 திருக்கூட்டத்தோடு தோற்றிய சிறப்புக்கொப்பிடலாம். இவ்வருஷத் திருவிழாவின் கிராமசாந்தியிலே ஆடு வெட்டாது விட்ட இக் கோயிலார்கள், ரதோற்சவ தினத்திற்கு முதற்றினமாகிய சப்பிரத் திருநாளிலன்று தேர் முட்டுப் பறிக்கும்போது துட்டர் சிலருடைய சொல்லைக் கேட்டு, ஆட்டை வெட்டிவிட்டார்கள். தமது மனச்சான்றிற்கும் கட்டுப்பாட்டுக்கும் தம்மை யாட்கொண்டருளிய கலியுக வரதராகிய சுப்பிரமணியப் பெருமானுக்குப் பூசையுற்சவம் முதலியன விதிக்கும் குமாரதந்திரத்திற்கும் இது விரோதமாதலால், அன்று தொடுத்து அக் கோயிலுக்குப் போகாது விட்டார். பொது நன்மையை விரும்பி அக் கோயிற் குற்றங்களை எடுத்துக் காட்டிச் சில பத்திரிகைகள் எழுதி

அச்சிற் பதிப்பித்து வெளிப்படுத்திவிட்டார். கோயிலார்களும், வேறு கலகப் பிரியர்கள் சிலரும், புறச்சமயத்தவர் சிலரைக் கொண்டும் சில துட்டரைக்கொண்டும் அப்பத்திரிகைகளிலே சொல்லப்பட்டவைகளுக்கு ஒரு சிறிதும் நியாய மில்லாத சில பத்திரிகைகளை, எழுதுவித்து வெளிப்படுத்தி விட்டார்கள். அவைகள் நியாய மில்லாதவைகளாயிருத்தன் மாத்திரத்தில் அமை யாது, நமது சைவசமயக் கடவுளைத் தூக்ஷித்தலும் புறச்சமயக் கடவுளைப் புகழ்தலுஞ் செய்தன. கோயிலார்கள் முன் கையொப்பம் வைத்தவர்க ளிடத்தும் மற்றவர்களிடத்தும் பொருள் பெற்றுத் திருப்பணியை நடத்தலாமென்று நினைத்துப் பல முறை முயன்றும் தங்கருத்துச் சித்தி பெறுமை கண்டு வாளாவிருந்தனர். அப்போது அவருக்கு வயசு 52 ஆயிற்று.

அடுத்த யுவ தாது ஈசுர வெகுதானிய வருஷங் களிலே நன்னூல் விருத்தியுரை, நைடதவுரை, திருவிளையாடற் புராணம், நன்னூற் காண்டிகை யுரை முதலிய நூல்களைத் திருத்துவதிலும், சிவ பூசாவிதி, மூன்றும் அநுட்டானவிதி, குருசிஷ்யக் கிரமம், பூசைக்கிடம்பண்ணும் விதி, சிராத்தவிதி, தருப்பணவிதி, போசனவிதி, தமிழ் அகராதி, தமிழ் சம்ஸ்கிருத அகராதி, தமிழ் இங்கிலிஷ் அகராதி முதலிய நூல்களைப் புதிதாய் எழுது வதிலும், சைவப் பிரசங்கங்கள் செய்தலிலுந் தங்காலத்தைப் போக்கினர்.

தாதுஸூ புரட்டாதிமீ பருத்தித்துறையைச் சார்ந்த புலோலிச் சைவப்பிரகாச வித்தியாசாலை

யிலே, கல்விகற்கும் பிள்ளைகளைப் பரீக்ஷிக்கப் போயிருந்தபோது, அ. சிவசம்புப்புலவர் பாடிய பாடல்கள் வருமாறு :

வெண்பா

ஆறுமுக நாவலன்சீ ரான்றதமிழ்க் காவலன்மெய்
வேறுபடும் பொய்மதத்தோர் மேவலன்றன்—வீறுபுகழ்ச்
சைவப்ர காசவித்யா சாலைமிக வோங்கிடுக
வெவ்வெப் பகலு மினிது.

விருத்தம்

ஆறுமுக நாவலனு மறிஞர் கோனு
லணிதிகழும் புலோலியினி லமைக்கப் பெற்ற
வேறுபுகழ்க் கழகத்திற் கற்கு மைந்த
ரிருஞ்சபையிற் காட்டியநூ லியல்பு முற்ற
ஆறுமகிழ் வொடுதெரிந்தா மிவருக் கிவ்வா
றொருசின்னு ளினிற்றேற்ற முதிப்பச் செய்த
மாறுபெரு மதிக்குரவர் முயல்வை யின்னும்
வளர்த்திடுதல் சிவன்கருணை மாண்ப தாமே.

ஈசுரவஸு புரட்டாதிமீ மேற்படி வித்தியாசாலைப் பரீக்ஷைக்குப் போயிருந்தபோது அ. சிவசம்புப்புலவர் சொல்லிய பாடல்கள் வருமாறு :

வெண்பா

சைவமத மாதுந் தமிழ்மாது மாட்டுகந்த
தெய்வசபை யைப்புலமைச் சீர்வாய்ந்த—மெய்வளரு
மாறுமுக நாவலனு மான்றபெரும் புண்ணியனு
லேறியகல் லூரியென்ப தென்.

கலிவெண்பா

ஆரூர னும்புகலி யாப்தனுமெய்ந் நாவரசுஞ்
சீரூரும் வாதவூர்த் தேசிகனும்—பேரூரும்

பொன்னு டொருசிறிய புன்னு டெனப்புரியுந்
தென்னடு காத்தசெங்கோற் சீரியரு—முன்னடு

மூத்த வறிவினரு முச்சங்கப் பாவலரும்
வாய்த்தமர பானேம்பி மன்னவைத்த — வேத்துதகைச்
சைவமத முந்தமிழும் பின்னு டனிபுரக்குஞ்
செவ்வியரில் லாமற் றிறம்பலுறுஞ் — செவ்வியிடைக்
குன்றெறிந்த செவ்வேற் குகனருளோ தென்புலியூர்
மன்றுகிழ வோனருளோ வாய்த்தவவை— நன்றுபெற
நாம்பன்னுட் செய்துவைத்த நற்றவத்தா லென்றுலகின்
மேம்படுநல் லோர்கைசிர மேலேற — வேம்பலுறீஇ
யுப்பு முலகு முளவளவும் வாழ்கவெனச்
செப்பிடுமெய்வாழ்த்தெண் டிசைவிழுங்க—வொப்பினல்லூர்
நண்ணியசீ ராறுமுக நாவலனு மொண்படிவப்
புண்ணியனு லின்பப் புலோலிநகர்க் — கண்ணிலவுஞ்
சாலுநய வாய்மைபெறுஉஞ் சைவப்ர காசவித்யா
சாலையிடைக் கற்குந் தனயர்பால் — வாலியசீ
ராரணமோ கோவையோ வந்தாதி யோநிகண்டோ
சீரணவுஞ் சுத்த சிவாகமமோ — பேரணவுங்
காவியமோ வாய்ந்த கணக்கோ விலக்கணமோ
தூவியலு நீதித் துறைகளோ — தாவியலாத்
தக்க புராணமோ தர்க்கமோ நாளுளும்
பக்குவமாய் வீறிப் பலிக்கவுநும் — மக்கடமைக்
கானலைநீ ரென்னுங் கருத்தாற் பிறபுலத்தி
னேனலைய வைத்தீ ரெமரங்காள் — ஈனமிலாக்
கல்விசில வாண்டுமுள காண்மினெனிற் சைவபத்திச்
செல்வமுண்டோமெய்ந்நூற்றெளிவுண்டோ — நல்வளனுர்
கன்னல்கைக்குங் கையாது *கானிம்ப மென்பாரை
யிந்நிலத்திற் கண்டவர்கள் யார்.

ஈசுர வருஷத்திலே மழை குறைந்தமையால் சோழதேசம் பாண்டிதேசங்களிலும், இலங்கையிலும் முன் வருஷங்களைப் போல நெல்விளைவில்லை. இதனல் யாழ்ப்பாணத்திலும் பஞ்சமுண்டாயிற்று. அதனைக் கண்ட நாவலர் தமது கையாற் சிறிது பொருளுதவி, சில புண்ணியவான்

*கானிம்பம் = (கான் + நிம்பம்) = காட்டிலுள்ள வேம்பு.

களைக் கொண்டு ஏழைகளுக்குக் கஞ்சி காய்ச்சி வார்ப்பித்தார். பஞ்சம் நீங்கும் வரையும் இந் நன்முயற்சிக்கு உதவி செய்து, அத்தருமத்தை நடத்துவோர் இலராதல்பற்றி, அத்தருமத்தை விட்டுவிடும்படி நேரிட்டது. அச்சமயத்தில் கல்வி, செல்வம், கொடை முதலியவற்றிற் சிறப்புற்றோங்கிய அத்துவக்காத்தாகிய கி. விறிற்றோ (Advocate C. Brito) கொழும்பினின்றும் யாழ்ப் பாணம் வந்திருந்தார். அப்பொழுது, ஏழைகள் பசியினால் வருந்துதலையும், அவர்களுக்குக் கஞ்சி வார்த்தல் இல்லாமற் போதலையுங் கண்டுங்கேட்டு மறிந்தவராகிய இப்பிரபு, தம்பொருள்கொண்டு சிலநாள் நடத்திவந்தார். அதன்பின் சில பிர புக்களை யழைத்து, ஒரு கூட்டங்கூட்டி, அதற்குக் "கஞ்சித்தொட்டிக் கூட்டம்" எனப் பெயர்தந்து, அக்கஞ்சித் தொட்டி நிலைபெறும் பொருட்டுப் பொருள் சேர்த்து, கஞ்சி வார்த்தலை யொழித்து, அன்னங் கறி கொடுக்கும்படி ஏற்பாடுகளைச் செய்தார். அஃது ஆடிமாசம் முதல் தைமாச மிறுதியாகிய ஏழு மாசங்களாக நடத்தப் பட்டது. தை மாசத்திலே மழை எங்கும் பெய்து, தானிய முதலியவைகள் மிக விளைந்தமையால், ஏழைச் சனங்களெல்லாம் துன்பநீங்கி இன்ப முற்றார்கள். அப்போது கஞ்சித்தொட்டி நிறுத்தப் பட்டது. அத் தருமத்துக்குச் சேர்ந்த தொகை யிலே செலவழித்து எஞ்சிய தொகை ஏறக்குறைய 700 ரூபா வரையில் யாழ்ப்பாண ஒறியன்றல் வங்கியில் (Jaffna Oriental Bank) கட்டப்பட் டிருக்கின்றது. இது நிற்க.

ஈசுர௵ தைமீ இலங்கைத் தேசாதிபதி யாழ்ப்பாணத்துக்கு வந்தபோது, யாழ்ப்பாணத் தாருக்கு அத்தியாவசியகம் வேண்டற்பாலனவா கிய சில விஷயங்களைக் குறித்து, ஒரு விண்ணப்பம் பண்ணியிருந்தார்.

வெகுதானிய௵ புரட்டாசிமீ மேற்படி வித்தியாசாலையிலே கல்விகற்கும் பிள்ளைகளைப் பரீக்ஷித்துச் சைவப் பிரசங்கங்கள் செய்தபோது, அ. சிவசம்புப்புலவர் சொல்லிய பாடல்கள் வருமாறு :

வெண்பா

சைவப்ர காசவித்யா சாலையிதிற் கற்பினுறூஉ
மெவ்வெப் பயனு மெனக்கேட்டுந் — தெய்வச்சீர்
அற்றகழ கந்தோறு மன்னுதங் காதலரைப்
பெற்றவர்விட் டாரென் பெற.

எங்கெங்குஞ் செந்தமிழ்நூ லெங்கெங்குஞ் சைவமத
மெங்கெங்கும் பத்திநெறி யேறியவே — யெங்கெங்கு
நண்ணியசீ ராறுமுக நாவலனல் லைப்பதிவா
ழுண்ண லுளத் தின்கருணை யால்.

கலித்துறை

முன்னுடு நால்வர் முதலாப்தர் தென்னன் முதன்மன்னவர்
பன்னு ளினிது வளர்த்தமெய்ச் சைவமும் பைந்தமிழும்
பின்னுளி னறு முகநா வலனெம் பெருந்தகையோன்
றன்னுலவ் வாறு நிகழக்கண் டோமிது தான்வியப்பே.

காவலர் வைகியென் செல்வர்கள் வாழ்ந்தென் கலைஞர்பிற
ரேரவற வைகியென் மற்றவர் வைகியெ னுண்மைத்தொன் னூ
லாவலிற் கற்பவர் பாலெளி தூட்டிடு மாறுமுக
நாவல னிருந் தாலுயிர் யாவுக்கு நற்சுகமே.

**விருத்தம்**

நன்றுசெயுங் கருத்தினிரே னவையில் சீர்த்தி
நல்லைநக ராறுமுக நாவலன்முன்
பொன்றிலருந் தமிழ்பொன்றும் சைவம் பொன்றும்
பொன்றிடா மேபுரிவார் புவிக்கணில்லை
யென்றுமுணர் வீரிவனை யூழி மட்டு
மீண்டிருத்தி யருளெனவுற் றிரந்துமாழை
மன்றனடித் துணையில்வரங் கிடப்ப வின்னே
வம்மினே நமரங்காண் மறுக்கலீரே.

மாறுபடு கத்துகைப்பொய்ம் மதங்க ளாய
வல்லிருண்முற் றும்வெருவி மடிந்துவீழ
வாறுமுக நாவலனு மலரி வான்மை
யருப்பிரசங் கச்சுடரோ டணையவாய்ந்த
பேறுடைய தெனிற்றெல்லைப் புலோலி யூரிற்
பிறங்கியகல் லூரியிதிற் பிரிவுறுமற்
றேறுமகிழ் வொடுகற்குஞ் சிறுவ ரின்னுந்
திருந்துவரென் பதற்கையஞ் சிறிதுமின்றே.

அப்போது ம. முத்துச்சுவாமிக்குருக்கள் சொல்லிய பாடல் வருமாறு:

**பஃறொடை வெண்பா**

சீரேறு நல்லைத் திருநல்லை யென்றுலகிற்
பேரேறு தெய்வப் பெரும்பதியி — னேரேறு
கங்கா குலமாங் கவின்றிலகும் வான்பரவை
மங்கா துதித்து வளர்பதியாம் — பொங்குபுகழ்ப்
பாவலர்கள் போற்றும் பண்பேறு மாறுமுக
நாவலனென் றேயுரைசெய் நல்லறிஞ — னுவலுடன்
புந்தியெனு மந்தரத்தாற் பூரணமாம் பல்கலையென்
சிந்து வினைமதித்துச் செம்பொருளாம் — புந்திமகிழ்
செவ்வியதோர் பேரமுதத் தீஞ்சுவையைத் தேர்ந்தெடுத்தாங்
கவ்வியமில் சிந்தை யரும்புலவர்க் — கெவ்வமிலா
நேயமுட னூட்டியே நெஞ்சை மகிழுவித்தான்
றுயனையன் றண்ணளியான் றுன்.

அப்போது அ. வேன்மயில்வாகனர் சொல்லிய பாடல்கள் வருமாறு :

### கலித்துறை

வரமுடை யாறு முகநா வலனெனு மாமுகில்போய்ப்
பரமுடைக் கல்வி யெனுங்கடல் வற்றப் பருகிவந்தே
யுரமுடைப் பூதல மாந்தர்த நெஞ்ச வுயர்செறுவிற்
றிரமுடைப் போதனை யாமழை தூய்ச்சிவந் தேக்கியதே.

### விருத்தம்

ஆறுமுக நாவலன்சீர் கேட்டே யஞ்சி
யருந்தமிழ்சே ரகத்தியனும் பொதியஞ் சார்ந்தான்
வீறுடைய சேடனும்பா தலம்போய் வீழ்ந்தான்
வேறுள்ள புலவரெல்லாம் வெருவி நின்றார்
பேறுடைய விவர்பெற்றி யிவ்வா றென்னிற்
பெருமைசேர் பசுபதியைப் பேணு ராகி
மாறுபடத் திரித்துணர்ந்து பசுவைப் பேணு
மாந்தரெல்லா மென்செய்வா ராள்வா ரன்றே.

### வெண்பா

சீரேறு நல்லைநகர்த் தேசிகனு நாவலனார்
நாரேற நாமுன்செய் நற்றவத்தால் — நேரேறப்
போந்திலரேற் சைவமெங்கே பூதியெங்கே கண்டியெங்கே
யேந்துபுக ழைந்தெழுத்தெங் கே.

அவ்வித்தியாசாலையிலே அம்மாசம் 26உ சைவப் பிரசங்கஞ் செய்தருளியபின் ஒரு பெருமழை பெய்தது. அப்போது அ. சிவசம்புப்புலவர் சொல்லிய பாடல் வருமாறு :

### கலித்துறை

அன்பர்கண் ணீர்மழை யுஞ்சிவ னார்மெய் யருண்மழையு
மன்பிர பந்த மழையும் பிரசங்க மாமழையுங்
கொன்புனை நீலப் புயலின் மழையுங் கொடைமழையு
மின்பொடு மல்கப் புலோலிமெய் வாழ்வினி லேறியதே.

அப்பொழுது செய்த பிரசங்கங்களொன்றிலே, புறச்சமயமாகிய சமணசமய வழி ஒழுகிய செட்டிச்சியாகிய கண்ணகியைத் தெய்வமென வணங்குதலும், அம்மாத்திரத்தினில்லாது சிவ குமாரர்களாகிய விக்கினேசுரக்கடவுளையும், சுப்பிர மணியக் கடவுளையுங் கண்ணகியி னிருபக்கத் தினும் வைத்து இவர்களோடு அக் கண்ணகி யைச் சமத்துவப்படுத்திப் பூசித்தலும் அதிபாதக மென்றும், இப்படிப் பூசிப்பவர்களும் வணங்கு பவர்களும் யாதொரு பயனையும் அடைய மாட்டார்களென்றும், பயனையடையாமை மாத்திரத்தினில்லாது அச் சிவகுமாரர்களுடைய கோபத்துக்கு இவர்கள் இலக்காவார்களென்பது சத்தியமென்றும், இக்கண்ணகியின் சரித்திரமும், இக் கண்ணகியின் கணவனாகிய கோவலன் சரித்திரமும் இலக்கியங்களுளொன்ருகிய சிலப் பதிகாரத்திலே சொல்லப்பட்டிருக்கின்றதென் றும் விரித்துப் பிரசங்கித்தார். அங்கே சிலநா ளிருந்து மீட்டும் யாழ்ப்பாணம் வந்தார். அவ் வருஷம் பங்குனிமாசத்தில் சுரத்தாற் பீடிக்கப் பட்டு இருந்தார். அப்பொழுது அவரைத் தரிசிக்க வந்தவர்கள் அவருடைய அசௌக்கியத்தைக் குறித்துத் துக்கப்படும்பொழுதெல்லாம், சரீர நிலையாமையைக் குறித்துப் பலவாருகச் சொல்லி, அவர்களைத் தைரியப்படுத்துவார். அச்சுரம் சில நாட்களில் நீங்கிவிட்டது. அப்போது அவருக்கு வயசு 56 ஆயிற்று.

சைவசித்தாந்த சமயாசாரியராகிய திருஞான சம்பந்தமூர்த்திநாயனுர் சிவசாயுச்சியமடைந்த திருநக்ஷத்திரமாகிய வைகாசிமாச மூலநக்ஷத் திரத்திலே வண்ணுர்பண்ணைச் சைவப்பிரகாச

வித்தியாசாலையிலே சைவப்பிரசங்கஞ் செய்த போது, பிரசங்கத்துக்கு வந்திருந்த சனங்களை விளித்து, ''நான் உங்களிடத்தே கைம்மாறு பெறுதலைச் சிறிதுமெண்ணுது, நம் சமயத்தவர்க ளோடும் புறச்சமயத்தவர்களோடும் பெரும் பகையையெடுத்து, முப்பத்திரண்டு வருஷ காலமாக உங்களுக்குச் சைவசமயத்துண்மையைப் போதித்துவந்தேன். எனக்குப் பின் சைவசமயங் குன்றிப்போமென்று பாதிரிமார்கள் சொல்லு கிறார்கள். ஆதலால், நான் உயிரோடிருக்கும் போதே உங்களுக்காக ஒரு சைவப்பிரசாரகரைத் தேடிக்கொள்ளுங்கள். இன்னும், என்னைப்போலே படித்தவர்களும் சன்மார்க்கர்களுமாய் அநேகர் வருவார்கள். ஆனால், உங்களுடைய வைவைக் கேட்டுக்கேட்டுக் கைம்மாறு கருதாது சமயத்தைப் போதிக்க என்னைப்போலே ஒருவரும் வரார்'' என்று அவர்களுக்குச் சொல்லியருளினார்.

பிரமாதிஞூ கார்த்திகைமீ 18உ செவ்வாய்க் கிழமையிரவு அவருக்கு அசௌக்கியங்கண்டது. மற்றைநாள் ஸ்நானம்பண்ணக்கூடாதிருந்தமை யால் வேதாரணியத்துச் சைவாசாரியர் ஒருவ ரால் அவருடைய பூசை செய்யப்பட்டது. அப்போது தாம் அந்தரியாகஞ்செய்து, புற மண்டபத்தினின்று புஷ்பாஞ்சலித்திரயஞ் செய்து இருந்தனர். மற்றைநாளும் அவ்வாறே செய் தனர். மற்றைநாள் அந்தரியாகஞ்செய்து, புற மண்டபத்தினின்று பூக்களைக் கைநிறைய ஏற்று, அப்பூக்களை ஒவ்வொன்றாக எடுத்து, தமது சிரசிலே போட்டுக்கொண்டு, அஞ்சலி செய்து, திரும்பிவந்து சயனத்தின்மீது படுத்தனர். அன் றிராத்திரி ஐந்து நாழிகை வரையில் அறிவிற்

சற்றேனும் பேதமில்லாதவராயிருந்து தேவார முதலிய அருட்பாக்களை ஓதும்படி கட்டளையிட்டு, அவைகளோதப்படும்போது சிதம்பரம், காசி, மதுரை, திருச்செந்தூர் முதலிய புண்ணிய தலங்களின் விபூதியணிந்து, உருத்திராக்ஷம் பூண்டு, கங்காதீர்த்தமுட்கொண்டு, கைகளைச் சிரசின்மேற் குவித்து, உயிர்க்குயிராயுள்ள சிவ பெருமானுடைய திருவடிகளிலே சிந்தை வைத்து, தமது ஐம்பத்தாரும் வயசும் 11-ம் மாசமுமாகிய பிரமாதிஸு கார்த்திகைமீ 21உ சுக்கிரவாரமும் மகநக்ஷத்திரமும் சத்தமி திதியும் கூடிய புண்ணிய காலத்திலே, இரவு 10 நாழிகையிலே ஸ்ரீநடராஜப் பெருமானுடைய குஞ்சிதபாத நிழலையடைந்தார். இருபத்திரண்டாந் தேதியாகிய சனிக்கிழமை அவருடைய திருமேனி விபூதி உருத்திராக்ஷ முதலிய சிவசின்னங்களாலும், பிறவற்றாலும் அலங்கரிக்கப்பட்டு, மிகச் சித்திரிக்கப்பட்ட பூந் தேரின்மேல் ஏற்றப்பட்டு, எண்ணில்லாத சைவ சமய பக்தர்கள் சூழ்ந்து செல்ல, அருட்பாக் களை ஓதுவார்களோதிக்கொண்டுவர, வனத்தின் கண்ணே கொண்டுபோகப்பட்டு, அங்கே வரணி கரணவாய் ஆதீனத்தார் முன்னிலையில் வேதா ரணியத்துச் சைவாசாரியராற் சமய விசேட நிர்வாண அந்தியேட்டிகள் செய்யப்பட்டு அன் றிராத்திரி எட்டுநாழிகைவரையில் பரிமளமிகுந்த சந்தனப்பூம்பள்ளிமிசை தருவித்துத் தகிக்கப் பட்டது. பாஷாண ஸ்தாபனம் முதலிய கிரியை களும் முறையே செய்யப்பட்டன.

திருச்சிற்றம்பலம்

முற்றிற்று

ஆறுமுகநாவலன் றிருவடி வாழ்க.

தமிழ்நாட்டிலுள்ள சைவசமயிகளை ஈடேற்றும் பொருட்டுத் திருவவதாரஞ் செய்தருளிய சற்குருநாத சுவாமிகள் என்னும் திவ்விய திருநாமத்தையுடைய **ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்** அவர்கள் கார்த்திகைமாசத்து மகநக்ஷத்திரத்திலே விதேகமுத்தியடைந்தார்களாதலின், அவர்களிடத்தே கல்வி கற்றுக்கொண்டவர்களும், அவர்களாலே தாபிக்கப்பட்ட சைவப்பிரகாச வித்தியாசாலைகளிலே கல்வி கற்றுக்கொண்டவர்களும், அவர்களுடைய பிரசங்கங்களாலும், புத்தகங்களாலும், பத்திரிகைகளாலும் பயனை எய்தினோர், எய்துகின்றோர், எய்துவோர்களுமாகிய எல்லோரும் அம்மாச நக்ஷத்திரத்திலே அவர்பொருட்டுக் குருபூசை செய்யத் தக்கது. இன்னும் அவர்களை நினைப்பிக்கும் பொருட்டுத் தங்கள் தங்கள் வீடுகளிலே அவர்களாலே செய்யப்பட்ட புத்தகங்களை வாங்கிவைத்து வாசிக்கத்தக்கது.

உ
சிவமயம்

திருச்சிற்றம்பலம்

வேதாகமோக்த சைவசித்தாந்தப் பிரவர்த்தகரும், சிவாகமவிற்பன்னரும், திருநெறித் தமிழாகிய தேவார திருவாசகங்களின் உண்மைப் பொருளுணர்ந்தவரும், இலக்கண விலக்கியக் கடலை நிலைகண்டுணர்ந்தவரும், சிவனடியாரைச் சிவனென மதிக்கும் மெய்யடியாரும், தமிழ் நாடெங்கும் நல்லறிவுச்சுடர் கொளுத்தி மெய்யறிவை ஊட்டிய சைவாசாரியரும், நிருவாண தீக்ஷிதரும், நைட்டிகப்பிரிமசரிய வொழுக்கத்திற் றவறுதவரும், சைவப் பிரசங்கமென்னும் விடா மழையைப் பொழியுந் திருவாயையுடையவரும், காலந்தோறுஞ் சிவனடியாருக்குத் திருவமுது கொடுக்குஞ் சைவப்பிரபுவும், பரசமய விருளை ஓட்டெடுக்கச்செய்த பரமாசாரியரும், சிவஞான நூல்களை ஓதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், கேட்டதைச் சிந்தித்தல் என்னும் ஞான யாகஞ் செய்தவருமாகிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக **நாவலரவர்கள்,** ஸ்ரீ சிதம்பரநடராஜப் பெருமானுடைய குஞ்சிதபாதநிழலையடைந்தபொழுது, சொல்லப்பட்ட செய்யுட்கள் வருமாறு :-

சென்னபட்டணம் :
ம. ா. ா. ஸ்ரீ

## சி. வை. தாமோதரம்பிள்ளை

### விருத்தம்

வேதம்வலி குன்றியது மேதகுசி வாகம
விதங்கள்வலி குன்றி னவடற்
சூதன்மொழி மூவறுபு ராணம்வலி குன்றியது
சொல்லரிய சைவ சமயப்
போதம்வலி குன்றியது பொற்பொதிய மாமுனி
புகன்றமொழி குன்றி யதுநம்
நாதனிணை ஞாலமிசை நாடரிய ஆறுமுக
நாவல ரடைந்த பொழுதே.

### வெண்பா

நல்லைநகர் ஆறுமுக நாவலர்பி றந்திலரேற்
சொல்லுதமி ழெங்கே சுருதியெங்கே — எல்லவரும்
ஏத்துபுரா ணுகமங்க ளெங்கேப்ர சங்கமெங்கே
ஆத்தனறி வெங்கே யறை.

### சிலேடைக் கலித்துறை

தகைசேர் தமிழ்க்குத் தனிமுதல் வன்கந்த வேள்குமர
னகுவே றலமிசை யான்புல வோன்குரு நல்லையறு
முகநா வலனர ஞர்க்கினி யான்புகழ் மொய்ம்பனிம்பர்
இகல்சூர் மதப்பகை செற்றீச ஞருல கெய்தினனே.

### நக்ஷத்திர வெண்பா

கார்த்திகைமா தத்துமகங் காசினிக்குச் சைவநிலை
சேர்த்திப் பரசமயஞ் சேதித்துச் — சீர்த்திமிக
மேவுதமிழ் தந்தகந்த வேணல்லூ ராறுமுக
நாவலர்வீ டுற்றதிரு நாள்.

### குறள்

நாயனுர் நாற்குரவர் நாவலர்தென் ஞாலமுய்ய
மேயினு ரீசனருண் மேல்.

உடுப்பிட்டி:

ம. ா. ா. ஸ்ரீ

## அ. சிவசம்புப் புலவர்

### நேரிசை வெண்பா

தேவரசு மெய்ந்நூற் றிறம்பலவு மாருயிருக்
காவலினுற் போதித்த வாறுமுக — நாவலனர்
சீர்முகத்தைக் கண்டவர்க டெண்டிரைப்பூ மண்டலத்தில்
யார்முகத்தைக் காண்ப தினி.

கற்ருர் பிறரெல்லாங் காசினிப்பொய் வாழ்விலலைந்
துற்ருர் செயற்பால வுன்ருராய் — முற்ருர்
நயத்தகைய வாறுமுக நாவலனே யென்றுஞ்
செயத்தகைய செய்தான் றெளிந்து.

### எழுபத்திரண்டுசீர்க் கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தருமேவு பொன்னுலக நிகரான நல்லைத்
தலத்திலமர் சிந்தாமணி
சாலப்பன் ருட்கந்த வேள்செய்து வைத்தவொண்
டவவித்தின் வந்தவிளைவு
சான்றமது ரைச்சங்க மூன்றுமிங் கொன்ருய்த்
தலைப்பட்ட பெரியசங்கஞ்
சம்புபூ சாநியம மேத்திய நயிட்டிகந்
தவறுருப் பிரமசாரி
சம்ஸ்கிருத பாஷா வியாகரண சித்தாந்த
தர்க்கவே தாந்தநிலையந்
தகையுறும் பதிபாச பசுலக்ஷ ணப்ரபல
சைவாக மப்பொக்கிஷஞ்
சார்ந்தவர் தமக்கரிய நுண்பொருட் குவைதருஞ்
சகலசாஸ் திரசாகரஞ்
சத்யசிவ தர்மிணித் தீக்ஷாவி சிட்டவா
சாரியச மூகதிலகந்

தண்டமிழ்ப் பரவையை முகந்துயிர்ப் பயிர்களைத்
தழைவித்த பருவமேகந்
தமிழ்நிலக் கனகவட பர்வத முகட்டிற்
றயங்குமா ணிக்கதீபந்
தன்னுணை வழியினிற் பச்சைவ நாட்டையொரு
தனிபுரந் திடுமெயரசு
தழனிரைய வாய்ப்புகுத் திடுமிதர சமயத்
தமத்தினைப் பருகுமென்றாழ்,

மருமேவு வெண்கமல வாணிநட மகலா
மகத்வப்ர தாபமன்றம்
வழிவழித் தலைநின்ற பரமாப்த பரசிவ
மதாசார தெய்வசொரூப
மாதவநன் மாணவகர் நெஞ்சகக் கோயிலில்
வளர்ந்திடுஞ் சேமவைப்பு
மாணிக்க வாசகர் முதற்குரவ ரோடறிஞர்
வாழ்த்தியேத் தியமெய்க்குரு
வாடும் பசிப்பிணிக் கறுசுவையு ணுத்தினம்
வழங்கிடுங் காமதேனு
வள்ளன்மை யொழியா திலங்குமா டம்பர
மகாராச ராசபிரபு
மதுரப்ர சங்கவமிர் தத்தினு லுலகத்தை
வாழ்வித்த சற்பாத்திர
மாண்புபெற முற்றியுண் ணெகிழ்ந்தின்ப மாமது
வழிந்திடும் பத்திக்கனி
வந்திரப் பவர்குறை கிளக்கமுன் வேண்டுவ
மகிழ்ந்துதவு பாரிசாதம்
வாலறிவி னேரருட் பாடனற வொழுகுறாஉ
மணிவளப் பூர்ணகும்ப
மண்டல மெலாம்பெரிது மேற்கொளமெல் கிக்குளிரு
மங்களசு கந்தபுஷ்பம்
வரசாது சனசங்க பூச்யபூ ஷணநடுவில்
வாய்ந்தநா யகரத்தினங்;

கருமேவு முயிர்களுக் கானந்த மெய்ந்நிலைமை
காட்டிய தெருட்ப்ரகாசங்
கவினும்வீ ணுபுர மகீபதி சிரத்திஞெளிர்
காஞ்சன மணிக்கிரீடங்
கல்லூரி யூர்தொறு மமைத்துச் சிறுர்க்கினிய
கல்வியமு தூட்டுமன்னை
கற்பியல் வழாவகை நிரம்பிய வியுற்பனக்
கவிஞருக் கிருகண்மணி
காதலிற் பலகாலு மோடிமெய்க் கல்விக்
கடற்கரைகள் கண்டவங்கங்
கங்கா குலப்புனித க்ஷீரோ ததித்தலைக்
காண்டகவு தித்தமதியங்
கலபமயி லூருமெம் மான்புகழ்ப் பணிகளமர்
கதிர்செயு மணிப்பேடகம்
கலைஞராம் பொன்னுயர்வு தாழ்வுக டெரித்திடுங்
காமர வரஞ்சியாணி
கலகப்ர சங்கவிப சங்கமிட லெஞ்சிக்
கலங்கச்செய் விசயசிங்கங்
கனிவுடைச் செந்தமிழ்க் கலைதலை யெடுத்துக்
களிப்புறச் செய்தவழுதி
கமையறி வடக்கமுத லாஞ்சிகர முடனெழூஉங்
கனசுகுண மாபூதரங்
காவலர்க ளேனையர்கள் காணிக்கை யொடுநிதங்
கைதொழுந் தேவாலயந் ;

திருமேவு மன்னவர் தமக்குமுத் யோகத்
திறந்தேற்று மதியமைச்சு
தேசாபி மானமுஞ் சமயாபி மானமுஞ்
சிதையாமல் வாழ்ந்தவாழ்வு
சேர்ந்தவர் செயுங்குறையை யன்றே மறந்திடுஞ்
சித்தசுத் தித்தயாளு
திகழ்நாத பரியந்த விளைவெலா முடியத்
தெளிந்திடும் பெரியயோகி
தேற்றுறும் போதனு நியமசா மர்த்திய
சிரேட்டசன் மார்க்கபீடம்

திரிபகல நூலுரைகள் பலவுலகு வந்திடச்
செய்தவதி யூகசாரஞ்
சிற்றம் பலத்தாடு மானந்த நாடக
தியானபுண் ணியஸ்ரீல
ஸ்ரீயாறு முகநா வலன்வரசு கானுபூ
தித்தகைய சைவமுதல்வன்
செறிதரும் பிரமாதி வற்சரத் தேண்மதித்
தேதியிரு பத்தொன்றினிற்
செயசுங்க வாரமக நாளபர பக்கமுறு
திதியெனுஞ் சத்தமியினிற்
றேசோ மயானந்த வாசாம கோசர
திகம்பர சமஸ்தசுரபூ
சிதவகில சகதண்ட நாதநித் தியசுத்த
சிவபதத் தெய்தினனே.

பன்னிருசீர்க் கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வரமேவு துய்யமறை யாகம வழக்கொடுநன்
மக்கள்பயி றேசமதனில்
வளர்தவச் சாதியி லுதித்திதர மதமுரு
மாபாக்ய மாண்புகுலவித்
தரமேவு கலைமுழு துணர்ந்துவாழ் வெனுமயற்
சாகரந் தப்பிமிடியிற்
றளரா தடக்கநிறை வாய்மைகொடை யாதிய
தழீஇயுயிர்கண் மாட்டன்புறீஇத்
திருமேவு மருணடப் பதிபாச பசுவிய
றெரிந்துமெய்ப் பத்திவாய்ந்து
சிவபூசை செய்துதமிழ் நாட்டினைத் தனியரசு
செய்துபல நூல்பரப்பி
யுரமேவு சைவப்ர சங்கஞ்செய் திளைஞர்கட்
குணர்வுதரு கழகநிறுவி
யோங்குபுக ழாறுமுக நாவலன் பெற்றவுயர்
வொருசேர யார்க்குமிலையே.

### எண்சீர்க் கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஓங்கியதொல் காப்பியத்திற் குரைமுன் செய்த
வுவப்பினாற் சிலருரையா சிரிய னென்ன
வாங்கிளம்பூ ரணனேவியந் துரைத்தா ரன்னோ
னவ்வுரையு மிழிவின்க ணமைந்த தம்மா
தாங்குபுகழ் நாவலனுஞ் சிறப்புப் பேராற்
றன்னியற்பே ருலகமெலாந் தழைக்க நின்ற
வீங்கிவன்செய்ந் நூலுரைகள் பலசற் றேனு
மிழிவின்கட் படுவவென்றியா ரியம்பு வாரே.

வெண்ணீறுங் கண்டிகையும் வெண்பொற் றூசும்
வெண்ணகையும் பவித்திரமும் விளங்கக் காட்டி
யுண்ணீடு பத்தியினர் போலிங் குள்ள
வொருசிலர்தா முரைக்குமொழி யுவந்து கொள்ளே
மண்ணீடு புகழ்த்திருநா வலனார் சொல்லும்
வாசகங்க ளவையவையே வைய முய்யப்
பண்ணீடு மொழிபங்கன் பகர்ந்த வாக்காப்
பணிந்துகொள்வே மிதுநமக்குப் பயன்பட் டன்றே.

வித்தகமெய்ந் நூலுரைக டுகளிற் பல்கி
விராய்க்கிடந்து வரம்பிகந்த விதங்கள் பல்வே
றத்தனையு மேடுகளின் முன்னர்க் கற்ற
வாசிரியர் பெரிதுணர்வ ரவைநன் குய்ந்து
சுத்தமுறத் திருத்தியச்சி லிடுவித் தியார்க்குந்
தொலைவிலுணர் வுதிப்பித்தான் றொல்லைச் சீர்த்தி
யுத்தமநா வலனவன்போ லவற்றை யெல்லா
முய்த்துணர்ந்து திருத்தவல்லா ருலகத் தியாரே.

### கட்டளைக்கலித்துறை

மறையோ ரருட்சைவ தேசிகர் பாவலர் வாழ்ந்தனர்நூற்
றுறையோடு சைவந் தலைசாய்ந் திடக்கண்டு தூங்கினர்நா
விறையோ னொருதனி யேநின் றவற்றை யெழுப்பிநிறீஇக்
குறையோவறவைத்ததற்கென்கைம்மாறுகொடுத்தனரே.

பாவலர் பற்பலர் செல்வர்கள் பற்பலர் பாரடங்க
மேவின ரேனு மவரா லுலகுக்கு மெய்ப்பயனென்
ஞவல ஞலிங்கு நாளுக்கு நாள்வந்த நன்மையெல்லா
மேவருந் தேர்வ ரிவன்போல் வருபவர் யாரினியே.

என்பிர பந்தங்கள் கேட்டுப் புலமை யிருஞ்சிறப்பீந்
தன்பிரி யாமற் பரிசு செயுமென் றறைந்தெவர்க்கு
நன்பிரி யத்திற் றலைமையெல் லாந்தந்த நாவலனு
ரின்பிற வாநிலத் துற்ரு ரினித்துணை யாரெமக்கே.

ஆரூர னில்லைப் புகலியர் கோனில்லை யப்பனில்லைச்
சீரூரு மாணிக்க வாசக னில்லைத் திசையளந்த
பேரூரு மாறு முகநா வலனில்லைப் பின்னிங்கியார்
நீரூரும் வேணியன் மார்க்கத்தைப் போதிக்கு நீர்மையரே.

புல்லரை யேயுள்ள சொற்பொருள் யாவும் புலவர்தெரீஇ
நல்லன வாகப் புனைந்துவிட் டாரினி நாமென்செய்வேந்
தொல்லிய லாறு முகநா வலனைச் சுருக்கமறச்
சொல்லியநாமகட்கெண்ணமுண்டேலென்றுஞ்சொல்லுகவே.

---

கும்பகோணம்:

ம. ா. ா. ஸ்ரீ

## பூ. முருகேசப்பிள்ளை

### வெண்பா

ஆறுமுக நாவலனை ஆருமுண ராப்பொருளைத்
தேறுமுகங் கொண்டு தெளிந்தானை — ஆறுமுகம்
என்றிருக்க ஓர்முகமும் எங்களுக்குத் தோற்ருமற்
சென்றொளித்தா னந்தோ சிவா.

காணுங்கண் ணின்னுமொன்று கண்டுகொண்டோ மென்றியாழ்ப்
பாணம் மகிழும் பருவத்தில் — தாணுவெனுஞ்
சங்கரபண் டிதன்முன் சாய்ந்தான்பின் ஆறுமுகப்
புங்கவநீ யும்மறைந்தாய் போய்.

ஆறுமுக நாவலனென் றொலெவரு மன்புகொண்டிங்
கேறுமுக மாயெம்மை யேற்றுவந்தார் — ஆறுமுக
நாவலனே யின்னினியே நம்மையொரு நாயென்றும்
பாவனையும் பண்ணுர்கள் பார்.

திங்களணி செஞ்சடையான் றேவனென வந்ததுவும்
அங்கவனுல் நூலா யமர்ந்ததுவும் — எங்குமிசை
கொண்டியாழ்ப் பாணங் குலாவியதும் ஆறுமுக
அண்டர்பிரான் வந்தபின்பே யாம்.

ஆரிருந்தென் ஆர்சிறந்தென் ஆறுமுக நாவலன்போல்
ஆரிருந்து போதிப்பார் ஐயையோ — ஆறணிந்து
தேக்குமதிச் செஞ்சடிலத் தேவுருவு கொண்டாலும்
வாக்கவனைப் போல வரா.

எவ்விடமும் நின்புகழே எவ்விடமும் நின்பேரே
எவ்விடமும் நின்சொல்லே எய்தியபோல் — எவ்விடமும்
எக்கா லமுமில்லை இன்னினியார் நின்புகழ்க்குத்
தக்கார்சொல் நாவலன்நீ தான்.

கந்தவேள் செய்தவம்போற் காணுந் தவமுமவன்
மைந்தனும் நாவலன்போல் மைந்தர்களும்—செந்தமிழில்
வல்லவர்க ளன்னவன்போல் வந்திடுவ தும்முலகில்
இல்லைஇல்லை இல்லை இனி.

கட்டளைக்கலித்துறை

மாமிக்குங் கொண்ட மருகிக்குஞ் சண்டையை மாற்றியிந்தப்
பூமிக்குட் கல்வியுஞ் செல்வமுஞ் சேரப் புலவரெவர்
தாமிக் கடைந்தவர் நின்றனைப் போலிந்தத் தன்மையினுல்
நீமிக்க வன்நல்லை நாவல னேயிது நிச்சயமே.

நிந்தாஸ்துதி விருத்தம்

வாணிதனை வசப்படுத்தி மலரயனை நான்முகனுய்
மயங்கச் செய்து
பேணியவ ளடிபணிந்து பிரிவகற்றிப் புணர்ந்தவனைப்
பிரமந் தேர்ந்த

மாணியென்றும் நீதியுளா னென்றுஞ்சொல்ல வகையெங்கே
இன்னுச்சொன் மாண்டநின்னைக்
காணுவதோ விறப்பதுவிங் காறுமுக நாவலனே
கமிப்ப தன்றே.

---

நீர்வேலி :
ம. ா. ா. ஸ்ரீ
சிவ. சங். பண்டிதர்
**சிவப்பிரகாசபிள்ளை**

### தேற்றரவு வெண்பா

நையலிரோ வையகத்தீர் நாவலன்ருன் போயினனென்
றையனவன் முத்தி யடைந்தனனல் — மெய்யே
நலமடைந்தா னென்றே நனிமகிழ்க யாரும்
பலபுலம்பி யென்னே பயன்.

### வெண்பா

செய்யபிர மாதியினிற் றேள்பின்னூர் சத்தமியில்
வையமுயச் சைவம் வளர்த்தபிரான் — துய்யபுகழ்
ஆறுமுக நாவலன்ரு ஞஞ்சிவஞா னத்தடைந்தான்
தேறுசிவ சாயுச் சியம்.

---

ஆவரங்கால் :
ம. ா. ா. ஸ்ரீ
**சு. நமச்சிவாயபிள்ளை**

### வெண்பா

தேறுமுது சர்வகலை தேர்ந்த ஸ்ரீலஸ்ரீ
ஆறுமுக சாமியே யப்பனே — கூறுமுதற்
சற்குருவே சீனியே சர்க்கரையே கற்கண்டே
இக்குவல யம்விடுத்த தேன்.

ஈசனினிச் சைவநிலே யிட்டுவர யாரிடத்து
நேசமொடு வைப்பனதை நீயறிவாய் — ஓசைத்
திருவாய் மொழிந்து திடமில்லா நாங்கள்
ஒருவாரு றச்செய்வா யே.

நல்ல சிவநீதி நாட்டவுநாம் பேயர்சிலர்
அல்லவென்று தள்ளுவதென் ருமென்று — வல்லபர
காயப் பிரவேசங் கண்டதினின் ருென்றியற்றத்
தேயத் தொளித்தாயோ செப்பு.

சற்குருவே மெய்த்திருவே தண்ணளியே விண்ணெளியே
சொற்கிருந்தா யெங்கிருந்தாய் சொல்லாயே—நிற்குமுனம்
குற்றமது செய்தேமோ கோடுநெறி பெய்தேமோ
பெற்றியது வந்துவெளி பேசு.

பண்டிதர்கள் மாண்பகலப் பட்டாரே பாரிடத்தில்
மண் டுகலே வாணியும்பின் வாங்கினளே—தொண்டரெல்லாம்
தம்மாவி யற்ருர்போற் சார்ந்தாரே யாறுமுகப்
பெம்மானே நீபிரிந்த பின்.

ஆசிரியவிருத்தம்

நாவலோ ரிறந்தா ரென்றசொற் கேட்டு
நாங்கள்மெய்ம் மறந்தழு தேபின்
ஆவலாய்ச் சடங்கண் டாறுவ மெனவந்
தடுத்தபோ தருமவு னத்தே
தீவிர தரமா மலர்ச்சியோ டிருந்து
தேரினிற் றெருச்சென்று சற்றே
தாவிலாச் சடத்தை மறைத்தனே யையா
தளர்ந்தனம் வெளிப்படு குருவே.

நாவலி பொறுத்த நற்குண மலேயே
நாடெலாம் புகழ்ந்துநின் றேத்தும்
தேவனே சிவநூற் பொருள்களேத் தேற்றித்
தெட்சிணு மூர்த்தியா யமர்ந்த

காவல னேயுன் கருணையைப் பிரிந்து
கடையரே மிவ்வுடம் புடனே
சாவதில் லாம விருக்கலேங் கண்டாய்
சற்றுவா நமதுசற் குருவே.

புத்தகத் தாலும் பூரண வொளியாம்
போதமார் பிரசங்கத் தாலும்
இத்தரை யுள்ளா ரெம்முட னறிய
இலங்குகண் டிகைதிரு நீறும்
உத்தம சிவசின் னங்களி னுண்மை
உயர்சைவ மார்க்கத்தி னுண்மை
வித்தகத் திருவாய் மலர்ந்தருள் புனிதா
விட்டதென் னெம்மைச்சற் குருவே.

யார்பிறந் திருந்து மெதைப்படித் துஞ்சீ
ரெவ்வர செந்நிதி படைத்தும்
தேர்பிர போதஞ் செப்பினுங் கொள்ளாச்
சீரிலேம் மனங்கொண்டு தேற
மார்பினிற் றிருவைத் தோன்றெழுஞ் சிவனே
வையகம் யாவுக்குங் கடவுள்
நேர்பிற ரிலேயென் றுரைத்துப்பின் னெம்மை
நீக்கிய தறமதோ குருவே.

பணச்செருக் காலும் பிறசெருக் காலும்
பாதகர் சிலர்பொய்த்த மதங்கள்
இணக்கியிவ் விந்து தேசத்திற் பரப்பி
எம்மனோர் தமைவஞ்சி யாமல்
கணக்கறு பகைகள் வரவுமெண் ணுது
களைந்தவை தஞ்சமாய் நின்முய்
தணப்பறு திடத்தா ரெவரையத் தகையாத்
தங்கவைத் தேகினே குருவே.

மண்ணையும் வேண்டேம் பொன்னையும் வேண்டேம்
மற்றைய பொருளையும் வேண்டேம்
விண்ணையும் வேண்டேம் வேறிடம் வேண்டேம்
விளம்பர சாதிய வேண்டேம்

தண்ணளித் திருவாய் மொழியமிர் தத்தைத்
தரும்படி வேண்டினந் தந்தால்
அண்ணலே பிழைப்பே மின்றெனி லுலேவோ
மையகோ வையகோ குருவே.

நால்வகைச் சாதி விருத்தர்நற் றருணர்
நண்ணிக்கீ ழிருந்துகேட் டடங்க
நால்வகைப் பாதத் துள்ளும்வேண் டியதை
நலம்பெற மேலிருந் தருளி
நால்வகைச் சொல்லாஞ் செந்தமிழ் நெறியே
நாவலி யுடனுரைத் தருளி
நால்வகை யாமாச் சிரமநாட் டியதை
நமக்கியா ரினிச்செய்வார் குருவே.

உள்ளுறுந் துறவர்ச் சனேசெப தியான
வுண்மையா ரொருமரக் கலத்தால்
அள்ளலங் கொடிய வினேக்கடல் கடந்தின்
படைந்திற வாதிறந் தாயைத்
தெள்ளுபட் டணத்தெம் மடிகள்முன் னறந்தா
னென்றிடுஞ் செய்யுளிற் புகழ்ந்தான்
தள்ளரும் புலவ ரின்றென்ன செய்வார்
சாற்றுவாய் மலர்ந்தெங்கள் குருவே.

கண்ணினுண் மணியே கருதரு மறிவே
கருத்திருட் டெறுஞ்சுட ரேநாம்
மண்ணினிற் காத்த தந்தைதாய் பிரிய
மாய்ந்திடுஞ் சிறுமகார் போலத்
திண்ணமா முன்னேத் தேடிக்கா ணுது
தேம்பியே புலம்பவுஞ் சிவனும்
பண்ணவன் போல வெங்குநின் றும்வாய்
பகர்ந்திடாய் ஞாயமோ குருவே.

நீறுருத் திராக்கம் மந்திரம் பூசை
நித்திய கருமமா கமங்கள்
ஆறுள தீக்கை மறையருட் பாக்க
ளறமிலக் கியவிலக் கணங்க

ளேறிய தர்க்க மாதிய வெல்லா
மிசைசிவ தர்மிணி தீட்சைப்
பேறிய னின்னே டொளித்திடா வண்ணம்
பெருவர முவந்துதா குருவே.

துன்பெலாஞ் சகித்துச் சோதிசேர் போதஞ்
சொல்லுவா ரீங்கிலை யெம்போல்
அன்பரே யாமு மினிச்சொலோ மெனமுன்
னறைந்தனை பின்னுடல் விடுநாள்
இன்படை யருட்பா வோதுவா ரோய
இம்மெனுங் குறிப்பிற்கை காட்டிப்
பின்புமோ தச்செய் துடனகன் ருயிப்
பெருங்குறிப் பறிந்திலேங் குருவே.

கலித்துறை

செந்தமி ழாரிய மாம்பல பாஷையிற் சேர்ந்திருந்து
நந்து மகில பொருளையும் வாரியிந் நாட்டகத்தோர்
உய்ந்திடக்காட்டியடக்கிய நாவில்வல்லோர்மண்டையைச்
சிந்தவை யோவெரித் தாயோ சிவந்த சிவாக்கினியே.

பார்க்கும் பதிபசு பாசமெய்ஞ் ஞானத்தைப் பண்புடையார்
யார்க்கும் பெறப்புத் தகமாக்கி யீந்துள் யமனடுங்கி
வேர்க்கும் படியுற்ற நாவலர் வாழ்தின வேலைதனைத்
தூர்க்கும் வகையெங்கு கற்றனை யோசிவ சூரியனே.

---

சுன்னுகம் :

ம. ா. ா. ஸ்ரீ

## அ. குமாரசுவாமிப்பிள்ளை

### வெண்பா

செல்லும் பிரமாதி தேண்மதிமு வேழுபுகர்
புல்லபர சத்தமியிற் போந்தமகம் — நல்லதமிழ்ப்
பாவலராற் பாடப் படும்புகழா றுமுக
நாவலன்மோக் கத்தடைந்த நாள்.

### கலிவெண்பா

பூமாது வாழ்வுசெய்யும் பொன்னகர மென்னுநல்லைச்
சீமான் சிவன்பாதஞ் சிந்தைசெய்யுங் — கோமான்

சகம்புகழுங் கந்தவே டன்னிடத்தில் முந்திச்
சுகம்பெறுமவ் வள்ளுவனுர் சொன்ன — மகன்றந்தைக்

காற்று முதவி யருமைத் திருக்குறளுக்
கேற்ற விலக்கியமா விங்குதித்துச் — சாற்றரிய

திண்மை பெறுஞ்சைவ சித்தாந்த சாகரத்தின்
றண்மை நலம்பருகிச் சைவமெனும் — உண்மையுள

செஞ்சாலி யோங்கச் சிறந்தபிர சங்கமழை
அஞ்சாது பெய்யும் அருண்முகிலே — மஞ்சாருஞ்

சோலைப் பெருங்காழித் தோன்றறிரு நாவலர்கோன்
வேலை யிடைக்கல்லின் மிதந்துவந்தோன் — சீலமிக்க

வாதவூர் வந்தவன்றே வாரதிரு வாசகங்கள்
ஓதிச் சிவபெருமா ஞெண்கழற்செம் — போதைநினைந்

துள்ளநெக்கு நெக்குருக வோட்டந் துடிதுடிப்பக்
கொள்ள வுடம்பு குறுவேர்வை — வெள்ளமெனக்

கண்ணீர் சொரியமயிர்க் கால்சிலிர்ப்ப மெய்ந்நடுங்க
எண்ணுத் தழுதழுப்ப இன்பவெள்ளத் — துண்ணுடும்

ஆனந்த முற்றே யயர்த்துப் பரவசமாய்
மோனச் சிவநூன் முறைப்படியே — ஞானமுறச்

செய்யுஞ் சிவபூசைச் செல்வா சிறியேனுக்
குய்யு நெறிகாட்டு முத்தமனே — துய்யதமிழ்ப்

பாடை யிலக்கியமும் பன்னு மிலக்கணமும்
தோடமறக் கற்றுணர்ந்த தோன்றலே — பீடுபெறும்

பன்னூற் கடல்கடைந்து பாலர்பெற வின்னமுதச்
சொன்னடி நல்வசன சூத்திரமாச் — சின்னளில்

இத்தரையில் யாவர்செய்வா ரென்னப் பலப்பலவாம்
புத்தகங்கள் செய்தருளும் புண்ணியனே — பத்தியினர்

பாவந் தொலைத்தருளும் பஞ்சாக் கரவிசிட்டம்
ஆவ லொடும்பேசும் ஆறுமுக — நாவலனே

ஆற்றகில்லே னாற்றகில்லே னந்தோ நினதுபிரி
வாற்றகில்லேனாற்றகில்லேனார்க்குரைப்பேன்—சீற்றமுடன்

வந்த விடப்பனவன் வார்த்தைக் கொடுஞ்சரத்தால்
நொந்தேற் கிரங்கியரு ளேக்கதனைத் — தந்தவனே

கூறும் பரசமய கோளரியே மெய்யுணர்ச்சி
தேறு நினதருமை சிந்திக்குந் — தோறுமெல்லாம்

என்னை யயர்த்தே னெம்பெருமா னின்பெருமை
தன்னைப் பெருஞ்சேடன் றானிருந்து — பன்னாளாப்

பேசுகினு முற்றுப் பெறுமோ பெருந்தகையே
ஈசன் பெருங்கருணை இப்படியோ — பேசியென்ன

கண்ணே யெனதிரண்டு கண்மணியே நாவலனே
மண்ணுதி யாமுடம்பு மாய்ந்தாலும் — எண்ணருன்

கீர்த்தி யுடம்பு கெடுமோ கிளக்குமுண்மை
வார்த்தை யரிச்சந்த்ர மன்னவனே — போர்த்தவிருள்

நீக்குங் கிரிவிளக்கே னின்னினெமக் கோர்குரவர்
வாய்க்குநா ளெந்நாளோ மற்று.

### கலித்துறை

கல்விக் களஞ்சியங் கற்றவர்க் கேறு கருணைவள்ளல்
சொல்வித்து வப்பிர சாரகன் பூதி துலங்குமெய்யன்
நல்லைப் பதியின னாறு முகப்பெரு நாவலனுந்
தில்லைப் பதியின் நடராசன் சேவடி சேர்ந்தனனே,

## முன்மடக்குப் பின்முடுகு வெண்பா

சைவப்ர காசனர்கள் தம்வா யினிதடக்குஞ்
சைவப்ர காசவித்யா சாலைமன்ன — னுய்வடைந்தா
னர்க்கனக் கினிக்கணத்த னத்தமுத்த மிக்கருளும்
பர்க்கனக்க னக்கன் பதத்து.

## பின்முடுகு வெண்பா

என்கடிதம் என்கவிதை யார்க்கும் இனிதென்று
நன்குறவே பாராட்டு நாவலனுர் — எங்கேயோ
கங்கைமுடிச் சங்கரன்பொற் கஞ்சமலர்ச் செஞ்சரண்விட்
டிங்குவர வுங்கருத்தோ என்.

## வினுவுத்தர வெண்பா

ஐந்தின்பின் னுவதென்ன வானனத்தின் பேரென்ன
முந்து நடுவின் மொழியென்ன — விந்திரற்கு
மாறுகொண்டோன் பேரென்ன வாக்கின் மிகவல்ல
வாறுமுக நாவலனே யாம்.

---

ஊரெழு :
ம. ா. ா. ஸ்ரீ
சைவ உதயபானு பத்திராதிபர்
**சு. சரவணமுத்துப்பிள்ளை**

## ஆசிரிய விருத்தம்

அருமறையா கமமுறைக ளுலகி லோங்க
வடியனுளத் தஞ்ஞான திமிர நீங்கப்
பெருமையொடு தவவிரத முலகோர் தாங்கப்
பீடில்பர சமயகுழா மிரிந்தே யேங்க
வொருமையொடு நல்லைநக ருதித்தே வந்த
வுத்தமநல் லாறுமுகப் பெம்மா னேநின்
னிருமைபெறு திருவாக்கி னருமை தன்னை
யின்பமுடன் கேட்பதினி யெந்த நாளே.

சிவம்பழுத்த செழுஞ்சுவையே தேனே பாகே
தெவிட்டாத தெள்ளமிர்தத் திரளே மேலாந்
தவம்பழுத்த தனிவடிவே திருவெண் ணீறு
தயங்குதிரு மேனியுடைக் குருவே மிக்க
வவம்பழுத்த புறச்சமய திமிர மோட்டி
யத்துவித சுத்தசித்தாந் தத்தி னுண்மை
நவம்பழுத்த பொருள்காட்டிச் சைவ நாட்டு
நாவலனே நினைக்காணு நாளெந் நாளே.

தேனூறும் வாசகமோ ராறு நூறுந்
திருக்கோவை யென்னுமகப் பொருள்சேர் செய்யு
ளூனூறு முரைத்ததிரு வாத வூரன்
நாவலர்கோன் காழியர்கோன் நல்வா கீசன்
போனீறு மைந்தெழுத்துஞ் சைவ நூலும்
புவியினிடை நனிவிளக்கும் புனிதா மேலை
வானேறும் பொழினல்லை சேரு நன்ஞ
வலப்பெருமா னினைக்காணு நாளெந் நாளே.

எத்திசையுங் கிரிதீபம் போலச் சோதி
யெறிக்குமருட் பிரகாச வள்ளா லின்ப
முத்திவழிக் குரியநெறி யிதுதா னென்றே
மூதுலகோ ருணரவது முறையே காட்டிப்
புத்தமிர்த மனையவருட் பாக்க ளோதிப்
பூசனையீசனுக்கியற்றல்பொருளாக்கொண்டோய்
நத்தமருந் தடநல்லை நகரில் வந்த
நாவலனே நினைக்காணு நாளெந் நாளே.

வேறு

செல்லூரும் புருகூதன் சேணாடு போல்விளங்குஞ்
சீர்த்தி மிக்க
நல்லூரி னவதரித்த ஞானகுரு நாவலனே
ஞால முய்ய
வெல்லாத சிவாகமத்தின் பொருளுணர்த்தும் வித்தகனே
விதுரா நின்னை
யெல்லேமு மொருங்கிழந்தே மின்னுமுனைக் காண்பதுண்டோ
வென்செய் வேமே.

### கட்டளைக்கலித்துறை

நல்லூரில் வந்திடு ஞானே தயகுரு நாவலனே
வெல்லாத கல்வியுஞ் செல்வமு மேவினை மேதினியி
லெல்லாரு மேத்திட நற்குணம் பூண்டனை யென்பதனைச்
சில்லோ ரிவண்செயுங் கல்விச் செருக்கினிற் றேர்ந்தனனே.

முன்னாளிற் கம்பன் கவிகா ளமேக முதற்புலவர்
தந்நா வலிமையைக் காட்டின ரேயன்றிச் சைவநெறி
நந்நா வலப்பெரு மானுனைப் போனனி நாட்டினரோ
விந்நா ளினும்புல வோர்திரி வார்பல ரென்பயனே.

தேனே கனியோ வெனவே சுவைக்குஞ் செழுந்தமிழிற்
ருனே தனக்கிணை யாகி யுதித்துயர் சற்குருவாய்
வானோர் புகழ்நல்லை வந்தரு ணவலன் வான்புகழை
நானே சொலவலன் சேடனுங் கூறிட நாணுவனே.

---

மல்லாகம் :

ம. ா. ா. ஸ்ரீ

## சி. செந்திநாதையர்

### வெண்பா

வன்றெண்டன் நாவலர்கோன் வாழ்வா வதுமாயம்
என்றுரைத்த தேவாரத் தின்பொருளை — நன்றியுடன்
சிந்தைசெய்தேன் நாவலனே சேர்ந்தாய்நீ என்பதனுற்
புந்திநொந்து துக்கமிக்க போது.

நன்னடைக்கைப் பத்திரிகை நாவலனே நீயனுப்ப
என்னதவஞ் செய்தேனே யானறியேன் — அன்னதனுள்
உள்ளசில வாசகங்க ளூற்றுணரும் போதெல்லாம்
வெள்ளம் பொழியும் விழி.

சுன்னைக் குமார சுவாமியிடத் தோர்கடிதம்
உன்னைக் குறித்தனுப்பி யுள்ளுவந்தேன் — அன்னதுன்பாற்
சேருமுன்னம் நாவலனே சென்ருய் சிவலோகம்
யாரும் பதைபதைக்க இங்கு.

### கட்டளைக்கலித்துறை

தேவாரம் யான்சொலக் கேட்டு மகிழ்ந்து சிரத்தையுடன்
பூவாதி கொண்டு புரிசிவ பூசைப் பொலிவழகும்
பாவாணர் மெச்சச் செயும்பிர சங்கமும் பார்த்தினிநான்
நாவார வாழ்த்திடு நாளுமுண் டோநல்லை நாவலனே.

---

கொக்குவில் :

ம. ா. ா. ஸ்ரீ

## ச. சபாரத்தினப்பிள்ளை

### கலித்துறை

நாமக ளுவிற் றுயிலுகை யாலலர் நான்முகனுய்த்
தேமரை மாதிடஞ் சேர்தலி னுற்றிரு மாயவனுய்
மாமறை ஆகம போதனை ஊட்டலின் மாணரனுய்ப்
பூமிசை மேவிய நாவல பூபதி போயினரே.

### விருத்தம்

சிவசமய கமலமதைத் தமிழ்நாடாந்
திருமடுவிற் செறித்த லர்த்திப்
பவமயறந் தாங்கணுற்ற பரசமய
விருள்கடமைப் பதற வோட்டித்
தவநெறியாந் தேரினிடைத் தினியூர்ந்து
தற்பரனு மாழி சார்ந்தான்
அவமகல வுலகுபெறு மாறுமுக
நாவலனு மனலி யோனே.

---

திருநெல்வேலி :

ம. ா. ா. ஸ்ரீ

## க. வேலுப்பிள்ளை

### வெண்பா

ஏறுபிர மாதிதனி னெய்துபுகழ்க் கார்த்திகையிற்
கூறபர சத்தமியாங் கோதிறிதி — வீறுமக
மாறுமுக நாவலனஞ் செல்வ மகிலகுரு
வீறுதிரு மேனியுறு மின்று.

### கலித்துறை

உதித்தாய் திகழ்நல்லை கற்றுயெந் நூலு முலகமெங்கும்
விதித்தாய் பரம பதிசிவ னேயென வேறுமதஞ்
சதித்தாய்பின் னுறு முகநா வலசற் குருமணிநீ
கதித்தாய் பரம பதமடி யேமென்று காண்குவமே.

உருவுடம் பாறு முகநா வலன்விடுத் தோங்குமுத்தி
மருவுடம் பாக்கொண்ட வாவென்ப ராவென்பர் மற்றறியா
ரருவுடம் பாகி யொருநோயு மற்ற வவன்புகழாந்
திருவுடம் பானது நீடூழி காலந் திகழ்ந்திடுமே.

### விருத்தம்

திருவாளன் திருவெழுத்தைந் திடையறு தொலிக்குமெழிற்
றிருவாக் குஞ்சற்
குருபாதங் கருதுளமும் விபூதியொளி தயங்குதிரு
மேனி யுஞ்சொற்
பொருளாழுந் திராவிடநின் மலமறைகொ டிருக்கரமும்
பொலிந்த நல்லை
யருளாள னுறுமுக நாவலனெங் குருபரனுக்
கடிமை செய்வாம்.

தற்காலஞ் சென்னையி லெழுந்தருளியிருக்கின்ற

ஸ்ரீமத்

**திருநெல்வேலித் தண்டபாணிசுவாமிகள்**

ஸ்ரீலஸ்ரீ

**ஆறுமுகநாவலரவர்கள்**

அடைந்தமையைக் கேள்வியுற்று

ஆராமை மிகுதியினாலே

சிவபெருமானை நோக்கி அருளிச்செய்த

## பதிகம்

நேரிசை வெண்பா

அன்பர்களுக் காதரமா மாறுமுக நாவலனைத்
தன்பதத்திற் சேர்த்தசிவ சங்கரன்பால்—வன்பர்களை
வெல்லாமுன் பூதலத்தை விட்டுவரச் செய்தவிதஞ்
சொல்லாயென் பார்நந் துணை.

கலிப்பாக்கள்

சொல்லூக மின்றியிகழ் துட்டமதப் புட்கடமை
வல்லூறு போலடக்கும் வன்மையுறு நாவலனை
நல்லூரில் வையாதிந் நாளேநின் பாலழைத்தாய்
பல்லூழி கண்டோர் பரவும் பரசிவமே.

பங்க மலியுநெறிப் பாழிமத யானைகட்கோர்
சிங்க மெனவே சிறந்தபுகழ் நாவலனை
யங்க ணிலத்தன்ப ரழவேனின் பாலழைத்தாய்
செங்க ணெடுமாலைச் சினவிடையாக் கொள்சிவமே.

புண்கா தலித்தருந்தும் பூரியரெல் லாநடுங்க
வண்கார் முகிலெனவே வாய்திறக்கு நாவலனைத்
தண்கார் கடற்பார் தயங்கநின்பா லேனழைத்தாய்
எண்காற் பெரும்பறவை யென்னுமுருக் கொள்சிவமே.

சைவ சமயத் தனிக்கொடிபோற் றூரணியின்
மெய்வழக்கே நாளும் விளக்கியதோர் நாவலனைப்
பொய்வகுக்கும் பாழ்நெறிகள் பொன்றுமு னேனழைத்தா
யைவர்களு மாயவர்க்கோ ராதரமு மாஞ்சிவமே.

ஈழமுதற் றென்னு டிருண்மூழ்கிப் போகாமல்
வாழவைத்த சைவ மருந்தாய நாவலனைக்
கூழனையா ரேங்கநின்பாற் கூட்டியவா றென்னேயோ
வாழமுந்நீர் நஞ்சுண் டழியா தவிர்சிவமே.

செய்யதமிழ் மூன்றுந் திறனழிந்து போகாமல்
வைய மிசைவிளக்கும் வாய்மையுறு நாவலனைத்
துய்ய மனத்தொண்டர் துணுக்கமுற வேனழைத்தாய்
மையணிந்த கண்ணியொடு மால்விடையூ ருஞ்சிவமே.

அன்று வடலூ ரருந்தமிழ்ப்பா வல்லானைக்
கொன்றுவிட்ட நீதிக் குறையொன்றும் போதாதோ
வின்றுநல்லூர் நாவலவ ரேற்றினையு மேனழித்தா
யொன்றுபட்ட நெஞ்ச ருணர்ந்தேத்து மொண்சிவமே.

வில்லடிக்கு வாளி விரைந்தளிக்கை மெய்யென்று
னல்லபுக ழோங்குநல்லூர் நாவலனை நானிலத்தோர்
அல்லலொழிந் தின்புறுமு னங்கழைத்த னீதிகொலோ
புல்லறிஞர் தேறாப் பொருளாம் புகழ்ச்சிவமே.

கள்ளைநிகர் சொல்லாற் கருத்துருக்குங் கன்னியர்மால்
எள்ளையொத்துந் தோயா திலங்குபுகழ் நாவலனைக்
கொள்ளையருணல்கியொன் ஞர்குன் றவைத்துப்பார்த்திலையே
பிள்ளை யிரண்டுபெற்றும் பேயுடனு டுஞ்சிவமே.

நால்வரனை யாதெனொருவ ஞனிலத்திற் றோன்றுதலாற்
பால்வனநீ டோங்கப் பசுவாழ வேண்டுமென்றுன்
கால்வணங்கு நாவலனைக் காண்பதன்மு னேனழைத்தாய்
சேல்வளநீர்த் தில்லைச் சிதம்பரத்தில் வாழ்சிவமே.

ஆறுமுக நாவலனை யைந்தாங் குரவனருட்
பேறுகண்டு துள்ளாமுன் பெற்றமுடை யானழைத்த
றேறும் விதத்தாற் றிருப்புகழோன் செப்புமிவை
கூறு மவர்பலருங் கூற்றன்வழக் கெய்தாரே.

ஸ்ரீலஸ்ரீ

**நாவலரவர்களுடைய**

மருகரும், மாணுக்கரும்

வித்துவசிரோமணியுமாகிய

ஸ்ரீமத்

## ச. பொன்னம்பலபிள்ளை

### நிலைமண்டில ஆசிரியப்பா

திருமகள் கொழுநன் கருமனத் தழுக்கா
லருணனி கருதா தகந்தை மேவி
யெருத்தத் திலங்கு பருத்த மருப்பும்
பணைத்துக் குறுத்த தரத்த தாளு
நிமிர்ந்து குவிந்து நீண்ட நாசியுங்
குன்றிக் கண்ணு நீல மேனியும்
பொலிந்த கேழற் பொலனுரு வெடுத்துப்
பாதலந் துரீஇக் காணுப் பாதமும்
புண்டரி கத்துறை யண்டப் புத்தேள்
சிறுகணு மங்குச முறழுந் துண்டமு
மாதிர மளக்குந் தாவில் சிறையும்
புயங்க மெட்டுந் தியங்கிக் கலங்கக்
கொளுவிக் கிழிக்கு முகிரார் தாளும்
பொருப்பினைப் பொரீஇத் தருக்கு மேனியுங்
குலவுபுண் டரமா யிலகு சேண்போ
யண்ட ரண்ட மளந்துங் காணுக்
கூவிள மறுகு கொன்றை தும்பை
மாவிணர் மத்தம் வதிமதி முடியு
முடைய சங்கர ஞெண்மல ரடியை
யகத்தி லிருத்தி யருச்சனை புரிந்தோய்
தெய்வ விரதனுந் துய்ய னேய்க்கு
நயிட்டிகப் பிரம சாரிநீ யெனினுந்
தகவெ னரிவையை யிதமுறத் தழீஇப்
பல்லுயிர்க் கருளாஞ் செல்வனைத் தந்தே
சிவனடி யவரா மவமில் விருந்தைப்

புறந்தந் திடலாற் சிறந்த வறிஞ
ரில்லறத் தோன்மற் றிவனெனக் குழீஇச்
சொல்லி வழுத்த மல்கு தூயோய்
எம்பந்த மறுக்குஞ் சம்பந்த நாமனு
மாலமர் கடவுளா மால்விடை யோனை
யைங்கதிப் பரியிற் றங்குவித் தோனு
மிடங்கர் வாயி லடங்கு மறையோ
னுபவீத மன்ற லுறவிதித் தோனு
மும்மதக் களிறு தன்னைவந் திக்கப்
பரனை வந்தித்த வுரனுர் சீலனு
மொருவடி வெடுத்தென வருளொடு பொலிந்தோய்
கொடுங்கோ லில்லாக் கடுங்கோன் வழுதியா
னடைபெற் றுலவிய கடையிற் காட்சித்
தலைச்சங் கத்துக் கலைப்புல வோராந்
திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளுங்
குன்ற மெறிந்த குமரநா யகனுஞ்
சந்தனப் பொதியச் செந்தமி ழோனு
மதித்த புலமை கதித்த மேன்மையோய்
ஐந்தை யடக்கி யாறை வென்றே
யொன்றை யுறவுணர்ந் தேழை யொருவினேய்
இலங்கையிற் கொடுங்கோல் கலங்கா தோச்சுபு
மறங்கள் வளர்த்த பறங்கி மன்னர்
குடியா யுள்ளோ ரிறையா வொவ்வோ
ரான்கன் றன்பா யாமுண வளித்தல்
வேண்டுமென் றிசைத்த வெம்பணி மறும
னுடொறுங் கொடுத்தல் கண்டுள நைந்தே
யிப்பவ வரசர்தேத் திருத்தலுங் கொடிதெனுத்
திருநெல் வேலியாந் தனதூர் நீங்கி
யுத்தம திசையெனு முதக்கிற் பொலியுங்
கவுட தேசம் விதியி னடையூஉ
வாரிய மாகும் பாரிய பரவை
வறழப் பருகிப் பிறழ்கரு முகிலா
மகத்துற வுடனே புறத்துற வடைந்த
வரத ஞானப் பிரகாச வள்ளல்

பிறந்தை யுற்ற வறங்கெழு மரபோய்
அடியவ ருளத்திற் குடியா யிருத்தலி
னிதமயல் விளக்கு மதன்மத னீக்கலி
ஞணவ மாயை கன்ம மெனப்படு
மும்மதின் ஞான முழுத்தழ னகையாற்
பொடிபட் டொழிய வடல்புரி மேன்மையின்
வாதனை புரியும் பூதனைக் கடியுயிர்
பாலொடு பருகிய நீனிற மாயோன்
செங்கருங் கரங்களிற் சீர்செறி யுங்கர
மொன்ரு லிருகுவ டன்றேந் தியதென
வுந்தியொழுக் கேந்திய நிந்தையி லம்மச்
சங்கரி தனையொர் பங்கினில் வைத்த
நிர்க்குண நின்மல நித்தியா னந்த
தற்பர ஞஞ்சிவ சம்பு நிகர்த்தோய்
அரனடி யவரி னதிக ஞதலிற்
செறிதுயி லறச்செறுத் தறிதுயி லமர்தலிற்
றிருமக டழுவிக் கருமை மேவலி
னுலகளந் துண்ட வொருவ ஞெத்தோய்
நாமகள் காமுறு கோமக ஞதலின்
வேத வியலை விளங்க விரித்தலிற்
போத வியலார் வேதன் போன்ருேய்
தொல்காப் பியஞ் மொல்காப் புகழுறு
முனிவர னருளிய துனியி னடைசேர்
மகன்வினை கிளப்பின் முதனிலை யியற்றே
யெனுஞ்சூத் திரவிதி யியைவினை யிகந்தே
யுட்டெளி வுடைய பட்டணத் தடிகள்போ
லன்னையை யடிபணிந் தாதரித் திட்டோய்
தென்கோவை யென்னுஞ் சீரார் நகர்வாழ்
மேழிக் கொடியோர் வாழ்விற் குலாவ
வவதரித் திட்ட வருந்தமிழ்க் கவிஞஞ
மாஞ வியல்பிற் சேஞதி ராய
முதலியு மவன்பாற் கலையெலாங் கற்று
மதியாக் கலைஞக் குதிநவ் விகட்கோர்
புனப்புலிப் போத்தா மனப்புலி முதலி

பெற்றிடு பெற்றி யுற்றிடு சீர்த்திச்
சரவண முத்து முதலியாம் புலவனுந்
தேடிய பல்புக ழானவை யடைய
வின்னுநிற் பனவிப் பெருமன் புகழைப்
பொலம்பெறத் தழீஇய நலங்கொள்பே ருலெனச்
சொற்பயில் பண்டிதர் மெச்சு சீர்த்தியோய்
செந்நாப் புலவராஞ் சீர்சான் மணிக
ளோவ லின்றி யுறுமா கரமுந்
தென்மொழி யதனிற் றுன்னிய வணிசே
ரிரகுவம் மிசப்பெய ரியையிலக் கியத்தைத்
துரிசற வியற்றி வரிசை படைத்த
வரசகே சரியாம் புரையில்மே தையற்குச்
சேட்ட னுய வாட்டமில் கவிகைப்
பரராச சேகர னென்னும் பற்றூர்
பணியு மரசற் கணிகொ ணகரமு
மாகிய நல்லையாம் பேரிய நகருறை
சத்திய வுத்தம வித்தக வேளாண்
குலதீ பம்மென நிலவிய கந்தவே
ளரிதிற் புரிந்த கரிசக னேன்பால்
வானோர் போற்று கான்முளை யாகி
யாறு முகனெனும் பெயரா தரித்த
பரம குரவ வரமிகு நிலைய
பாரினைத் தாங்கு பணுடவி பொறுத்த
சேடன் றுதிக்க வேலாச் சீர்த்திய
பத்தரைத் தாங்கு மெய்ப்பில்கா ருண்ணிய
சிந்தா மணியே நந்தா விளக்கே
கண்ணே கருத்தே யெண்ணே யமிர்தே
யுயிருக் குயிரே யுலவா வொளியே
பசுப்தி மதத்தை வசுமதி நிறுவி
யவனருள் வேதா கமங்களி னரும்பொரு
ளேர்ஙழயே மையந் திரிபற் றுணர
வினிதிற் றிரட்டி யியம்பு மெந்தாய்
யாமெலாம்,
நின்னடி யேமென வுன்னப் பெறினும்
பணிகரி குயிலென் றணிபெறு மூன்றையும்

புற்றிற் கானின் மாவிற் புகுத்திய
சிற்றிடைப் பணைமுலைத் தேமொழி மடவார்
கண்ணெனுங் காலவே லெண்ணி னுழைய
நெஞ்ச மழிந்த நிலைய மாகிப்
பாடி காவலிற் பட்டுழன் றிட்டனம்
அதனால்,
எமைநீ யிகத்த லமைவுடைத் தாயினு
மன்னையை யத்தனை மன்னிய வொக்கலைப்
பொருளெனக் கொளாதுன் கழலே பேணி
நின்னடித் தொண்டே மன்ன நிகழ்த்திய
சதாசிவ னுகுந் தரஞ்செறி தொழும்பனை
யொளிகொ டிருவுளத் துள்ளா திகந்தே
யாயிரத் தெண்ணூற் றிரண்டென வறையுஞ்
சாலி வாகன சகவற் சரநிகழ்
தரமார் கின்ற பிரமாதி வருடத்
தெறுக்கான் மதியிரு பத்தொரு தேதிசேர்
களங்க மில்லாப் பளிங்கின் வாரமு
மபர பக்கத் தமைசத் தமியும்
வடுவறு சிறப்பிற் கொடுநுக நாளு
மட்கி லொளிசேர் விட்கம்ப யோகமு
நிலைஇயிய மேன்மை யுலவா வேல்வையி
லவனே தானே யாகி யரனடி
நீழலி னித்தியா னந்தம் பெறீஇச்
செம்மாந் திருத்தல் சீரோ வுனக்கே.

வெண்கலிப்பா

தூயநல்லைத் திருநகரிற் றுளக்கமற வவதரித்து
மாயவல்லற் பரசமய மடியவருள் நனிபுரியூஉச்
சங்கரனு ரருட்சமயந் தழைக்கவொளிர் பிரசங்க
மிங்கெமக்கீந் தருள்குருவா மெழிலாறு முகவாநின்
னருள்விழியுந் திருநீற்றி னழகாரு முகமதியுங்
கருமலத்தை யறப்பாற்றுங் கமலச்செஞ் சீறடியு
நினையாமன் மகளிரல்கு னிரயத்தி லமிழ்ந்தினம்யா
மினையமய லேகுவதெப் போது.

### வெண்பா

செஞ்சடையன் வெண்ணீற்றன் சிற்றம் பலமுதல்வன்
மஞ்சடையுங் கண்ட னடிமறவா—நெஞ்சுடைய
ஆறுமுக வையற்கே யாட்செய்யப் பெற்றனம்யாம்
வேறறங்கள் வேண்டா வெமக்கு.

சங்கேந்து மாற்கரிய சங்கரனைத் தன்னிதய
பங்கே ருகம்வைத்த பண்பானை — யெங்கோனை
ஆறுமுக நாவலனை யர்ச்சித் தடிபணியிற்
பாறும் பவநோய் பறிந்து.

தாடலைபோற் சங்கரனைச் சார்ந்தடங்கி நின்றிடுநின்
பாடலையா நற்பதத்தைப் பாடளியால் — ஆடலையா
ஆறுமுக நாவலசி ரத்தசிற்ப நாயடியேம்
வீறுமின்ப வீடடைதன் மெய்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாயென்ன — வான்றோர்
உரைத்த சிறப்புவகை ஞாலமலி வித்தான்
குரைத்தபுக ழாறுமுகக் கோ.

### கலித்துறை

திருவஞ் செழுத்தின் றிகழ்ச்சியெங் கேசெப கண்டியெங்கே
யுருவஞ் சிறக்க வொளிவிடு நீற்றி னுயர்ச்சியெங்கே
யருவம் படைத்த மதனுற்ற லட்ட வறுமுகனு
மொருவன் சிவமதீம் போல்யேசு மார்க்கத்தை யுன்னிடினே.

கற்றவர் பற்றுங் கனியைக் கணிப்பி லறம்புரியப்
பெற்றவர் பெற்ற பயனைப் பிறவிக் கடல்கடக்க
வுற்றவர்க் கென்று முதவுறு மோடத்தை யாறுமுக
நற்றவ வெந்தையைப் போற்றிடிற் கூற்று நடுங்கிடுமே.

அமரர்க் கரிய வமலனை யன்பர்க் கெளியவனைக்
குமரக் கடவுடன் றுதையைக் கூற்றை யுதைத்தவனைத்
தமரப் பெருஞ்சீர்ப் பதியெனச் சாதிக்குஞ் சைவமதை
யெமர்கட் கருளு மறுமுக வெந்தையை யேத்துமினே.

### சிந்தியல் வெண்பா

கூறுமின் கூறுமின் கூறுமின் கூறுமின்
வீறுலவு யாக்கை விழுமுன் னமரங்கா
ளாறுமுக வையன் புகழ்.

### தரவு கொச்சகக்கலிப்பா

மதிவளரும் பொழினல்லை வளம்பதியில் வதிந்தருளிக்
கதியுதவு மறுமுகநா வலவெந்தை கழல்பணிந்தோர்
விதியரியா மிருதேவர் வியோமம்பார் துரீஇக்காணுச்
சதியுலவு பதசிவசங் கரனுலகிற் றயங்குவரே.

### நேரசை முதலாக வந்த கட்டளைக்கலிப்பா

அத்தி மாமுலை மாதுன் கழலிணை
அன்று கண்டறி யாதவள் கண்டளி
கத்து மாவள கஞ்சரிந் தேவிழக்
காது மன்மதப் பாவியம் பாலழிந்
தெய்த்து வெம்மைய ளாகி யிரங்கிநல்
லின்ப வுண்டி வெறுத்தரன் றுளிடைப்
பத்தி யார்நல்லை யாறு முகாவறம்
பார்த்த வாவெனைப் பாரென் றலறுமே.

### ஈற்றடி மிக்குவந்த நான்கடிக் கலித்தாழிசை

பூமேவு மாம்பொழிலிற் போகுமிள மாக்குயிலே
மாமேவு வாதின்கண் வலியேசு மதமழித்த
பாமேவு சீராறு முகபரம குரவனெனுங்
கோமேவு புண்ணியன்றன் றுணிணைந்து கூவாயே
கோலநல்லை மாமுனிதாள் யான்மகிழக் கூவாயே.

---

## ஸ்ரீலஸ்ரீ நாவலரவர்களால்

அச்சிற் பதிப்பித்து
வெளிப்படுத்தப்பட்ட

## புத்தகங்கள்

சூடாமணி நிகண்டுரை
சௌந்தரியலகரியுரை
முதற் பாலபாடம்
இரண்டாம் பாலபாடம்
பெரியபுராண வசனம்
நன்னூல் விருத்தியுரை
திருமுருகாற்றுப்படையுரை
திருச்செந்தினிரோட்டக யமகவந்தாதியுரை
சிவாலயதரிசனவிதி
சைவ தூஷண பரிகாரம்
குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்
கந்தரலங்காரம்
கந்தரனுபூதி
ஏரெழுபது
திருக்கைவழக்கம்
புட்பவிதி
மறைசையந்தாதி
கோயிற்புராணமூலம்
திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி
சிதம்பர மும்மணிக் கோவை
உபநிடதவுரை
பட்டணத்துப்பிள்ளையார் பாடல்
அருணகிரிநாதர் வகுப்பு
சைவவினவிடை முதற்புத்தகம்
மருதூரந்தாதியுரை
திருச்செந்தூரகவல்

விநாயக கவசம்
சிவகவசம்
சத்திகவசம்
திருவள்ளுவர்பரிமேலழகருரை
திருச்சிற்றம்பலக் கோவையுரை
சேதுபுராணம்
பிரயோகவிவேகவுரை
தருக்கசங்கிரகம்
உபமானசங்கிரகம்
இரத்தினச்சுருக்கம்
இலக்கணக்கொத்து
தொல்காப்பியச் சூத்திரவிருத்தி
இலக்கணவிளக்கச் சூறாவளி
கந்தபுராணம்
பதினொராந் திருமுறை
மூன்றாம் பாலபாடம்
நால்வர் நான்மணிமாலை
கோயிற்புராணவுரை
சைவசமயநெறியுரை
தொல்காப்பியச் சொல்லதிகாரஞ் சேனாவரையருரை
இலக்கணச்சுருக்கம்
சைவவினவிடை இரண்டாம் புத்தகம்
யாழ்ப்பாணச் சமயநிலை
இலக்கணவினவிடை இரண்டாம் புத்தகம்
இலங்கைப் பூமிசாத்திரம்
நன்னூற்காண்டிகையுரை
சிதம்பரமான்மியம்

சிறிதுபாகம்
அச்சிற் பதிப்பிக்கப்பட்டு
சிறிதுபாகம்

## வேலை நடத்தப்படாதிருப்பவைகள்

பெரியபுராண சூசனம்
கந்தபுராண வசனம்
திருவிளையாடற் புராண வசனம்

---

அச்சிற் பதிப்பிக்கும்பொருட்டு

## எழுதி முடிந்தவைகள்

திருவிளையாடற் புராணம்
சிவராத்திரி புராணம்
சிவஞானபோதச் சிற்றுரை
குருசிஷ்யக்கிரமம்
நன்னூல் விருத்தியுரை 2 - ம் பதிப்பு
நைடதவுரை

---

அச்சிற் பதிப்பிக்கும்பொருட்டு

## எழுதத் தொடங்கியவைகள்

தேவாரம்
அகராதி (தமிழ்)
அகராதி (சம்ஸ்கிருதம் தமிழ்)
அகராதி (இங்கிலிஷ் தமிழ்)
தருக்க பரிபாஷை
இரகுவம்சம்
உபதேசகாண்டம்
இலக்கண வினாவிடை முதற் புத்தகம்
சம்ஸ்கிருதவியாகரணசாரம்

---

# ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலை நூற்றாண்டு விழாச் சபை உறுப்பினர்

**தலைவர் :**

திரு. ம. ஸ்ரீகாந்தா, O. B. E., C. C. S. அவர்கள்
*(காணி, நீர்ப்பாசன, மின்விசை அமைச்சின் நிரந்தரக் காரியதரிசி)*

**உபதலைவர் :**

சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள் அவர்கள்
திருமதி இ. இ. நவரத்தினம், M. A. அவர்கள்
வித்துவான் ந. சுப்பையபிள்ளை அவர்கள்
பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள்
திரு. சிவ. உ. சோமசேகரம், M. A. அவர்கள்
திரு. சோ. இராசரத்தினம் செட்டியார் அவர்கள்

**இணைச் செயலாளர்கள் :**

வித்துவான் க. கி. நடராஜன், B. O. L. அவர்கள்
திரு. மு. வைத்தியலிங்கம் அவர்கள்

**இணைத் தனாதிகாரிகள் :**

திரு. ஆ. தன்பாலசிங்கம் அவர்கள் *(வழக்கறிஞர்)*
முதலியார் செ. முத்துத்தம்பி அவர்கள்

**உதவிச் செயலாளர் :**

திரு. சி. சிவரத்தினம் அவர்கள்